# ஈரோடு மாவட்ட வரலாறு

ஆசிரியர்

புலவர் **செ. இராசு** எம்.ஏ., பிஎச்.டி.,

முன்னாள் தலைவர்

கல்வெட்டு - தொல்லியல் துறை

தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

*வெளியீடு*

**கொங்கு ஆய்வு மையம்**

64/5 டி.பி.ஜி. காம்ப்ளக்ஸ்

புதிய ஆசிரியர் குடியிருப்பு அருகில்

ஈரோடு - 638 011.

# நூற்குறிப்பு

இந்நூல் ஈரோடு கட்டிட ஒப்பந்தக்காரர் திரு. **R.P. பெரியசாமி**, தென்முகம் வெள்ளோடு சாத்தந்தை குலம் இராசாசுவாமி நற்பணி மன்றத் தலைவர் திரு. **N.T. கண்ணுசாமி** ஆகியோர் பொருட்கொடையால் வெளியிடப்படுகிறது.

அவர்கட்கு எங்கள் மனமார்ந்த நன்றி உரியதாகுக.

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | **ஈரோடு மாவட்ட வரலாறு** |
| நூல் பொருள் | : | வரலாறு |
| ஆசிரியர் | : | புலவர் **செ. இராசு** எம்.ஏ., பிஎச்.டி., |
| மொழி | : | தமிழ் |
| நூல் உரிமை | : | ஆசிரியர்க்கு |
| பதிப்பு ஆண்டு | : | 2007 |
| நூலின் அளவு | : | 11 செ.மீ. X 18 செ.மீ. |
| பக்கங்கள் | : | 296 |
| அச்சு எழுத்து | : | 11 புள்ளி |
| விலை | : | ரூ.100/- |
| நூல் கிடைக்குமிடம் | : | **கொங்கு ஆய்வு மையம்**<br>64/5 டி.பி.ஜி. காம்ப்ளக்ஸ்<br>புதிய ஆசிரியர் குடியிருப்பு அருகில்<br>ஈரோடு 638 011. போன் : 0424 2262664<br>செல் : 99942 77711 |
| நூல் & அட்டை வடிவமைப்பு | : | **காயத்திரி ஆப்செட்**<br>29 நாச்சியப்பா வீதி<br>ஈரோடு - 638 001.<br>போன் : 0424-2250164 |

**த. உதயச்சந்திரன்** இ.ஆ.ப.,
மாவட்ட ஆட்சியர்,
ஈரோடு மாவட்டம்.

# அணிந்துரை

வணிக உலகில் கடும் போட்டிச் சூழலில் தன்னை நிலை நிறுத்திக் கொண்டு, தமிழகத்தையும், இந்திய நாட்டையும் தன் தொழில் முனையும் திறனால் ஒளி விடச் செய்யும் கொங்கு மண்டலம், தன் பண்பாட்டு அடையாளங்களைத் தேடிப் புறப்பட்டிருக்கிறது.

இப்பண்பாட்டுப் பயணத்தை வழிநடத்திச் செல்பவர் பெரு மதிப்பிற்குரிய புலவர் இராசு அவர்கள். அவருடைய ஆழ்ந்த அறிவு மற்றும் புலமையைக் கொண்டு படைத்திருக்கும் இந்நூல் ஈரோடு மாவட்டத்தின் பொதுமக்கள், மக்கள் பிரதிநிதிகள், ஏன் ஆராய்ச்சி மாணவர்களுக்கும் ஓர் கலங்கரை விளக்கம் மட்டுமன்று; ஒரு தகவல் தளமும் கூட.

இந்நூல் கல்வெட்டுகள் துணை கொண்டு வரலாற்று நோக்கிலும், இலக்கியச் சான்றுகள் கொண்டு ஆதாரபூர்வமானதாகவும், தொல் பழங்காலம் முதல் தமிழ் மன்னர்கள் ஆட்சிக் காலங்களினூடே கும்பினிப் படையினரின் ஆட்சி, ஆங்கிலேயரின் ஆட்சி என்று விரிந்து தற்காலம் வரை நீண்டிருக்கிறது.

ஒவ்வோர் காலகட்டத்திலும் ஆட்சிமுறை குறித்தும், சமூக வழக்கங்கள் குறித்தும், சமயங்கள் பல பரவியது குறித்தும் விளக்கமாய் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. பழங்காலப் பெருமைகளை மட்டும் பட்டியலிடாமல் தற்காலச் சாதனைகளையும் இணைத்து உரைத்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

ஈரோடு மாவட்டத்தில் கிடைத்த தொல்லுயிரி எச்சங்கள், சங்க இலக்கியங்கள் போற்றும் நொய்யல்கரை நாகரிகம், அம்மக்கள் மேற்கொண்டிருந்த கடல் கடந்த வணிகத் தொடர்புகள் யாவையும் இப்பகுதி

தமிழ்ப் பண்பாட்டின் தலைநகராகவே விளங்கியிருப்பதை நிறுவு கின்றன.

பவானியாற்றில் நீர் குளிர்ந்து பாய்வதற்குக் காரணம் சந்தன மரங்கள் மிதந்து வந்ததாகவும், பெண்கள் தங்கள் அணிகலன்களை மறந்து அல்லது தொலைத்துவிட்டால் தெளிந்த ஆற்று நீர்வழி கண்டுபிடிப்பது குறித்த செய்திகளையும் படிக்கும் பொழுது ஏக்கமே மிகுகின்றது. திப்புசுல்தான் சந்தன மரங்களை 'அரச மரங்கள்' (Royal Trees) என அறிவிக்கை செய்து பாதுகாக்க முயற்சித்தது, அவருடைய சமய நல்லிணக்க முயற்சிகள் என வரலாற்றுத் தகவல் களஞ்சியமா கவே இந்நூல் திகழ்கிறது.

மதுரை நாயக்கர் ஆட்சிக்காலத்தில் அவர்தம் ஆட்சிப் பரப்பு 72 பாளையங்களாகப் பிரிக்கப்பட்டதற்குக் காரணம் மதுரைக் கோட்டை யிலிருந்த 72 கொத்தளங்கள் என்ற செய்தி வியப்பைத்தருகிறது. மெக்காலே கல்வித் திட்டத்திற்கு முன்னதாகவே 'கலெக்டர் பள்ளி', 'தாசில்தார் பள்ளி' என அமைப்புகள் நிறுவப்பட்டதும் ஈரோடு மாவட்டத்தில் என அறியும்போது வியப்பு எல்லை மீறுகிறது.

இப்பகுதியைச் சார்ந்த வரலாற்று நாயகர்கள் அனைவரும், காலிங்கராயன், தீரன் சின்னமலை முதல் தந்தை பெரியார் வரை இந்நூலில் கம்பீரமாக வலம் வருகிறார்கள்.

பழங்காலத் தொல்லுயிரி எச்சங்களிலிருந்து, தற்காலப் பொறியியல் கல்லூரிகள் வரை விவரங்கள் அனைத்தும் அடங்கிய இத்தகவல் களஞ்சியம் இன்னும் பல ஆண்டுகளுக்கு இம்மாவட்டத்தின் பெரு மையை உலகிற்குப் பறைசாற்றிக் கொண்டிருக்கும் என உறுதியாய் நம்புகிறேன்.

நூலாசிரியர்க்கு என் வாழ்த்துக்கள்.

ஈரோடு,
07.06.2007.

அன்புடன்,
**த. உதயச்சந்திரன்**

# முன்னுரை

பண்டைய வரலாறு நமக்குப் பாடமாக அமைந்து இக்கால வாழ்வைச் செம்மைப்படுத்தி எதிர்கால நல்வாழ்விற்கு வழிகாட்டக் கூடியது. முன்னோர் வரலாற்றை அறியாத மக்கள் எதிர்கால மக்களுக்கு வழிகாட்டும் வண்ணம் வரலாற்றைப் படைக்க முடியாது. முன்னோர் நடந்த பாதை தெரிந்தால்தான் நாம் சரியான பாதையில் நடக்க முடியும். எனவே ஒரு நாட்டின் வரலாறு தொகுக்கப்படுவது இன்றியமையாதது.

ஒரு நாட்டின் வரலாற்றில் ஒவ்வொரு வட்டாரத்திற்கும் உரிய தனிப்பட்ட சிறப்புச் செய்திகள் முழுமையாக இடம்பெறுவது இயலாது. பொதுச் செய்திகளே இடம் பெற வாய்ப்புள்ளது. எனவே வட்டார வரலாறுகள், உள்ளூர் வரலாறுகள் தொகுக்கப்படுதல் மிகவும் அவசியமானதாகும். இம்முயற்சியில் உழைக்க ஆய்வாளர்கள் பலர் அண்மையில் முன்வந்திருப்பது மகிழ்ச்சிக்குரிய செயலாகும். வட்டார வரலாற்றின் முக்கியத்துவம் கருதி புதுச்சேரி பிரெஞ்சு நிறுவனத்தினர் அண்மையில் நாடு தழுவிய ஒரு பயிலரங்கம் நடத்தினர்.

சென்னை எழும்பூரில் உள்ள அரசு ஆவணக் காப்பகம் மாவட்டம்தோறும் 'விவரச் சுவடி' (District Gezetteer) வெளியிட்டுள்ளனர். வெளிவந்த நாட்டு வரலாற்று நூல் செய்திகளும், பல்வேறு அரசுத் துறைகள் அளித்த செய்திகளும் மட்டுமே அவற்றில் அடங்கியுள்ளது. அவை ஆங்கிலத்திலேயே உள்ளன. இரண்டொரு மாவட்டத்திற்கு மட்டுமே தமிழ்ப்பதிப்பு வெளிவந்துள்ளது. புதிய மாவட்டங்கள் பல ஏற்பட்டுள்ளன. அவற்றில் பெரும்பாலான மாவட்டங்களுக்கு விவரச் சுவடிகள் தொகுக்கும் பணிகள் வேகமாக நடைபெறவில்லை.

பயண எழுத்தாளர் 'சோமலெ' தொகுத்தளித்த மாவட்ட வரலாறுகள் மிகச் சிறப்புடையவை. ஆனால் அரசின் திட்டங்கள், அதன் வளர்ச்சி இவைகளுடன் அவர் பயணத்தில் கண்டு, கேட்ட நிகழ்வுகள் மட்டுமே

அவற்றில் இடம் பெற்றிருந்தன. சென்னை மணிமேகலைப் பிரசுரம் வெளியிட்ட மாவட்ட வரலாறுகளில் சுவையான பல்வேறு செய்திகள் சிறந்த முறையில் தொகுக்கப்பட்டிருந்தாலும் அவை மிகச்சுருக்கமாக வும் துணுக்குச் செய்திகளின் இணைப்பாகவே இருந்தன. இவ்விரண்டு வரிசைகளிலும் தொல்லியல், ஆவணங்கள், இலக்கியச் செய்திகள் போதுமான அளவு இடம் பெறவில்லை.

ஆனந்த விகடன் வெளியிட்ட மாவட்ட மலர்களில் வாசகர் களைக் கவரும் வண்ணம் சுவையான செய்திகள் இடம் பெற்றிருந் தாலும் தொடர் வரலாறுகளாக அவை அமையவில்லை.

தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை மாவட்டம்தோறும் வரலாற் றுக் கருத்தரங்குகள் நடத்தினர். சில தலைப்புகளே அவற்றில் இடம் பெற்றன. ஓரிரு மாவட்டக் கருத்தரங்குக் கட்டுரைகள் மட்டுமே நூல் வடிவம் பெற்றன. அவற்றிலும் வரலாறு முழுமையாக இல்லை.

தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை பல மாவட்டங்களுக்குத் தொல்லியல் கையேடுகள் வெளியிட்டுள்ளனர். சிறந்த அம்முயற் சியில் பிற வரலாற்றுச் செய்திகள் அதிகம் இடம் பெறவில்லை.

மேற்கண்ட அனைத்து முயற்சிகளிலும் ஒரு மாவட்டத்தின் பன்முக மாட்சிகளைக் கூறும் முழுமையான வரலாறு வெளிப்பட வில்லை. இக்குறையைப் போக்கும் வண்ணம் நவீன இலக்கிய உலகின் விடிவெள்ளியாகத் திகழும் சென்னை 'அம்ருதா' பதிப்பகத் தினர் அந்தந்த மாவட்டங்களைப் பற்றி ஓரளவு அறிந்த - புரிந்த - தெரிந்த அன்பர்களைக் கொண்டு மாவட்ட வரலாறுகள் தொகுக்க முன்வந்தனர். சில மாவட்ட அன்பர்கட்கு மாவட்ட வரலாறு எழுத வேண்டுகோளும் விடுத்தனர்.

'ஈரோடு மாவட்ட வரலாறு' எழுதும் பணி எனக்கு அளிக்கப் பட்டது. என் உடல்நிலை பாதிக்கப்பட்டதால் தேவையான விரிவான கள ஆய்வு மேற்கொள்ள வாய்ப்பு ஏற்படவில்லை. அதே சமயம் தகுந்த ஓய்வு கிடைத்ததால்தான் ஓரளவேனும் இப்பணியை மேற்கொள்ள

முடிந்தது. இந்நூல் தொகுக்கும் பணிக்கு மூலகாரணமாக இருந்தவர்கள் அம்ருதா பதிப்பகத்தினரும், அம்ருதா இதழின் சிறப்பாசிரியர் திருமதி. திலகவதி இ.கா.ப, அவர்களும் ஆவார்கள். அவர்கட்கு என் நெஞ் சார்ந்த நன்றி.

தென்முகம் வெள்ளோடு சாத்தந்தை குலம் இராசாசுவாமி நற்பணிமன்றம் அமைத்து ''வெள்ளோடு காணியாளர்கள் வரலாறு'' வெளியிட்டு, காலிங்கராயன் சிலை அமைத்து இராசா சுவாமி கோயில் திருப்பணிக்கும் குல ஒற்றுமைக்கும் பாடுபட்டு வரும் தலைவர் திரு. N.T. கண்ணுசாமி அவர்களும், நற்பணி மன்ற முக்கிய உறுப்பினர்களுள் ஒருவருமான ஈரோடு கட்டிட ஒப்பந்தக்காரர் திரு. R.P. பெரியசாமி அவர்களும் இந்நூலைத் தாங்களே வெளியிட வேண்டும் என விரும் பினர். என் மக்களும் குடும்பத்தினரும் 'கொங்கு ஆய்வு மையம்' பெயரில் இந்நூல் வெளியிடுவது நல்லது என்று கூறினர்.

ஒரு நாட்டு வரலாறுக்குள்ள பல கூறுகளுடன் ஈரோடு மாவட் டத்தின் இன்றியமையாச் சிறப்புச் செய்திகள் அனைத்தும் இயன்ற வரை இந்நூலில் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. கால வளர்ச்சிக்கு ஏற்ப சில செய்திகளில் குறை இருக்கலாம்; அல்லது விடுபட்டிருக்கலாம். அன்பர்கள் சுட்டிக் காட்டினால் அடுத்த பதிப்பில் அவை திருத்தம் பெறும்.

தகவல்கள் அளித்த துறைகள், அன்பர்களுக்கு மனமார்ந்த நன்றி. கள ஆய்விலும், தகவல் திரட்டுவதிலும் உடனிருந்து உதவி யவர் செவாலியர் டாக்டர் கொங்கு என். கொளந்தசாமி அவர்கள். அவர் கட்கு என் மனமார்ந்த நன்றி உரியதாகுக.

பொதுவாக என் ஆய்வில் அக்கறை செலுத்தும் என் மனைவி கௌரி, மக்கள் இரா. ஜெயப்பிரகாஷ், இரா. செந்தில்குமார், இரா. ஜெயமோகன் மற்றும் குடும்பத்தினர் 'ஈரோடு மாவட்ட வரலாறு' தொகுப்பதில் பேரார்வம் காட்டினர்.

மாவட்ட வரலாறாக இருப்பதால் மாவட்ட ஆட்சியரிடம் அணிந் துரை பெற வேண்டும் என்று விரும்பினேன். தமிழியல் ஆர்வலர், நூல்

நயம் தெரிந்தவர், தொல்லியல் - வரலாறு - இலக்கிய நாட்டம் உடையவர், ஈரோடு மாவட்ட ஆட்சியர் திரு. த. உதயச்சந்திரன் இ.ஆ.ப; அவர்கள். இந்நூலை மிகச்சிறந்த முறையில் அவர்கள் அறிமுகம் செய்து பாராட்டியிருப்பது பெருமையளிக்கிறது. அவை என் பணிகளை ஊக்கப்படுத்தும். கொங்கு மண்டலத்தின் பழமை துலக்கும் புதுமைப் படைப்புக்கள் வெளியிடப்பெறவேண்டும் எனப் பேரார்வம் கொண்டிருக்கும் அவர்களின் அணிந்துரை இந்நூலின் தோரண வாயிலாக அமைந்துள்ளது. அவர்கட்கு நெஞ்சார்ந்த நன்றி உரியதாகுக.

ஈரோடு மாவட்ட மக்களும், இளைஞர்களும், மாணவர்களும், வரலாற்றில் நாட்டமுடைய தமிழக மக்களும் இந்நூலை வரவேற்று ஆதரவளிப்பார்கள் என நம்புகிறேன்.

இந்நூலைக் குறுகிய காலத்தில் மிகச்சிறப்பாக வடிவமைத்து அச்சிட்ட ஈரோடு காயத்ரி ஆப்செட் உரிமையாளர்கட்கு என் மன மார்ந்த நன்றி உரியதாகுக.

ஈரோடு,
06.07.07.

அன்பன்
**செ. இராசு**

# பொருளடக்கம்

# 1. ஈரோடு மாவட்டம்

தொல்பொருள் சிறப்பும், வரலாற்றுப் பெருமையும், இலக்கியப் புகழும் உடைய மாவட்டம்!

உலகத் தொழில் அனைத்தும் உவந்து செய்து மாநிலத் தலைநகர் சென்னைக்கு அடுத்து ஏற்றுமதியில் ரூபாய் 10ஆயிரம் கோடியைத் தாண்டி மாநிலத்தில் இரண்டாவது இடத்தைப் பிடித்த மாவட்டம்!

தமிழ்நாட்டில் எட்டாவது பெருநகரமாக எப்பொழுதும் சுறுசுறுப் பாக, இயங்கும் ஈரோட்டைத் தன் தலைமையிடமாகக் கொண்ட மாவட்டம்!

நீர் வளமும் நில வளமும் மக்கள் மனவளமும் கொண்டு வந்தாரை அரவணைத்து வாழவைக்கும் மாவட்டம்!

அரசு ஊழியர்களும் இதர அலுவலர்களும் தொழில் முனைவோரும் தொழிலில் பணிபுரிவோரும் வணிகர்களும் வாழ்வியல் வசதிகளால் மிகவும் விரும்பிப் போற்றும் மாவட்டம்!

சுமார் 85 ஆண்டுகள் தமிழக ஆட்சி, அரசியல், சமுதாய உணர்வு ஆகியவற்றின் தொட்டிலாக விளங்கும் மாவட்டம்!

ஈரோடு மாவட்டம்!

அக்காலத்தில் செல்வம் என்று கருதப்பட்ட கால்நடை மிகுதி யாலும், பல்வேறு மணிக்கற்களால் உரோமானியரையும் கவர்ந்த செல்வப் பெருக்காலும், நீர் வளத்தாலும், நில வளத்தாலும் இரட்டரும் கங் கரும் சேரரும் சோழரும் பாண்டியரும் போசளரும் விசயநகராரும் மதுரை நாயக்கர்களும் மைசூர் உடையாரும் ஐதரும் - திப்புவும் கிழக்கிந்தியக் கம்பெனியாரும் போட்டி போட்டுக் கொண்டு தங்கள் அதிகாரத்தின் கீழ் ஈரோடு மாவட்டப் பகுதியைக் கொண்டு வர விரும்பினர்.

தமிழகத்தைப் படைகொண்டு தாக்கிப் பணிய வைக்க வந்த அத்துணை அன்னியப் படைநாயகர்களும் புகுந்த மூன்று பெருவழிகளும்

இம்மாவட்டத்தின் வடக்கு மேற்கு எல்லைகளிலேயே உள்ளன. படை யோடு வந்தவர்களும் அவர்களின் வருகையைத் தடுத்தவர்களும் நடத்திய பல்வேறு கடுமையான பெரும் போர்களினால் ஏற்பட்ட அழிவையும் கொள்ளையடிக்கப்பட்ட பெருஞ்செல்வ இழப்பையும் பெரும் துன்பத்தையும் ஈரோடு மாவட்டமே தாங்கியது.

3000 வீடுகளைக் கொண்டு முக்கிய வணிக மைய ஊரான ஈரோடு முற்றிலும் அழிக்கப்பட்டு ஆள்நடமாட்டம் இல்லாத 400 இடிந்த வீடுகளைக் கொண்டிருந்தது 1792ல்! அழிவிற்கு இது ஒரு சான்று.

மெல்ல மெல்ல உயிர் பெற்று இன்று நிமிர்ந்து வீறுநடை போடு கிறது ஈரோடு மாவட்டம். அணுகுண்டு வெடிப்பிற்குப் பின் ஜப்பான் எழுச்சி பெற்றதை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

ஈரோடு மாவட்டம் கிழக்கே சேலம், நாமக்கல், கரூர் மாவட்டங் களையும், தெற்கே திண்டுக்கல் மாவட்டத்தையும், மேற்கே கோயமுத்தூர், உதகமண்டலம் மாவட்டங்களையும், வடக்கே கருநாடக மாநிலத் தையும் எல்லைகளாகக் கொண்டு விளங்குகிறது.

8192 சதுர கிலோ மீட்டர் பரப்பளவைக் கொண்ட ஈரோடு மாவட்டம் கிழக்குத் தீர்க்க ரேகை 76-49' முதல் 77-5' வரையும் வடக்கு அட்சரேகை 10-36' முதல் 11-58' வரையும் உள்ள பரப்பளவில் அமைந்துள்ளது. இம்மாவட்டத்தின் மக்கள் தொகை 25,74,067 பேர் ஆவர். ஆடவர் 1306039 பேர்; பெண்டிர் 1268028 பேர். பெண்கள் தொகை சற்றுக் குறைவு. கல்வியறிவு உடையோர் 69.5 சதவிகிதம். மாநில சதவிகிதத்தை விடக்குறைவு. சதுர கிலோ மீட்டருக்கு 314 பேர் வாழ்வதாகப் புள்ளி விவரம் கூறுகிறது (2001).

ஈரோடு, தாராபுரம், கோபிசெட்டிபாளையம் என்ற மூன்று வரு வாய்க் கோட்டங்களையும், ஈரோடு, தாராபுரம், காங்கயம், பெருந் துறை, பவானி, கோபிசெட்டிபாளையம், சத்தியமங்கலம் ஆகிய ஏழு வருவாய் வட்டங்களையும், இருபது ஊராட்சி ஒன்றியங்களையும் நாற்பத்தேழு வட்டாரங்களையும் (பிர்க்கா), ஐநூற்று முப்பத்தொன்பது

வருவாய்க் கிராமங்களையும், 4687 குடியிருப்பு ஊர்களையும் கொண்டு விளங்குகிறது ஈரோடு மாவட்டம்.

இம்மாவட்டத்திலுள்ள நகராட்சிகள் பதினொன்று. அவை, ஈரோடு, தாராபுரம், பவானி, கோபிசெட்டிபாளையம், சத்தியமங்கலம், வெள்ளகோவில், காங்கயம், பெரிய சேமூர், வீரப்பன் சத்திரம், சூரம்பட்டி, காசிபாளையம் ஆகியவையாகும்.

பொதுவாக வெப்பநிலை அதிக அளவு 37.9°செ குறைந்த அளவு 20.0°செ ஆகும். வடக்கே வெயில் குறைவாகவும் தெற்கே செல்லச் செல்ல வெயில் அதிகமாகவும் இருக்கும். ஆண்டுக்கு சராசரி 660மி.மீட்டர் மழை பெய்யும். தென்மேற்கு பருவமழை (சூலை - செப் டம்பர்) குறைவாகவும், வடகிழக்குப் பருவமழை (அக்டோபர்-டிசம்பர்) அதிகமாகவும் இருக்கும்.

❊❊❊

# 2. மாவட்டம் உருவானது

ஈரோடு மாவட்டப் பகுதிகளின் உரிமைக்காகப் பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதிகளில் ஐதர்அலி-திப்புசுல்தான் கிழக்கிந்தியக் கும்பினி ஆகியோரிடையே பலமுறை கடும் போர்கள் நடைபெற்றன. இருதரப்பிலும் வெற்றி தோல்விகள் மாறிமாறி ஏற்பட்டன. அதனால் அலைக்கழிக்கப்பட்டது ஈரோடும், ஈரோட்டு மாவட்டப் பகுதியும் தான்.

4.5.1799ல் கன்னடத்துப் போர் வாள் விடுதலைப் போரின் முன்னோடி மாவீரன் திப்புசுல்தான் வீழ்ச்சிக்குப் பின்னர் ஈரோடு மாவட்டப் பகுதி முழுவதும் கும்பினியார் வசம் ஆனது. உடனே இப்பகுதி நொய்யலை மையமாக வைத்து இரண்டு மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டது. "நொய்யல் தெற்கு மாவட்டம்" "நொய்யல் வடக்கு மாவட்டம்" என்று பெயரிடப்பட்டன. முறையே தாராபுரமும், பவானியும் தலைநகர்களாயின. தாராபுரத்திற்கு ஹார்டிஸ் என்பவரும், பவானிக்கு மேக்ளியாட் என்பவரும் மாவட்ட ஆட்சியராக நியமிக்கப் பட்டனர். நொய்யலுக்கு வடகரையில் இருந்த காரணத்தால் கோய முத்தூர் கூட பவானி தலைநகருடன் சேர்க்கப்பட்டது. பவானியில் பெரிய கட்டிடம் ஒன்று மாவட்ட நிர்வாகத்தின் பொருட்டுக் கட்டப் பட்டது. இன்றும் அம்மாளிகை உள்ளது.

நிலங்கள் சங்கிலி கொண்டு அளக்கப்பட்டு வரிக்கு உட்படுத் தப்பட்ட நிலங்கள் தரம் வாரியாகப் பிரிக்கப்பட்டன. சேலம் மாவட்ட ஆட்சியர் ஜெனரல் ரீடு கொண்டு வந்த திட்டப்படி மாவட்ட நிர்வாகம் நடைபெற்றது. இரண்டாவது மாவட்ட ஆட்சியராகப் பவானிக்கு வில்லியம் கேரோ என்பவர் நியமிக்கப்பட்டார்.

1804ல் மாவட்டம் திருத்தி அமைக்கப்பட்டுக் கோயமுத்தூரைத் தலைநகராகக் கொண்டு மாவட்டம் அமைக்கப்பட்டது. தாலுக்காக் களும் உருவாக்கப்பட்டன. கோயமுத்தூர் மாவட்டத்தில் கோயமுத்தூர், சத்தியமங்கலம், டணாயக்கன்கோட்டை, கொள்ளேகால், பொள்ளாச்சி,

பெருந்துறை, அந்தியூர், ஈரோடு, தாராபுரம், காங்கயம், கரூர், சேவூர், பல்லடம், செங்கணாச்சேரி, நீலகிரி ஆகிய 15 தாலுக்காக்கள் அடங்கியிருந்தன.

பின்னர் சேவூர், டணாயக்கன்கோட்டை தாலுக்காக்கள் நீக்கப் பட்டன. ஈரோடு, காங்கயம், சத்தியமங்கலம் ஆகிய தாலுக்காக்கள் முறையே பெருந்துறையுடனும், தாராபுரத்துடனும், புதியதாக உருவாக்கப்பட்ட கோபிசெட்டிபாளையம் தாலுக்காவுடன் சத்திய மங்கலமும் இணைக்கப்பட்டு அவை மூன்றும் துணைத்தாலுக்கா எனப்பட்டது.

பல ஓலை ஆவணங்கள் ''கோயம்புத்தூருச் சில்லா பெருந் துறை தாலுக்காவுக்குச் சேர்ந்த ஈரோடு கிராமம்'' என்று குறிக்கின்றன. 1868ல் ஈரோடு மீண்டும் தாலுக்காவாகிப் பெருந்துறை ஈரோட்டோடு இணைக்கப்பட்டது. அந்தியூர் தாலுக்கா பவானியோடு இணைக் கப்பட்டது. பின் காலப்போக்கில் நீலகிரி தனி மாவட்டம் ஆனது. செங்கணாச்சேரி பாலக்காட்டோடு சேர்க்கப்பட்டது. கொள்ளேகால் கர்னாடக மாநிலத்திற்குச் சென்று விட்டது. கரூர் வட்டம் 1911ல் திருச்சி மாவட்டத்தோடு சேர்க்கப்படும்வரை கோயமுத்தூர் மாவட்டத் தோடு சேர்ந்திருந்தது.

1974ல் ''மாநில நிர்வாக சீர்திருத்தக்குழு'' புதிய மாவட்டங்கள் அமைப்பது பற்றிப் பல பரிந்துரைகள் செய்தது. அதன் அடிப்படையில் 8.5.1976 மற்றும் 10.12.1976 ஆகிய நாள்களில் புதுதில்லியில் கூடிய மாநிலத் தலைமைச் செயலர்கள் கூட்டத்தில் பரப்பளவு, மக்கள் தொகைக்கு ஏற்பப் புதிய மாவட்டங்கள் அமைக்க முடிவெடுக்கப்பட்டது.

''மாநில வருவாய் ஆணையம்'' கோயமுத்தூர் மாவட்டத்தைப் பிரித்து ஈரோட்டைத் தலைநகராக்கி புதிய மாவட்டம் அமைக்கப் பரிந்துரை செய்தது. மேலும் அந்த ஆணையம் தாராபுரத்திலிருந்து காங்கயத்தையும், கோபிசெட்டிபாளையத்திலிருந்து சத்தியமங்க லத்தையும் பிரித்துத் தனித் தாலுக்காக்கள் உருவாக்கவும் பரிந்துரை செய்தது.

மற்றொரு முக்கியமான திட்டத்தையும் அந்த ஆணையம் அறிவித்தது. தாராபுரம், சத்தியமங்கலம் தாலுக்காக்கள் கோயமுத்தூர் மாவட்டத்துடனும், சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த சங்ககிரி திருச் செங்கோடு தாலுக்காக்களை ஈரோடு மாவட்டத்துடனும் சேர்க்க வேண்டும் என்றும் பரிந்துரை செய்தது.

சேலம் மாவட்டத்தின் சங்ககிரியையும், திருச்செங்கோட்டையும் ஈரோடு மாவட்டத்தோடு சேர்க்க சேலம் மாவட்டத்தில் கடும் எதிர்ப்பு ஏற்பட்டது. சேலம், ஈரோடு மாவட்டங்களுக்குக் காவிரியாறு இயற்கை எல்லையாக இருப்பதாலும், தொழில் வளம் மிக்க சங்ககிரி, திருச்செங் கோட்டை ஈரோட்டோடு சேர்த்தால் சேலம் மாவட்டம் மிகப் பாதிக்கப் படும் என்பதாலும் காவிரியில் சில புதுப்பாலங்கள் அமைக்க வேண்டி யிருக்கும் என்பதாலும் அரசு சங்ககிரி, திருச்செங்கோடு ஆகிய தாலுக் காக்களை ஈரோடு மாவட்டத்தில் சேர்க்கும் திட்டத்தைக் கைவிட்டது.

அதற்குப் பதிலாக கோயமுத்தூர் மாவட்டத்தோடு சேர்க்க ஆணை பிறப்பிக்கப்பட்ட தாராபுரம், சத்தியமங்கலம் தாலுக்காக் களை ஈரோடு மாவட்டத்திலேயே வைத்துக் கொள்ளலாம் என்றும் முடிவு செய்யப்பட்டது. காங்கயம், பெருந்துறை, சத்தியமங்கலம் ஆகிய புதிய தாலுக்காக்கள் உருவாக்கவும் முடிவு செய்யப்பட்டது.

ஆந்திராவில் ''பிரகாசம் மாவட்டம்'' அமைந்திருப்பதை எடுத்துக்காட்டி கோயமுத்தூர் மாவட்டத்தைப் பிரித்து ஈரோட்டைத் தலைமையிடமாகக் கொண்டு அமைக்கப்படும் புதிய மாவட்டத் திற்குத் ''தந்தை பெரியார் மாவட்டம்'' என்று பெயர் சூட்டவும் முடிவு செய்யப்பட்டது. பின் பலருடைய வேண்டுகோளுக்கு இணங்கத் ''தந்தை'' என்ற சொல் நீக்கப்பட்டது. 17.9.1979 அன்று பெரியார் நூற்றாண்டு விழா முதல் ''பெரியார் மாவட்டம்'' என இயங்கும் என்ற ஆணையை அரசு 31.8.1979 அன்று பிறப்பித்தது.

17.9.1979ல் மாவட்டத் தொடக்கவிழா கோலாகலமாக ஈரோடு சி.எஸ்.ஐ மைதானத்தில் நடைபெற்றது. ஆனால் முறைப்படி 24.9.1979ல்

மாவட்ட நிர்வாகம் இயங்கத் தொடங்கியது. ஈரோடு நகராட்சிக்குப் புதிதாகக் கட்டியிருந்த நகராட்சிக் கட்டிடத்தில் மாவட்ட நிர்வாகம் இயங்கியது. திரு. இலட்சுமிரத்தன் பாரதி அவர்கள் முதல் மாவட்ட ஆட்சியராக நியமிக்கப்பட்டார்.

1975ல் சத்தியமங்கலம் தனிவட்டம் ஆக்கப்பட்டிருந்தது. 4.7.1979ல் பெருந்துறை வட்டமும், 1.8.1981ல் காங்கயம் வட்டமும் ஏற்பட்டன. ஈரோடு, சத்தியமங்கலம், கோபிசெட்டிபாளையம், பவானி, காங்கயம், பெருந்துறை, தாராபுரம் ஆகிய ஏழு வட்டங்களோடு ஈரோடு மாவட்டம் விளங்குகிறது.

ஈரோடு மாவட்டம் ஈரோடு, தாராபுரம், கோபிசெட்டிபாளையம் என்ற மூன்று வருவாய்க் கோட்டங்களை உள்ளடக்கியுள்ளது. ஈரோடு வருவாய்க் கோட்டத்தில் ஈரோடு, பெருந்துறை வட்டங்களும், தாராபுரம் வருவாய்க் கோட்டத்தில் தாராபுரம் காங்கயம் வட்டங்களும் கோபிசெட்டிபாளையம் வருவாய்க் கோட்டத்தில் கோபிசெட்டி பாளையம், சத்தியமங்கலம், பவானி வட்டங்களும் இணைக்கப் பட்டுள்ளன.

❊❊❊

# 3. நாடும் நாட்டுப் பிரிவுகளும்

## கொங்கு நாடு

வடக்கில் வேங்கடமும் தெற்கில் குமரிமுனையும் கிழக்கிலும் மேற்கிலும் கடல்களையும் எல்லையாகக் கொண்ட தமிழ்நாடு சேர, சோழ, பாண்டிய நாடுகளுடன் தொண்டைநாடு, கொங்குநாடு ஆகியனவும் சேர்ந்து ஐந்து பகுதிகளாக விளங்கியது.

'வியன் தமிழ்நாடு ஐந்து' என்று தண்டியலங்கார மேற்கோள் பாடலும், 'தமிழ் மண்டிலம் ஐந்து' என்று திருமூலரின் திருமந்திரமும் கூறுகின்றன. தமிழின் தொன்மையான தொகைப்பாடல்களான சங்க இலக்கியங்களில் பல இடங்களில் 'கொங்கு' 'கொங்கர்' என்னும் சொல்லாட்சிகள் குறிக்கப் பெறுகின்றன.

'ஆகெழு கொங்கர் நாடு'
'கொங்கு புறம்பெற்ற கொற்ற வேந்து'
'கொங்கர் படுமணி ஆயம்'

என்பன சங்க இலக்கியத் தொடர்கள்.

## பெயர்க்காரணம்

கொங்கு என்றால் காடு, பொன், மணம், தேன் என்று பல பொருள்கள் உண்டு. காடுகள் மிகுந்த நாடு, பொன்நாடு, மண நாடு, தேன் நாடு என்ற பொருள்களில் கொங்கு நாட்டிற்குப் பெயர் அமைந்தது என்பர். கொங்கின் உள்நாட்டுப் பிரிவுகள் பல தலைநகர் களால் பெயர் பெற்றது போல 'கொங்கு' என்ற பழம்பெரும் ஊரால் இந்நாட்டிற்குப் பெயர் வந்திருக்கலாம். தாராபுரம் அருகில் உள்ள 'கொங்கு' என்ற அந்த ஊர் இன்று கொங்கூர் என வழங்கப்பெறுகிறது.

## எல்லைகள்

வடக்கில் பெரும்பாலையையும் தெற்கில் வைகாவூர் நாட்டுப் பழனியையும் மேற்கில் வெள்ளியங்கிரி மலையையும் கிழக்கில்

குளித்தலையையும் எல்லைகளாக உடையது கொங்கு நாடு. இதனை

'வடக்குப் பெரும்பாலை வைகாவூர் தெற்கு
குடக்குப் பொருப்புவெள்ளிக் குன்று - கிடக்கும்
களித்தண் டலைமேவும் காவிரிசூழ் நாடு
குளித்தண் டலையளவு கொங்கு

என்ற பாடல் தெரிவிக்கிறது.

## ஈரோடு மாவட்ட நாட்டுப் பிரிவுகள்

கொங்கு நாடு தென்கொங்கு, வடகொங்கு, மேல்கொங்கு, கீழ்கொங்கு என நான்கு பெரும் பிரிவுகளாக அழைக்கப்பட்டது. அவற்றில் ஈரோடு மாவட்டம் தென்கொங்கு, வடகொங்குப் பகுதி களில் அமைந்துள்ளது. இவ்விரு பகுதிகளையும் ஆட்சி புரிந்த கொங்குச் சோழர்கள் சிலர். "இருகொங்கும் ஆண்ட" என்ற அடை மொழியைச் சேர்த்துக் கொண்டனர்.

மேலும் கொங்கு நாடு நிர்வாக வசதிக்காக 24 உள்நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவை.

1) பூந்துறை நாடு 2) தென்கரை நாடு 3) காங்கய நாடு
4) பொன்கலூர் நாடு 5) ஆறை நாடு 7) திருவாவிநன்குடிநாடு
8)மண நாடு 9) தலைய நாடு 10) தட்டய நாடு
11) பூவானிய நாடு 12) அரைய நாடு 13) ஒடுவங்க நாடு
14) வடகரை நாடு 15) கிழங்கு நாடு 16) நல்லுருக்கா நாடு
17) வாழவந்தி நாடு 18) அண்ட நாடு 19) வெங்கால நாடு
20) காவடிக்கா நாடு 21) ஆனைமலை நாடு 22) இராசிபுர நாடு
23) காஞ்சிக்கோயில் காடு 24) குறுப்பு நாடு என்பனவாம்.

## ஈரோடு மாவட்டப் பகுதி நாடுகளும் இன்றைய வட்டங்களும்

1) மேல்கரைப் பூந்துறைநாடு - ஈரோடு வட்டம்
2) தென்கரை நாடு - தாராபுரம் வட்டம்
3) காங்கய நாடு - காங்கயம் வட்டம்

4) மேல்கரை அரைய நாடு - ஈரோடு வட்டம்
5) ஒடுவங்க நாடு - சத்தியமங்கலம் வட்டம்
6) வடகரை நாடு - பவானி வட்டம்
7) காஞ்சிக்கோயில் நாடு - கோபி வட்டம்
8) குறுப்பு நாடு - பெருந்துறை வட்டம்

தென்கரை நாட்டுப்பகுதி கல்வெட்டுக்களில் நரையனூர் நாடு என்றும் குறிக்கப்பட்டுள்ளது. காங்கய நாட்டில் காரையூர்ப்பகுதி நற்காவிரி நாடு என்றும் குறிக்கப்பட்டுள்ளது. காஞ்சிக்கோயில் நாட்டுக்கும் மேல்கரைப் பூந்துறை நாட்டுக்கும் இடைப்பட்ட சில பகுதிகள் காஞ்சித்துண்டம் எனப்பட்டது. குறுப்பு நாட்டின் தென்பகுதி தென்குறுப்பு நாடு என்றும், வீரசோழபுர நாடு என்றும் அழைக்கப் பட்டது. குறுப்பு நாட்டின் தென்பகுதியிலும் பொங்கலூர்க்கா நாட்டின் வடபகுதியிலும் சில ஊர்கள் இரண்டு நாடுகளிலும் குறிக்கப்பட் டுள்ளன.

இந்நாட்டுப் பிரிவுகள் கி.பி.9ஆம் நூற்றாண்டிலிருந்து வழக்கில் வந்தன. பிற்காலத்தில் மக்கள் புதிய குடியேற்றத்தால் நாடுகள் பெருகி கொங்குநாடு 42 நாடுகள் ஆயின. அவை தாராபுரம் சூழ்ந்த நாடுகள் 24; குன்றத்தூர்த் துர்க்கம் சூழ்ந்த நாடுகள் 12; டணாயக்கன் கோட்டை சூழ்ந்த நாடுகள் 6 என்பனவாம் (குன்றத்தூர் - சங்ககிரி).

***

# 4. தொல்பழங்காலம்

## அ] தொல்லுயிரி எச்சங்கள் (FOSSILS)

மண்ணில் புதையுண்ட மரம் அல்லது விலங்குகளின் உடல் உறுப்புக்கள் நுண்கிரிமிகளால் (Bacteria) அழிந்தது போக மீதிப்பகுதி நிலத்தடி நீரில் உள்ள மணல் சத்தை (SILICA) உள்வாங்கி மாற்றம் அடைந்து கல்லின் தன்மையைப் பெறுகின்றன. இவற்றைத் ''தொல்லுயிரி எச்சங்கள்'' என்று கூறுவர்.

பெருந்துறை வட்டம் வெள்ளோட்டில் விலங்கின் (வாய்த்) தாடையின் (காட்டெருது அல்லது காட்டு மாடு) தொல்லுயிரி எச்சம் கிடைத்துள்ளது காங்கயம் வட்டம் சங்கரகவுண்டன் வலசிலும், கொடுமுடி அருகில் இச்சிப்பாளையத்திலும் அது போன்ற விலங்கின் கால் தொடைப்பகுதிகள் கிடைத்துள்ளன. இவை 20 லட்சம் ஆண்டு களுக்கு முற்பட்டது என்று கருதப்படுகிறது.

காங்கயம் - தாராபுரம் சாலையில் உள்ள ஊதியூர் மலையை அடுத்துள்ள கருக்கம்பாளையத்தில் கற்படிவங்கள் இக்காலத்தைச் சேர்ந்தவை இருந்தன. 1996ஆம் ஆண்டு ஜூன் மாதம் மின்னல் தாக்கியதால் அவை மிக அதிக வெப்பமும் உடனடிக் குளிர்ச்சியும் பெற்று உடைந்து சிதறிக் குழாய் வடிவமாக உருமாறின. கண்ணாடி மெழுகு போல் அவை காணப்படுகின்றன. இரண்டு நாட்கள் அப் பகுதியில் மிகுந்த வெப்பநிலை இருந்ததாம்.

எனவே ஈரோடு மாவட்டப் பகுதி 20 லட்சம் ஆண்டுகட்கு முன்பே உயிரினங்கள் பல வாழ்ந்த பகுதி என்று தெரிகிறது. அதனால் ஈரோடு மாவட்டப் பகுதியின் தொன்மை புலப்படுகிறது.

## ஆ] பழங்கற்காலமும் புதிய கற்காலமும்

(கி.மு. 10000 - கி.மு. 1000) பழைய கற்காலத்தின் இறுதிக் காலம் முதல் புதிய கற்காலத்தின் தொடக்கத்திலிருந்து ஈரோடு மாவட்டப் பகுதியின் வரலாறு தொடங்குகிறது.

சென்னை அரசு அருங்காட்சியகத்தில் 1855 ஆம் ஆண்டு கண் காணிப்பாளராகப் பணிபுரிந்தவர் டாக்டர் பால்பர். அவர் ஆறு வட்டார அருங்காட்சியகங்களை ஏற்படுத்தினார். அவை கோயமுத்தூர், பெல் லாரி, கடலூர், மங்களூர், உதக மண்டலம், இராச முந்திரி ஆகிய இடங் களில் அமைந்தன.

அப்போது கோவை மாவட்ட ஆட்சித்தலைவராக விளங்கிய டாக்டர் ஸ்டோனி அவர்களின் பெரு முயற்சியால் முதலாவதாக வரலாற்றுச் சிறப்புமிக்க தொல்பொருள்கள் கோவை அருங்காட்சி யத்திற்காகச் சேகரிக்கப்பட்டன.

டாக்டர் இராபர்ட் புரூஸ்புட் அவர்கள் கொங்குப் பகுதியில் அப்பணியை மேற்கொண்டார். புரூஸ்புட் 1863 முதல் 1904 வரை இந்தியா முழுவதும் 45 பழைய கற்கால மக்களின் வாழ்விடங்களையும் 252 புதிய கற்கால மக்களின் வாழ்விடங்களையும் அவர்கள் விட்டுச் சென்ற பல விதமான கற்கருவிகளையும் கண்டுபிடித்தார்.

புரூஸ்புட் கண்டுபிடித்த புதிய கற்காலக் கருவிகளில் மிகவும் சிறப்புமிக்கதும் தொன்மையானதும் ஈரோடு மாவட்டம் பவானி வட்டத்தில் அவர் கண்டுபிடித்த புதிய கற்கால ஆயுதங்கள் ஆகும். (சேர்க்கை எண்கள் 194-201 வரை) 1887ஆம் ஆண்டு பர்கூர் மலை யில் எட்டுப்புதிய கற்காலக் கருவிகளை அவர் கண்டுபிடித்தார்.

வழக்கமான ஆற்றுப்படுகைகளில் இவை கிடைக்காமல் சுண்ணாம் புக்கல் வகையில் உருவாக்கப்பட்ட இயற்கைக் குகைகளின் இடுக்கு களில் இவை கிடைத்தது மிகவும் சிறப்பானதாகும். தமிழ்நாட்டின் புதிய கற்காலக் கருவிகளின் காலத்தை நிர்ணயம் செய்ய ஈரோடு மாவட்டப் பர்கூர் புதிய கற்காலக் கருவிகள் பயனுடையவைகளாக இருந்தன.

இந்த எட்டுப் புதிய கற்கால ஆயுதங்களும் முழுமையாக முற்றுப் பெறாதவை. இவைகளை வெட்டும் கருவிகளாக உருவாக்க அவர்கள் முயற்சி செய்துள்ளனர். அவை பழைய கற்கால ஆயுதங்களாகக் கூட இருக்கலாம் என புரூஸ்புட் ஊகித்துள்ளார். பர்கூரில் கல் ஆயுதங்கள் தயாரிக்கும் பட்டறை இருந்துள்ளதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

ஆனால், இவற்றை அண்மையில் சிறப்பாக ஆய்வு செய்த டாக்டர் நரசிம்மையா அவர்கள் இவை ''புதிய கற்காலக் கருவிகளின் முன் காலம்'' என்று கூறி அவற்றின் காலம் கி.மு.3500 என்று நிர்ணயம் செய்துள்ளார். இவை கிடைத்த பகுதியில் அக்காலத்திற்குரிய பானை ஓட்டுத் துண்டுகளும் கிடைத்துள்ளன. அவை புதிய கற்காலத்துக்கு முன் பானைகளைப் பயன்படுத்திய மக்கள் உருவாக்கியவை.

நரசிம்மையா புதிய கற்காலத்தை மூன்று கட்டங்களாகப் பிரித் துள்ளார். முதல் காலகட்டம் கி.மு. 2800 - 2200; இரண்டாம் கால கட்டம் கி.மு.2200-1800; மூன்றாம் காலகட்டம் கி.மு.1800-கி.மு.500 ஆகும். ஆனால் பர்கூர்ப் புதிய கற்கால ஆயுதங்கள் முதல் காலகட்டத் திற்கு முந்திய காலம் கி.மு.3500 என்று அவர் நிர்ணயம் செய்துள்ளார். எனவே பர்கூர் கருவிகளைப் பழைய கற்காலக் கருவிகளோடு ஒப்பிடலாம்.

பர்கூர் மக்கள் மலைத் தளங்களில் படிக்கட்டு வயல்களை உண்டாக்கி வேளாண்மை செய்துள்ளனர். இக்கருவிகளைக் கிழங் குகள், காய்கறிகளைத் துண்டாக்க அவர்கள் பயன்படுத்தியிருக்கலாம் என்பது தொல்லியலார் கருத்தாகும். அல்லது வேட்டையில் கிடைத்த பறவைகள் மற்றும் சிறு விலங்குகளின் தோலை உரிக்கவும் இறைச் சியை வெட்டவும் இக்கருவிகள் பயன்பட்டிருக்கலாம்.

## இ) பெருங்கற்காலம்

(கி.மு. 1000 - கி.பி.100)

19ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் 1800-1810 ஆண்டுகளில் நில அளவை அலுவலர் மெக்கன்சியின் உதவியாளர்கள் இம்மாவட் டத்தில் உள்ள பெருங்கற்காலப் பண்பாட்டு, இடங்களைப் ''பாண்டுக் குழிகள்'' என்றும், ஈமத்தாழிகளை ''மூத்தாந்தாழிகள்'' என்றும் அறிவித்துள்ளனர்.

பழைய, புதிய கற்காலத்திற்குப் பிறகு பெருங்கற்காலப் பண்பாடு வருகிறது. அதுவே தமிழ்நாட்டின் சங்ககாலம் ஆகும். பெருங்கற்கால மக்களின் வாழ்விடங்கள், இடுகாடுகள், ஈமக்குழிகள் நூற்றுக்கணக்கில்

இம்மாவட்டப் பகுதிகளில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் சில அகழ்ந்தாயப்பட்டுள்ளன.

## பழைய ஆய்வுகள்

ஈரோடு மாவட்டத்தின் பழங்கால வரலாற்றுப் பெருமையைத் தொல்பொருள் ஆய்வு மூலம் வெளிப்படுத்தியவர்கள் மேலை நாட்டினரேயாவர். எம்.ஜே. வால்ஹௌஸ், அலெக்ஸாண்டர் ரீ போன்றோர் அவர்களுள் முக்கியமானவர்கள்.

ஈரோடு மாவட்டத்தில், பெருந்துறை, கருமாண்டி செல்லிபாளையம், கணியாம்பூண்டி, நல்லாம்பட்டி போன்ற ஊர்களில் 19ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதிகளிலேயே சில பெருங்கற்கால சவக்குழிகள் திறக்கப் பட்டு ஆய்வுகள் நடத்தப்பட்டுள்ளன. இங்கு கல்வட்டம் (Cairan Circle), கல்லறை (Dolmenoid Cist), தாழி (Urn), நெடுங்கல் (Menhir), நடுகற்கள் (Hero Stones - Memorial Stones), ஆகியவை கிடைத்துள்ளன. கொங்குப் பகுதியில் ஈரோடு மாவட்டத்திலேயே இவை அதிகம் கிடைக்கின்றன.

இவற்றிலிருந்து இரும்புக் கருவிகள், குதிரை லாடம், செப்புப் பாத்திரங்கள், தங்க அணிகலன்கள், வெண்கலப் பொருட்கள், சுடுமண் பொம்மைகள், பலவகை மட்பாண்டங்கள், காதணிகள், சங்கு அணிகலன்கள், பெரில், அக்குவா மெரினா, கார்னீலியன், ஜாஸ்பர், அகேட், குவார்ட்ஸ் போன்ற வண்ணக் கற்களால் செய்யப்பட்ட பாசிகள், மணிகள், சுடுமண் விளையாட்டுப் பொருள்கள், தக்கிளிகள் எடைக்கருவிகள், கடவுள் உருவங்கள் ஆகியவை கிடைத்துள்ளன.

இவை பற்றிய விரிவான அறிக்கை "கல்கத்தா ராயல் ஆசியாடிக் சொஸைட்டி" பருவ இதழ் 7இல் பக்கம் 17 முதல் 34 வரை 1875இல் எம்.ஜே.வால்ஹௌஸ் அவர்களாலும், 1910-11ஆம் ஆண்டு தொல்லியல்துறை ஆண்டறிக்கையில் பக்கம் 12 முதல் 15 வரை அலெக்ஸாண்டர் ரீ அவர்களாலும் வெளியிடப்பட்டுள்ளது.

சென்னை அரசினர் அருங்காட்சியகத்தின் தொல்லியல் துறைக் காப்பாட்சியராக இருந்த வி.என். சீனிவாச தேசிகன் 1964-68ஆம்

ஆண்டுகளில் ஈரோடு மாவட்டப் பகுதியில் விரிவான தொல்லியல் கள ஆய்வுப்பணி மேற்கொண்டு பல பெருங்கற்காலப் பண்பாட்டு இடங்களைக் கண்டறிந்து வெளிப்படுத்தினார்.

தமிழ்ப்பல்கலைக்கழகக் கல்வெட்டியல் - தொல்லியல் துறை முன்னாள் தலைவர் முனைவர் கா.ராஜன் 1980 முதல் ஈரோடு மாவட்டத்தில் மேலும் பல பெருங்கற்காலப் பண்பாட்டு இடங்களைக் கண்டறிந்தார்.

## கொடுமணல் அகழாய்வுகள்

பதிற்றுப்பத்தில் கபிலரும், அரிசில் கிழாரும் தொழில் திறனுடன் வேலைப்பாடுமிக்க சிறந்த அணிகலன்களை உருவாக்கும் ''கொடு மணம்'' என்ற ஊரைப்பற்றிக் குறிப்பிடுகின்றனர்.

''கொடுமணம் பட்ட வினைமாண் நன்கலம்'' (பதிற் 67)

''கொடுமணம் பட்ட வினைமாண் அருங்கலம்'' (பதிற் 74)

என்பன அப்பகுதியாகும்.

அச்சிறப்புமிகு பேரூர் இன்று ஈரோடு மாவட்டம், பெருந்துறை வட்டம், நொய்யலாற்றின் வடகரையில் ''கொடுமணல்'' என்ற பெயருடன் விளங்குகிறது. இம்மூதூர் கேரள மாநிலத்தில் பெரி யாற்றின் வாயிலில் அமைந்திருந்த முசிறித் துறைமுகத்தையும், அமரா வதி ஆற்றங்கரையில் அமைந்திருந்த கொங்குச் சேரர் தலைநகரான கருவூர் வஞ்சியையும் பாலக்காட்டுக் கணவாய் வழியாக இணைக்கும் வணிகப் பெருவழியில் அமைந்துள்ளது. இப்பேரூரின் புதையுண்ட எச்சங்கள் உள்ள பரப்பு வாழ்விடம், ஈமக்காடு என்று இருபெரும் பகுதி களாக உள்ளது.

சுமார் 20 ஏக்கர் பரப்பளவில் பண்டைய வாழ்விடமும் அதன் வடக்கிலும் கிழக்கிலும் 50 ஏக்கர் பரப்பளவில் ஈமக்காடும் பரவி யுள்ளன. இங்கு 1985, 1986, 1989, 1990, 1997 ஆகிய ஆண்டுகளில் தமிழ்ப்பல்கலைக்கழகம், சென்னைப் பல்கலைக்கழகம், தமிழக அரசு

தொல்லியல் துறை ஆகியவை சார்பில் அகழாய்வுப் பணிகள் மேற் கொள்ளப்பட்டன. அங்கு வெளிப்படுத்தப்பட்ட பண்பாட்டை ''நொய் யல்கரை நாகரிகம்'' என ஆய்வாளர்கள் அழைக்கின்றனர். கொடு மணல் தொல்லியல் பரப்பில் 10 விழுக்காடு கூட இதுவரை அகழாய்வு மேற்கொள்ளப்படவில்லை. இங்கு மீண்டும் அகழாய்வு தொடர ஈரோடு மாவட்ட ஆட்சியர் த. உதயச்சந்திரன் அவர்கள் முயற்சி மேற் கொண்டுள்ளார்.

கம்பு, வரகு, சோளம் முதலிய புன்செய் சாகுபடியில் ஈடுபட்ட கொடுமணல் மக்கள் நல்ல எழுத்தறிவு பெற்று இந்தியாவின் பிற மாநிலங்களுடனும், இலங்கை, ஆப்கானிஸ்தான், உரோம் முதலிய நாடுகளுடனும் வாணிகத் தொடர்பு உடையவர்களாக இருந்தனர். அரிய வண்ணக் கல்மணிகள் பாசிகள் உருவாக்குதல், இரும்பு - எஃகு கருவிகள் செய்தல் போன்ற தொழிலிலும் ஈடுபட்டிருந்தனர்.

பெரில் என்ற பச்சைக்கல் படியூரிலும், சபையர் எனப்படும் நீலக்கல் சிவமலையிலும், குவார்ட்ஸ் எனப்படும் பளிங்குக்கல் கிடைக்கும் வெங்கமேடும் அரசம்பாளையமும் கொடுமணல் அருகேயும் உள்ளன. இவை ஓரளவு கொடுமணலிலும் கிடைத்தன. இவற்றுடன் ஆப்கானிஸ்தானத்து லேபிஸ் லசுலியும், குஜராத்தின் கார்னீலியன் என்ற சூதுபவளமும், இலங்கையின் பூனைக்கண் மணியும் கொடு மணலில் இறக்குமதி செய்யப்பட்டு அழகுமிகு அணிகலன்கள் உருவாக்கப்பட்டன.

ஏர் உழும்போதும், கால்நடை மேய்க்கும் பொழுதும், மழை பெய்த மண் அரிப்பிலும், கிழங்கு தோண்டும் போதும் கொங்கு நாட்டில் மணிக்கற்கள் கிடைத்ததாகப் பதிற்றுப்பத்துக் கூறுகிறது.

ஏராளமான மணிக்கற்களும் பாசிகளும் வீட்டுப் பயன்பாட்டு ஆயுதங்கள் என இரும்புப் பொருள்கள் பலவும் கிடைத்துள்ளன. செம்பு, வெள்ளி, தங்க உலோகங்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன. சங்குப் பொருள்கள், எலும்புப் பொருள்கள், சுடுமண் பொருள்கள், முத்திரை

பதிக்கப்பட்ட வெள்ளி நாணயங்கள் ஆகியவை அங்கு கிடைத் துள்ளன. பானை ஓடுகளில் கிடைத்த பல்வேறு வகையான குறியீடு களையும் தமிழ் பிராமி எழுத்துப் பொறிப்புக்களையும் சிறப்பாகக் குறிப்பிடலாம்.

கண்ணன் ஆதன், குவிரன் ஆதன், அந்துவன் ஆதன், பண்ணன், வன்மூலன், சம்பன், கூலந்தை அகல், வருணிய் அகல், சாத்தந்தை போன்ற பெயர்கள் கிடைக்கின்றன. ஆதன் என்ற பெயர் சேரர் தொடர் பைக் காட்டுகிறது. வணிகக் குழுவைக் குறிக்கும் நிகம, விஸாகி, குவிரன்,வருணிய் போன்ற சொற்கள் கொடுமணல் வட இந்தியா வோடு கொண்டிருந்த தொடர்பை நன்கு உறுதிப்படுத்துகின்றன. இந்தியாவில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சிகளிலேயே அதிக எழுத்துப் பொறிப்புக்கள் உள்ள பானை ஓடுகள் கொடுமணலில் மட்டுமே கிடைத்துள்ளன.

உரோம் நாட்டு நாணயங்களும் அரிட்டைன், ரௌலடெட் என்ற உரோம் நாட்டு ஓடுகளும் அவர்களின் மதுக்குடங்களான அம்போராவின் மாதிரிகளும் உரோம்நாட்டுச் சூரியக் கடவுளான அப்பல்லோவின் சுடுமண் பொம்மையும் கொடுமணலில் கிடைத் திருப்பது உரோமானியர் தொடர்பை வெளிப்படுத்துகிறது. இங்கு செய்யப்பட்ட அரிய கல் மணிகளை மேற்குக் கடற்கரைக்கு மலைபடு பொருட்களை வாங்க வந்த உரோமானியர்கள் வந்து வாங்கிச் சென்றுள்ளனர். இந்தியாவிலேயே உரோமானிய நாணயங்கள் அதிகமாகக் கிடைக்கும் பகுதி கொங்கு நாட்டு நொய்யல் கரையே யாகும். இப்பகுதியில் 1500க்கு மேற்பட்ட உரோமானிய நாணயங்கள் கிடைத்துள்ளன.

கரிப்பகுப்பாய்வு C14 முறைப்படி கொடுமணல் நாகரிகக் காலம் கி.மு. 5ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது என நிர்ணயிக்கப் பட்டுள்ளது. ஈரோடு மாவட்டத்தில் சங்க காலத்திற்கு இணை யான பெருங்கற்படைச் சின்னங்கள் காணப்படும் இடங்கள் பின் வருமாறு.

### ஈரோடு வட்டம்

அஞ்சூர், கதிரம்பட்டி, ஈரோடு, எலவமலை, சிவகிரி, சோளங்க பாளையம், பஞ்சலிங்கபுரம், பழமங்கலம், பெரியசேமூர், மாணிக்கம் பாளையம், முக்குடிவேலம்பாளையம், மூலக்கரை (சோமாசிகாடு) விருமாண்டம்பாளையம்.

### காங்கயம் வட்டம்

அகிலாண்டபுரம், அரசம்பாளையம் (பட்டாலி), எருக்கங்காட்டு வலசு, கந்தம்பாளையம், கல்லேரி, கவசப்பாளி, காமாட்சிபுரம், காடையூர், குமரபாளையம், கோயில்பாளையம், பரஞ்சேர்வழி, பெருந்தொழு, மருதுறை, மீனாட்சிவலசு, மேட்டாங்காட்டுப் புதூர், மேட்டுக்காட்டு வலசு, வட்டமலை, வள்ளியறச்சல்.

### கோபிசெட்டிபாளையம் வட்டம்

இக்கரை நெகமம், இருகாலூர், கரிதொட்டம்பாளையம், நம்பியூர், நல்லூர், பனையம்பள்ளி, புங்கம்பள்ளி, புதுப்பீர்க்கடவு, மலையம் பாளையம்.

### சத்தியமங்கலம் வட்டம்

அத்தியூர், அத்தியூர் புதூர், கடம்பூர், கணுவக்கரை, காடன ஹள்ளி, சின்னக்குள்ளபாளையம், புளியம்பட்டி, பெரியகுள்ள பாளையம், பெருமுகை.

### தாராபுரம் வட்டம்

உத்தமசோழபுரம், கம்புளியம்பட்டி, காசிலிங்கம்பாளையம், கொங்கல்நகர், சாலையூர், தாயம்பாளையம், பிரமியம், புளியம்பட்டி, பொன்னாபுரம், பொன்னிவாடி.

### பவானி வட்டம்

அந்தியூர், ஆப்பக்கூடல், ஊசிமலை, ஓரிச்சேரி, கல்பாவி, கற்கேகண்டி, குறிச்சி, கோரவஹட்டி, சிந்துகனி, சின்னமோள பாளையம், செம்மங்குழி, ஒட்டக்கரை, தாமரைக்கரை, துரிசினம்

பாளையம், தொட்டிபாளையம், பர்கூர், புன்னம், பருவாச்சி, பெருந் தலையூர், பெஜ்ஜல்பாளையம், நெல்லூர், வேம்பத்தி, ஜம்பை.

## பெருந்துறை வட்டம்

எழுதிங்கள்பட்டி, கத்தாங்கண்ணி, கருமாண்டிசெல்லிபாளையம், கொடுமணல், சர்க்கார் பெரியபாளையம், செஞ்சேரியாம்பாளையம், ஞானிபாளையம், தளவாய்பாளையம், திங்களூர், நடுப்பட்டி, நல்லாம் பட்டி, நிச்சாம்பாளையம், பிரப்நகர், வெள்ளோடு.

கொடுமணல், பிரப்நகர், நல்லாம்பட்டி, நிச்சாம்பாளையம், ஞானிபாளையம், முக்குடிவேலம்பாளையம் போன்ற பல இடங்களில் ''நெடுநிலை நடுகற்கள்'' உள்ளன.

பெருங்கற்படையுள்ள இடங்களை உள்ளூர் மக்கள் பாண்டியன் குழி, பாண்டியர் குட்டு, பாண்டியன் காடு, கோட்டை, ராசாக்கோவில், வேட்டுவன் காடு, சாம்பக்காடு, பாண்டியன் கோட்டை, சோளக்குழி, நத்தக்காடு, நத்தமேடு என்று பலவாறாக அழைக்கின்றனர்.

❊❊❊

# 5. மலைகளும் காடுகளும்

மனிதர்கள் இன்றி மரங்கள் வளர்கின்றன. ஆனால் மரங்கள் இன்றி மனித இனம் வாழ, வளர முடியாது. தேவையான உணவு, உடை, உறைவிடம், பெற அடிப்படைக் காரணம் மலைகளும் மலைகளைச் சார்ந்து காடுகளில் காணப்படும் இயற்கைச் செல்வங்களான மரங்களே. மலைகளும் மலைசார்ந்த இடங்களும் காடுகளைச் சுமந்து நிற்கின்றன. மரங்கள் அடர்ந்த காடுகள் வெள்ள அரிப்பைத் தடுக்கின்றன. நாட்டின் இயற்கைப் பாதுகாப்பு அரணாகத் திகழ்கின்றன.

நிலத்தில் பெரும்பகுதி காடாக இருந்தபோது வேளாண்மை செய்யவும் வீடு கட்டவும் வழிகள் ஏற்படுத்தவும் ஏரி, குளம் அமைக்கவும் தேவைகளுக்கேற்ப மட்டுமே காடுகளை அழித்தனர்.

''காடுகொன்று நாடாக்கிக்
குளம் தொட்டு வளம் பெருக்கி
கோயிலொடு குடி நிறுவி''

என்பது சங்க இலக்கியத் தொடர். தேவைக்கு அழித்தன போக எஞ்சிய காடுகளைப் பாதுகாத்தனர். ''உசிர் உள்ள மரங்களை வெட்டக் கூடாது'' என ஒரு அரசன் ஆணையிட்டான். ''தோப்பில் உள்ள மரங்களுக்குத் தீங்கு செய்தால் கங்கைக் கரையில் காராம் பசுவைக் கொன்ற பாவம் வரும்'' என்பது ஒரு கல்வெட்டுத் தொடர். இறைவனோடு இறை ஆலயத்தில் உள்ள 'தல விருட்சங்களும்' வணங்கத் தக்கன என்பதால் மரங்களின் புனிதம் விளங்கும்.

ஈரோடு மாவட்ட வனப்பகுதிகளில் முதலில் கவனம் செலுத்தியவர் திப்பு சுல்தான். சந்தன மரங்களை அரசு மரங்கள் (Royal Trees) என்று அறிவித்து அவற்றைப் பாதுகாக்க உரிய அதிகாரிகளை (NAYAKS) நியமித்தார்.

1799இல் ஈரோடு மாவட்டப் பகுதியில் கும்பினியார் அதிகாரத்திற்கு வந்தாலும் 1850 வாக்கிலேயே காடுகளின் மீது அக்கறை செலுத்தினர். நாடு முழுவதும் இரயில் பாதைகள் அமைக்கத் தொடங்கிய

போது தண்டவாளங்களை இணைக்கத் தேக்கு மரத்தைப் பயன்படுத்த லாம் என்று கண்டறிந்து அவைகளை வெட்டிக் கொடுக்கத் தனியார் சிலரை ஒப்பந்தத்தின்பேரில் அமர்த்தினர். மரத்தின் 'சுவை' அறிந்த தனியார் அரசுக்கு அளிக்கும் மரங்களோடு தேக்கு, மருது, வேங்கை போன்ற மரங்களைத் தாங்களாகவே வெட்டி கப்பல் கட்டும் தளங் களுக்கு அனுப்பினர். இவ்வாறுதான் மரத்திருட்டுத் தொடங்கியது. மரங்களின் திருட்டு அதிகமானதும் முதல் முறையாக சத்தியமங்க லத்தில் 1856இல் டாக்டர் கிளேகார்ன் என்பவரை வன அலுவலராக பாதுகாப்புக்கு நியமித்தனர். பின் 1860இல் தலைமலையிலும் 1864இல் பர்கூரிலும் வன அலுவலர்களை நியமித்தனர். தேக்கு மரங்களோடு சந்தன மரங்களையும் அரசு வெட்டிப்பயன் பெற்றது.

கிழக்கிந்தியக்கும்பினி வரும்வரை வனங்களின் கொடையாகிய மரங்களை வணிகநோக்கில் எவரும் வெட்டியது கிடையாது. 1879இல் வனத்துறை தொடக்கப்பட்டது. வடகோவை வனத்துறை 1883இல் கொள்ளேகால், சத்தியமங்கலம், பவானி என்ற மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது. 1909இல் தலைமலை தனிப்பகுதி ஆனது. 1910இல் பவானியிலிருந்து பர்கூர் தனிப்பிரிவாகப் பிரிக்கப் பட்டுப் பின் 1921இல் கொள்ளேகாலோடு இணைக்கப்பட்டது.

ஈரோடு மாவட்டம் அமைந்தவுடன் 1980இல் ஈரோடு வனப் பகுதி சத்தியமங்கலம் வனக்கோட்டம், ஈரோடு வனக்கோட்டம் என இரண்டாகப் பிரித்து அமைக்கப்பட்டது. 1999இல் கோபிசெட்டி பாளையத்தில் மூங்கில் வனக்கோட்டம் தனியாக அமைக்கப்பட்டது. நாமக்கல் மாவட்ட வனப்பகுதி ஈரோடு கோட்டத்தோடு இணைக்கப் பட்டது. ஈரோடு கோட்டம் அந்தியூர், மேட்டூர், காங்கயம், ஈரோடு, பெருந்துறை என 5 பிரிவுகளாகவும் சத்தியமங்கலம் கோட்டம் சத்தியமங்கலம், ஹாசனூர், தூக்கநாயக்கன்பாளையம், தாளவாடி, பவானிசாகர் என 5 பிரிவுகளாகவும் பிரிக்கப்பட்டது. 1919 முதல் சந்தனமரங்கள் விற்பனைக்கென சத்தியமங்கலத்தில் தனிப்பிரிவு இயங்கி வருகிறது. ஈரோடு மாவட்ட மொத்தப்பரப்பில் 28.3% காடுகள் உள்ளன. மாநில சராசரி காடு 16% ஆகும்.

சத்தியமங்கலம் கோட்டத்தில் 145530.92 எக்டேரும், ஈரோடு கோட்டத்தில் 83230.65 எக்டேரும் காடுகள் உள்ளன. சத்தியமங்கலம் வனக்கோட்டத்தில் குடியாலத்தூர், குடியாலத்தூர் விரிவு, உல்லே பாளையம், பாரபெட்டா, தலைமலை, அக்கூர்ஜோரை, அக்கூர் ஜோரை விரிவு, நீலகிரி கீழ் சரிவு, விளமுண்டி ஆகியவையும், ஈரோடு வனக் கோட்டத்தில் நகலூர், எண்ணமங்கலம், பர்கூர் தெற்கு, பர்கூர் வடக்கு, தாமரைக்கரை, அறச்சலூர், வெள்ளிக்கரடு, வாய்ப்பாடி, சென்னிமலை, கொங்கம்பாளையம், அட்டமலை, தளவாய்பட்டினம், ஊதியூர், பெரியமண்மலை ஆகியனவும், வனத்துறை கட்டுப்பாட்டில் உள்ள வனப்பகுதிகள் ஆகும்.

சிவமலை, வட்டமலை, திருமண்கரடு, மலைப்பாளையம் மலை, எழுமாத்தூர் மலை, எட்டிமலை, அரசண்ணாமலை, திண்டல் மலை, பெருமாள் மலை, ஊராட்சிக்கோட்டை மலை, பருவாச்சி மலை, தவளகிரி, பச்சைமலை, பவளமலை, அருள்மலை, திட்டமலை, ஒழலக்கோயில் மலை, கதித்தமலை, அணியரங்கமலை, குட்டிக்கரடு, விஜயகிரி, புஷ்பகிரி ஆகியவை பிறமலைகள் ஆகும்.

மலைக்காடுகளை சந்தனமரக்காடுகள், விறகுக் காடுகள், மூங்கில் காடுகள், பெருமரக்காடுகள், சிறுவனப் பொருள் காடுகள் என 5 வகைகளாகப் பிரிப்பர். சந்தன மரங்களால் அரசுக்குப் பெரிய அளவில் வருமானம் வருகிறது. மேட்டூர் சந்தன எண்ணெய் ஆலைக்குச் சந்தன மரங்கள் அனுப்பப்படுகின்றன. காகித ஆலைக்கு மூங்கில்கள் அனுப்பப் பட்டன. இப்போது காகித ஆலையினர் வேறு மரங்களையும் பயன் படுத்துகின்றனர்.

மலைகளில் மரங்கள் குறைவதால் பருவமழை குறைகிறது. இயற்கை ஆர்வலர்கள் மரங்களையும், காடுகளையும் பாதுகாக்குமாறு வேண்டுகோள் விடுக்கின்றனர். வனத்துறை வெட்டும் மரங்களுக்கு ஈடாகவும், பிற மரங்களையும் நட்டு மரங்களை வளர்க்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ளது.

காட்டு விலங்குகளாலும், வறட்சியாலும், நெருப்பினாலும், நோயினாலும், மரத்திருடர்களாலும் பெரும் அழிவுக்கு உட்பட்டு வரும் காடுகளை வனத்துறையினர் பராமரித்து வருகின்றனர்.

## வெள்ளோடு பறவைகள் சரணாலயம்

ஈரோடு மாவட்டம், பெருந்துறை வட்டம், வடமுகம் வெள்ளோடு கிராமத்தில் 'பெரியகுளம்' என்ற பெயரில் ஒரு சிறுகுளம் உள்ளது. அக்குளத்தில் உள்ளூர்ப் பறவைகளோடு வெளியேயிருந்து வரும் பிற பறவைகளும் தங்குகின்றன. அதனால் அரசு அதைப் பறவைகள் சரணாலயம் என்று அறிவித்தனர். (G.O. MS No. 237, ENVIRON-MENT & FOREST (FRY) Dated 30.06.1997).

குளத்தின் பரப்பளவு 77, 185 எக்டேர் ஆகும். வனத்துறையினர் பார்வையாளர்களுக்கும், ஆய்வாளர்களுக்கும் வேண்டிய பார்வைக் கூட வசதி செய்துள்ளனர். சுற்றுப்புறத்தில் சமூகக் காடும், 19 வகை யான தாவரங்களும் உள்ளன. குளத்தில் ஆறு வகையான மீன்களும், நீர்ப்பாம்பு முதலிய பல வகை விலங்கினங்களும் உள்ளன. அங்கு காணப்படும் 74 வகையான பறவையினங்களுள் 50 வெளியூர் இனங்கள். கோடைகாலத்தில் பறவைகள் தங்கும் முக்கிய இடமாக இது உள்ளது.

அவல்பூந்துறை, ஊஞ்சலூர், கடெசல், கத்தாங்கண்ணி, காங்கயம், கொளாநல்லி, கொடுமுடி, தாமரைக்கரை, தாளவாடி, தலமலை, திம்பம், நசியனூர், பர்கூர் மலை, வெட்டுக்கரை, ஹாசனூர், ஆகிய நீர்வளமிக்க இடங்களும் பறவைகளைக் கவருகின்றன.

ஈரோடு மாவட்டத்தில் 43 பறவைக் குடும்பங்களைச் சேர்ந்த 128 பறவையினங்கள் இருப்பதாகப் பறவையின ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

## வனச்செல்வம்

வனமே ஒரு செல்வம். அது தன்னுள் பல்வேறு செல்வங்களைப் பெற்றிருக்கிறது. யானை, புலி, சிறுத்தை, நரி, செந்நாய், கரடி, காட்டெருமை, குரங்கு, மான், காட்டுப்பூனை, மரநாய், முள்ளம்பன்றி

ஆகிய விலங்குகளும் பல்வேறு பறவையினங்களும் வனத்தில் வாழ்கின்றன. காடுகளில் வேட்டையாடுவது தடை செய்யப்பட்டு உள்ளது. இறந்த யானைகளின் தந்தம், புலி, மான் ஆகியவற்றின் தோல், மான்கொம்பு ஆகியவை வனத் துறையினரால் சேகரிக்கப் படுகின்றன.

தேக்கு, மூங்கில், வாகை, மருது, ரோஸ்வுட், ஆல், அரசு, நெல்லி, புளி, வேம்பு போன்ற பல்வேறு மரங்கள் உள்ளன. மலை வாழ் மக்கள் கோரை, புளி, நெல்லி, புங்க விதை, விறகு, கடுக்காய், கல்பாசம், பேரீச்சை போன்ற மலைபடு சிறுவிளை பொருள்களை சேகரித்து அவற்றை வனத் துறைக்குத் தந்து விலை பெறுகின்றனர்.

****

# 6. மலைவாழ் பழங்குடியினர்

ஈரோடு மாவட்டத்தில் சோளகர், ஊராளிகள், இருளர், மலைக் கவுண்டர், லம்பாடிகள் ஆகிய மலைவாழ் மக்களான பழங்குடியினரும், லிங்காயத்துக்கள் எனப்படும் பழங்குடியினரும் வாழ்ந்து வருகின்றனர்.

ஈரோடு மாவட்டத்தில் சோளகர்கள் சிறப்புமிக்க, பெரும்பான்மைப் பழங்குடிகளாக உள்ளனர். இவர்கள் மலைகளிலும், மலை அடிவாரத் திலும் காட்டுப் பகுதியிலும் வாழ்ந்து வருகின்றனர். தமிழ்நாட்டின் தொன்மைப் பழங்குடி அட்டவணையில் உள்ள பதினேழு பிரிவினரில் சோளகரும் ஒருவர். இவர்கள் எண்ணிக்கை 4817 ஆகும் (1987).

சோளகர்களின் தோற்றம் பற்றி ஒரு கதை வழங்குகிறது. தாளவாடிப் பகுதியில் உள்ள கொத்தெசல் மலையில் பழங்காலத்தில் காரயன், மாதேசுவரன் (பில்லய்யா) என்ற இரு சகோதரர்கள் வாழ்ந்து வந்தனர். சவணன் என்னும் அரக்கன் காரயனை இடையனாக மாற்றி மாதேசுவரனைச் சிறையிலிட்டுப் பல கொடுமைகள் செய்தான். கிருஷ்ண பகவான் அருளால் மாதேசுவரன் விடுதலையாகி அரக் கனைக் கொன்றான். ஆனால், இச்செயலுக்காகக் காரயனால் துரத்தப் பட்டான். பின்னர் இருவரும் கொத்திபோலி என்ற மலையில் சமாதான ஒப்பந்தம் செய்து கொண்டனர். காரயன் வழிவந்தவர்கள் சோளகரும், ஊராளிகளும் ஆவர். மாதேசுவரன் (பில்லய்யா) வழி வந்தவர்கள் லிங்காயத்துக்கள் ஆயினர்.

பவானி வட்டத்தில் சுமார் 1000 மீட்டர் உயரமுள்ள சோளகனை, தாமரைக்கரை, பர்கூர், ஊசிமலை ஆகிய காட்டுக் கிராமங்களிலும் சத்தியமங்கலம் வட்டத்தில் இட்டலை, தரசலட்டி, ஆசனூர், தலைமலை ஆகிய கிராமங்களிலும் சோளகர் வாழ்கின்றனர். அவர்கள் வாழும் கிராமம் 'தொட்டி' என அழைக்கப்படுகிறது.

இப்பகுதிகளில் 16 ஒழுங்கமைக்கப்பட்ட குடியிருப்புக்களும், 23 ஒழுங்கமைக்கப்படாத குடியிருப்புகளும் உள்ளன. சோளா என்றால்

அவர்கள் மொழியில் காடு என்று பொருள். சோளகர் என்றால் ''காட்டில் வாழ்பவர்கள்'' ஆவர். சோளகர்களின் சகோதரர்களாகிய ஊராளிகள் ஈரோடு மாவட்டத்தில் பவானி வட்டம் காகாயனூர், தொட்டக் கொம்பை, வேதபாறை ஆகிய கிராமங்களில் வாழ்ந்து வருகின்றனர். லிங்காயத்துக்கள் மைசூர்ப் பகுதியிலிருந்து ஈரோடு மாவட்ட மலைப் பகுதிகட்குக் குடியேறியவர்கள்.

பாரம்பரிய வேளாண்மையும், வேளாண் கூலிப் பணியும் சோள கர்களின் முக்கியத் தொழில் ஆகும். வனத்துறையினரிடமிருந்து கடனாகப் பெற்ற நிலங்களில் கேழ்வரகு, அவரை, மொச்சை ஆகிய வற்றைச் சாகுபடி செய்கின்றனர்.

இவர்கள் வனத்துறையிடமிருந்து பெற்ற நிலங்களுக்கு ஈடாக வனத்தைப் பாதுகாத்தல், செடிகள், நாற்று நடுதல், வனத்தூய்மை, பாதைகள் செப்பனிடல், விறகு எடுத்தல், காய்ந்த மரங்களைப் பிடுங்குதல், நீர் பாய்ச்சுதல் ஆகிய பணிகளைச் செய்கின்றனர்.

பர்கூர் கிராமத்திலிருந்து 15 கி.மீ. தொலைவில் ஊசிமலை உள்ளது. ஓடு-புல் வேயப்பட்ட அரசின் இருபது குடியிருப்புக்களில் சோளகர் வாழ்ந்து வருகின்றனர். பர்கூர் சோளகர் போலவே இவர்கள் வாழ்க்கை முறையும் அமைந்துள்ளது.

ஓய்வு நேரங்களில் சிறு கொத்துடன் சென்று காடுகளில் நிலத்தைத் தோண்டி கிழங்கு வகைகளைச் சேகரித்து வேக வைத்து சோளகர்கள் உண்ணுகின்றனர். இவர்களின் முக்கிய உணவு தானி யங்கள் கேழ்வரகு, சாமை, கம்பு ஆகும். கொடிவள்ளிக் கிழங்கையும் உண்பர். மிக அரிதாகக் கிடைக்கும் மூங்கில் நெல்லையும் குத்தி அரிசியாக்கி வேக வைத்து உண்பர்.

சில சமயம் காட்டிலுள்ள முயல், முள்ளம்பன்றி, காட்டுக்கோழி, கேலையாடு, பறக்கும் அணில், காட்டுக் கருங்குரங்கு ஆகியவைகளை மூங்கில் மற்றும் கயிற்றினால் ஆன வலை மூலம் பிடிக்கின்றனர். இவைகளின் தலையை வெட்டி இரத்தத்தைக் குடித்து விட்டு இரத்தம் உறையாமலிருக்க ஒரு கிலோ மீட்டர் தூரம் ஓடிப் பயன் பெறுகின்றனர்.

வயதுக்கு வரும் முன்பே திருமணம் செய்தல், பலதார மணம், மறுமணம் செய்தல் ஆகிய வழக்கம் இவர்களிடையே உண்டு. இவர்களிடையே 'குடுவாளி' என்ற திருமண முறை காணப்படுகிறது. காதல் கொண்ட ஆணும் பெண்ணும் காட்டுக்குள் ஓடிவிடுவர். நான்காம் நாள் சோளகர்கள் ஒன்று சேர்ந்து இசைக்கருவிகளுடன் சென்று அவர்களை அழைத்துக் கொண்டு வந்து கோயிலில் திருமணம் செய்விப்பர்.

பவானி வட்ட மூன்றாம் குடியிருப்பான தாமரைக் கரையில் 15 வீடுகள் உள்ளன. இங்கும் வனத்துறையிடம் நிலத்தைக் கடனாகப் பெற்று விவசாயம் செய்கின்றனர்.

காடுகளிலிருந்து கல்பாசம், கடுக்காய், புளி, புங்கவிதை, பேரீச்ச இலை, கோரைப்புல் போன்ற காடுபடு சிறு பொருள்களைச் சேகரித்து வந்து நாள்தோறும் கூலி பெறுகின்றனர்.

பவானி வட்டத்தில் கன்னடம் கலந்த தமிழையும், சத்தியமங்கல வட்டத்தில் மலையாளம் கலந்த கன்னட மொழியையும் பேசுகின்றனர். தலைப்பாகையும் உடலை மூட நீண்ட துணியும் அணிந்து குடுமி வைத்திருந்த இவர்கள் வேட்டி - சட்டைக்கும் கிராப்புக்கும் மாறி வருகின்றனர்.

பெரும்பாலும் கிழியும் வரை ஒரே உடையை அணிவர். தலைக்கு எண்ணெய் தேய்ப்பதில்லை. பல நாட்களுக்கு ஒரு முறை ஆற்றில் குளிப்பர். கல்லில் உடம்பைத் தேய்த்துக் குளிப்பர். ஆடவர்கள் கம்பளித் துணியை மேலே போட்டிருப்பர். கடின உழைப்பாளிகளான இவர்கள் முன்பு சக்கிமுக்கிக் கல்மூலமே நெருப்பை உண்டாக்கிப் பயன்படுத்தினர்.

இவர்களிடம் ஐந்து குலங்கள் உள்ளன. எஜமான் என்பவன் தலைவன், பட்டக்காரன் அவன் உதவியாள் ஆவார்.

தாளவாடி, தலைமலைப் பகுதிகளில் பன்னிரண்டு குடியிருப்புக்களில் சுமார் 3520 ஊராளிகள் வாழ்கின்றனர். காடுகளில் உணவு தேடுவதும், கால்நடை வளர்ப்பதும் வேளாண்மையும் இவர்கள் தொழில்கள். இறந்தோர் ஆவி நீலகிரிக்குப் போகும் என்று ஊராளிகள்

நம்புவதால், இவர்கள் பூர்வீகம் நீலகிரியாக இருக்கலாம். இருளர் குலப்பிரிவும், பேச்சுமொழியும் ஊராளிகளின் குலப் பிரிவோடும் பேச்சுமொழியோடும் ஓரளவு ஒத்துள்ளதால் இவர்கள் இருளர் வழி வந்தோர் என்று கருதுவோரும் உண்டு.

காட்டுப் பொருள்களால் அமைந்த குடில்களில் வாழ்கின்றனர். இவர்கள் பாலைக் காய்ச்சாமல் குடிப்பர். ஆடவர் காதுவளையம், பாசிமணி மாலை, கணையாழி அணிவர். பெண்கள் மூக்குத்தி, காதோலை, கழுத்ததணி, வளையல், தண்டை அணிவர். இவர்களின் இசைக்கருவிகள் பீனாசி, குவாறு, பேறை, பேற தம்பட்டே என்பன. இவை வழிபாட்டுக்கு உரியவை. திருமணம், இறப்பு, கோயில்விழா எல்லாவற்றிலும் இசையும் ஆடல்பாடலும் உண்டு.

இவர்களிடையே 12 குலப்பிரிவுகள் உள்ளன. ஒவ்வொரு குடியிருப்புக்கும் 'கொத்தாளி' அல்லது 'கவுண்டன்' என்ற தலைவன் உண்டு. இவர்களை 'ஊர்க்கவுண்டன்' என்று அழைப்பதும் உண்டு. இவருக்கு தண்டனை அபராதம் வழங்கும் அதிகாரம் உண்டு. ''பண்ணாரி ஆத்தா'', ''பௌரெசாமி'', ''மூலேசுக்கார அய்யா'', ''கும்பப்பா'', ''ரங்கநாதர்'' முதலிய சுவாமிகளை வழிபடுகின்றனர். ''பண்ணாரி ஆத்தா'' மட்டும் பெருமைக்குரிய பெண் தெய்வமாகும்.

ஆண் குழந்தைக்கு தந்தைவழிப் பாட்டன் பெயரும், பெண் குழந்தைக்குத் தாய்வழிப் பாட்டியின் பெயரும் பெரும்பாலும் வைக்கப் படுகிறது. பெண் பேச மணமகள் வீட்டுக்கு வரும்போது ''கொக்கே தடி'' என்ற மரத்துண்டை அளிப்பர். திருமணம் முடியும்வரை அது மணமகள் வீட்டில் இருக்கும். மணமகன் வீட்டு ''கொக்கே தடி'' பெண் வீட்டில் இருந்தால் அதுவரை வேறு எவரும் பெண் கேட்க வரக்கூடாது.

அந்தி வேளையில் தான் சாவு ஊர்வலம் நடைபெறும். ''கொப்பே'' அல்லது ''கொப்பே கூரை'' என்று இடுகாடு அழைக்கப்படுகிறது. நீத்தார் நினைவுக்கடனைத் தவறாமல் செய்வர். இல்லாவிடில் ஆவி வந்து கேடு செய்யும் என்பது நம்பிக்கை. மலைகளையே வீடாகக்

கொண்டு ''காட்டுராஜா''வாகச் சொந்தங் கொண்டாடிய மலைவாழ் மக்கள் இன்று வனத்துறையினரிடம் சிறிய நிலப் பகுதியைக் கடனாகப் பெற்று அதற்கு ஈடாக வனத்துறையினர் இட்ட பணிகளைச் செய்து வாழும் அடிமைகள் போல் வாழ்வது காலத்தின் கோலம்.

※※※

# 7. சங்க காலம்

(கி.மு. 800 - கி.பி.250)

மதுரையில் தமிழ்ச்சங்கம் இருந்ததை ''மதுராபுரிச் சங்கம் வைத்தும் மாபாரதம் தமிழ்ப்படுத்தும்'' என்ற பாண்டியர் பழஞ்செப் பேட்டாலும், ''கூடலின் ஆய்ந்த ஒண்தீந்தமிழ்'' என்ற மாணிக்க வாசகர் கூற்றாலும், பிறவற்றாலும் அறிகின்றோம். மற்றொரு சங்கப் பாடல் ''மாங்குடி மருதன் தலைவனாக'' சங்கம் இருந்ததைக் குறிக் கிறது. கலித்தொகையில் ஒரு பாடல் இளவேனில் காலத்தை ''நான் மாடக் கூடலார் புலவர்கள் நாவில் புதிது உண்ணும்பொழுது'' என்று சுட்டுவதால் இளவேனில் காலமாகிய இரு மாதங்கள் தமிழ்ச் சங்கம் மதுரையில் கூடியதாக அறிகின்றோம்.

## கால்நடைச் செல்வம்

''ஆகெழு கொங்கர் நாடு'', ''கொங்கர் ஆ பரந்தன்ன'', ''கொங்கர் படுமணி ஆயம்'' ஆகிய சங்க இலக்கியத் தொடர்கள் கொங்கு நாட்டின் சங்ககாலக் கால்நடைச் செல்வத்தின் மிகுதியைக் குறிக்கிறது. கொங்கு நாட்டில் ஈரோடு மாவட்டப் பகுதியே கால்நடைச் செல்வத்தில் அன்றும் - இன்றும் புகழ்பெற்று விளங்குகிறது. ''காங்கயம்'', ''பர்கூர்'' இனங்கள் ஈரோடு மாவட்டத்தின் சிறப்பான கால்நடை இனங்கள் ஆகும்.

## தலைவர்கள்

சங்ககால ஈர்ந்தூர் கிழான் தோயன் மாறன் பெருந்துறை வட்டம் ஈங்கூரைச் சேர்ந்தவன். புன்றுறை, கொடுமுடி என்ற கொங்குத் தலைவர்கள் பெயரை அகநானூறு கூறுகிறது. ''பூந்துறை'', ''கொடுமுடி'' ஆகிய ஊர்கள் அவர்கள் பெயரால் வழங்கப் பெறுபவை. 'கீரன்' என்ற பெயர் சங்க இலக்கியங்களில் பல இடங்களில் பயின்று வருகிறது. காங்கயம் வட்டத்தில் 'கீரனூர்' என்ற தொன்மையான ஊர் இருப்பது குறிப்பிடத்தக்கது.

## மலைகள்

செல்வக் கடுங்கோ வாழியாதன் தன்னைப் பாடிய கபிலருக்கு 'நன்றா' என்னும் குன்றேறி நின்று தன் கண்ணில் கண்ட நாடெல்லாம் காட்டிக் கொடுத்தான் என்ற பதிற்றுப்பத்துப் பதிகம் கூறுகிறது. 'நன்றா' என்னும் குன்று பவானி அருகில் உள்ள ஊராட்சிக்கோட்டை மலையாகும். திருஞானசம்பந்தர் பாடிய 'திருநணா' சங்ககால நன்றாவே ஆகும். பிற்காலத்தில் 'நணா', 'நண்ணாவூர்' என்ற பெயர் பெற்றது. பவானி சிவபெருமான் பெயர் ''நண்ணாவுடையார்'' என்பதாகும்.

நற்றிணையும், குறுந்தொகையும் குறிக்கும் ''சென்னிக்கோடு'' சென்னிமலை ஆகும். புறநானூறு குறிக்கும் 'ஏறைமலை' சிவமலை என்பர். அகநானூறு குறிக்கும் 'குறும்பொறை' இன்று சென்னிமலை அருகே 'குட்டிக்கரடு' என்ற பெயரோடு வழங்குகிறது. குறுந்தொகை குறிக்கும் 'நாகம்' என்பது அறச்சலூராக இருக்கலாம். அறச்சலூர் மலைக்கு 'நாகமலை' என்று பெயர்.

## புலவர்கள்

சங்க இலக்கியத்தில் பாடல் இடம் பெற்றுள்ள அந்தி இளங் கீரனார், பெருந்தலைச் சாத்தனார், பொன்முடியார், ஒரோடகத்துக் கந்தரத்தனார், மூலங்கிழார் ஆகியோர் அந்தியூர், பெருந்தலையூர், பொன்முடி, உலகடம், மூலனூர் ஆகிய ஈரோடு மாவட்ட ஊர்களைச் சேர்ந்தவர்களாக இருக்கலாம்.

## ஊர்கள்

அகநானூறு குறிக்கும் ''வெள்ளாடி'' இன்றைய வெள்ளோடு ஆக இருக்கலாம். நன்னனும் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலும் போர் புரிந்த ''வாகைப் பறந்தலை'' விசயமங்கலம் ஆகும். விசய மங்கலத்தின் பழம்பெயர் வாகை. விசயமங்கலத்தை வாகைப்புத்தூர் என்று கல்வெட்டுக் கூறுகிறது. அங்குள்ள குளத்திற்கும், 'வாகைக் குளம்' என்று பெயர். வாகை என்ற தமிழ்ப் பெயரை 'விசயமங்கலம்'

என்று சமணர்கள் மாற்றிவிட்டனர். அருகில் உள்ள பெருந்துறைக்கும் (வாகைப்) பறந்தலைக்கும் தொடர்பு உண்டா என்பது ஆய்வுக்குரியது.

## ஆறுகள்

ஈரோடு மாவட்டத்தில் ஓடும் காவிரி, பவானி, நொய்யல், அமராவதி ஆகிய நான்கு ஆறுகளுமே சங்க இலக்கியங்களில் சிறப் பித்துப் பாடப்பட்டுள்ளன.

பவானியாற்றின் பழைய பெயர் வானி. பவானி பழைய ஆவணங்களில் 'வானிகூடல்' என்றே குறிக்கப்படுகிறது. பதிற்றுப் பத்து 'சாந்துவருவானிநீர்' என்று கூறுகிறது. பவானியாறு ஓடிவரும் காட்டுப் பகுதியில்தான் சந்தனமரங்கள் மிகுதியாக உள்ளன. சந்தன மரங்களை அடித்துக் கொண்டு வருவதால் பவானி நீர் குளிர்ந்த தண்மையுடன் மணம் வீசுகிறதாம்.

நொய்யல் ஆற்றின் பழம்பெயர் காஞ்சி. கி.பி. 12ஆம் நூற்றாண்டில் 'நொய்மணல்' உள்ள காரணத்தால் நொய்யல் என்று பெயர் பெற்றது. ஈரோடு மாவட்டத்தில் நொய்யல்கரை மக்கள் தம் உற்றார் உறவினர்களோடு கோடைகாலத்தில் நொய்யலில் நீர் விளையாட்டு விளையாடி மகிழ்வாக விருந்துண்டு பொழுதைக் கழிப்பர் என்று கபிலர் பாடுகிறார்.

''மலிபுனல் நிகழ்தரும் தீநீர் விழவில்
பொழில்வதி வேனில் பேரெழில் வாழ்க்கை
மேவரு சுற்றமொடு உண்டு இனிது நுகரும்
தீம்புனல் ஆயம் ஆடும் காஞ்சி''

என்பது அவர் பாடல் பகுதியாகும். அமராவதியாற்றை 'ஆன்பொருனை' என்று சங்க இலக்கியம் சிறப்பிக்கும்.

இந்த ஆறுகளில் குளிக்கும் பெண்களின் அணிகலன்கள் ஆற்றில் கழன்று விழுந்தால் மேலே வந்து கரையிலிருந்து பார்த்தால் ஆற்று நீரின் அடியில் அணிகலன்கள் கிடப்பது தெரியுமாம். தண்ணீர் அவ்வளவு தெளிவாக முன்பு இருந்தது.

''புனல்பாய் மகளிர் ஆட ஒழிந்த
பொன்செய் பூங்குழை மீமிசைத் தோன்றும்''

என்று பதிற்றுப்பத்துக் கூறுகிறது.

## கொங்கரும் கொங்கபூமியும்

மழவர், கோசர், வடுகர், வேடர், குறும்பர், ஆவியர், பூழியர் போலவே கொங்கர் என்பவர்களும் பண்டைய கொங்கின் இனக்குழு மக்கள் ஆவர். மழவர் வாழ்ந்த பகுதி மழகொங்கம் எனப்பட்டது. கோசர்கள் கொங்கு இளங்கோசர் எனப்பட்டனர். தாராபுரம், காங்கயம் வட்டங்களில் வடுகப்பிள்ளையாரும், வடுகநாதர் கோயிலும் உள்ளன. குறும்பர் வாழ்ந்த பகுதி குறும்புநாடு எனப்பட்டுக் குறுப்புநாடு ஆனது. வேடர்கள் கொங்குநாட்டின் பூர்வீகக் குடிகளுள் ஒருவர். பிற்கால அவர்கள் தலைவன் 'கொங்குராயன்' எனப்பட்டார். கொங்கரும் கொங்கு நாட்டின் பழங்குடிகளே.

மழகொங்கம், கொங்கபூமி, குடகொங்கு என்ற கொங்கு நாட்டின் பண்டைய முப்பெரும் பிரிவுகளுள் ஈரோடு மாவட்டப் பகுதியும் தெற்கிலும் மேற்கிலும் அதனைச் சேர்ந்த பகுதிகளும் தான் 'கொங்கபூமி' எனப்பட்டது.

ஈரோடு மாவட்டப் பகுதியில் தான் கொங்கூரும், கொங்கு வஞ்சியும், கொங்குப் பெருமாள் கோயிலும், கொங்கில் அம்மன் கோயிலும், கொங்குப் பெருவழியும் உள்ளன. இங்கு பண்டைய அளவு கருவிகள் கூட கொங்கு, கொங்கு நாழி, கொங்கு முறம் எனப்பட்டது. கொங்கம்பாளையங்களும் இங்கு உள்ளன. எனவே கொங்குக்கு உரிய 'கொங்கர்' ஈரோடு மாவட்டத்திற்கு உரியவர் ஆவர். சுந்தரமூர்த்தி நாயனாரும், ஈரோடு மாவட்டம், பெருந்துறை வட்டத்தில் உள்ள குரக்குத்தளியைத் தான் ''கொங்கில் குறும்பில் குரக்குத்தளி'' என்று பாடியுள்ளார்.

## கொங்கர் போர்த்திறன்

கொங்கரின் போர்த் திறமையைப் பற்றிச் சங்க இலக்கியம் புகழ்ந்து பேசுகிறது. அவர்கள் எறிகின்ற கல்கவணால் வலிமையான கோட்டைச் சுவர்களும் இடியுமாம்.

''ஆர் எயில் அலைத்த கல்கால் கவணை
நார் அரி நறவின் கொங்கர்''

என்று சங்க இலக்கியம் கூறுகிறது. சங்ககாலக் கொங்கர் பலருடன் போரிட்டுள்ளனர்.

சேரரும் சோழரும் பாண்டியரும், கோசரும், மிஞிலி, அதிகன், அஃதை போன்றவர்களும் கொங்கரோடு போர் செய்துள்ளனர். பல்யானைச் செல்கெழு குட்டுவன் 'ஆகெழு கொங்கர்' நாடகப் படுத்தியதாகப் பதிற்றுப் பத்துக் கூறுகிறது. 'கொங்கரை ஓட்டி' நாடுபல தந்ததாகப் பசும்பூண் பாண்டின் அகநானூற்றில் புகழப் படுகிறான். கொற்றச் சோழர் கொங்கரைப் பணிய வைத்ததாக அகநானூறு குறிக்கிறது. கோசருக்காக மிஞிலி, அஃதை, அதியன் ஆகியோர் கொங்கு வாகையில் (விசயமங்கலம்) போர் செய்துள்ளனர். ஆய் அண்டிரன் கொங்கரைக் குடகடல் ஓட்டியதாகப் புறநானூறு கூறுகிறது.

❊❊❊

# 8. இரட்டர், கங்கர் காலம்

(கி.பி.250 - 870)

சங்க காலத்தை அடுத்து ஈரோடு மாவட்டப் பகுதியை இரட்டர் என்ற மரபினரும், கங்கர் என்ற மரபினரும் ஆட்சி செய்தனர். அவர் களைப் பற்றி வரலாற்றுச் சான்றுகள் எதுவும் கிடைக்கவில்லை. ஆயினும் மெக்கன்சியின் ஆவணங்களிலேயே மிகவும் சிறந்ததாகக் கருதப்படும் ''கொங்கதேச ராசாக்கள்'' என்ற நூல் இரட்ட மரபின் ஏழு அரசர்களைப் பற்றியும் கங்கர்களைப் பற்றியும் கூறுகிறது.

## இரட்டர்

வீரராய சக்கரவர்த்தி, முதலாம் கோவிந்தராயன், கிருஷ்ண ராயன், கலாவல்லவராயன், இரண்டாம் கோவிந்தராயன், கன்னர தேவன், திரிவிக்கிரம தேவன் என்ற ஏழு அரசர்களின் பெயர்கள் வரிசையாகக் கூறப்பட்டுள்ளன.

முதல் ஆறு அரசர்களும் சமண சமயம் சார்ந்தவர்கள். கடைசி அரசன் திரிவிக்கிரமதேவன் சங்கரதேவரால் சைவ சமயத்துக்கு மாறினான். இவர்கள் அனைவரும் 'ஸ்கந்தபுரம்' என்ற கொங்குநாட்டு ஊரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தனர். தாராபுரம் அருகில் உள்ள 'கொங்கூர்' என்பதே ஸ்கந்தபுரத்தின் பழம்பெயராகும்.

இவர்களால் ஈரோடு மாவட்டப் பகுதியில் சமண சமயம் செழித்து வளர்ந்தது. பொம்ம கொம்மன், அரிஷ்டனன் என இந்த ஆவணத்தில் வரும் பெயர்கள் பொம்முடி, கொம்மக்கோயில், அரிஷ்ட நேமிமலை (அரசண்ணாமலை) ஆகியவற்றோடு தொடர்புள்ளதா என்பது ஆய்வுக் குரியது. இவர்களால் ஆதரிக்கப்பட்ட சமணர்கள் நந்திகணம் சார்ந்தவர்கள்.

## கங்கர்

இரட்டர்களுக்குப் பின் கி.பி.405 முதல் ஆதித்த சோழன் கொங்கு நாட்டைக் கைப்பற்றிய கி.பி.870ஆம் ஆண்டு வரை 21 அரசர்கள் கங்க மரபில் ஈரோடு பகுதியை ஆட்சி புரிந்தனர்.

கொங்கணிவர்மன், முதலாம் மாதவன், அரிவர்மன், விஷ்ணு கோபன், இரண்டாம் மாதவன், கிருஷ்ண வர்மன், திண்டிகரன், இரண்டாம் கொங்கணிவர்மன், துர்விநீதன், புஷ்கரன், திரிவிக்கிரமன், பூவிக்கிரமன், மூன்றாம் கொங்கணிவர்மன், ராசகோவிந்தன், சிவ காமன், பிருதுவி கொங்கணி, முதலாம் இராசமல்லதேவன், கந்த தேவன், சத்திய வாக்கியன், குணதுத்துமன், இரண்டாம் இராசமல்ல தேவன் ஆகியோர் கங்க அரசர்கள் ஆவர்.

இவர்களுள் முதல் இரண்டு அரசர்கள் ஸ்கந்தபுரத்தைத் தலைநகராகக் கொண்டு கொங்கு நாட்டை ஆட்சிபுரிந்தனர். மற்ற வர்கள் தளவனபுரம் என்ற தலைக்காட்டைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்தனர்.

கங்கமன்னர்கள் சிலரது பெயர்கள் கல்வெட்டுக்களிலும், செப்பேடுகளிலும் இடம் பெற்றுள்ளன. துர்விநீதன் என்பதனை அவனிதன் என்ற பெயரோடு தொடர்புபடுத்துவர். துர்விநீதன் (கி.பி. 610-655) பெருங்கதையின் மூல நூலாகிய 'பிருகத் கதா'வை வட மொழியில் இயற்றியவன்.

விசயமங்கலம் சமணக்கோயில் கி.பி. 678ல் கட்டப்பட்டதாக மெக்கன்சியின் ஆவணம் கூறுகிறது. அது கங்கமன்னன் பூவிக்கிரமன் (665-680) காலமாக இருக்கலாம். சிலர் வைணவம், சைவம் சார்ந் திருந்தாலும் பலர் சமணத்துக்கு ஆதரவளித்தனர். இரட்டர் கங்கர் காலம் கி.பி. 250 முதல் கி.பி. 870 வரை எனலாம்.

❊❊❊

# 9. சேரர் காலம்

(கி.பி. 10, 12, 13 நூற்றாண்டுகள்)

கோனாட்டுத் தலைவர்கள் ஈரோட்டுப் பகுதியை ஆட்சி செய்யத் தொடங்கிய பத்தாம் நூற்றாண்டுத் தொடக்கத்திலும் அவர்கள் ஆட்சி முடிவுக்கு வந்த 13ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் சேரர்கள் கொங்கு நாட்டில் புகுந்து அதிகாரம் செலுத்தித் தங்கள் பெயரில் கல்வெட்டுக் களையும் பொறித்தனர். கோவை மாவட்டத்திலும் பழனி வட்டாரத் திலும் அவர்கள் கல்வெட்டுக்கள் பல காணப்பட்டாலும் ஈரோடு மாவட்டத்தில் குறைவாகவே காணப்படுகின்றன. தென்கொங்கில் சேர வீரகேரளர் மரபு தொடர்ச்சியாக அதிகாரம் செலுத்தியது.

| | | |
|---|---|---|
| பொன்னிவாடி | - | கோக்கண்டன் ரவி |
| ஈரோடு | - | இரவிகோதை |
| கொடுமுடி | - | வீரநாராயண இரவிவர்மன் |
| பெருந்தலையூர் | - | வீரநாராயணன் |
| பிரமியம் | - | வரகுண பராந்தகன் |
| கொல்லம்பாளையம் | - | இரவிகோதை |
| அனுமன்பள்ளி | - | இரவிகோதை |
| பூந்துறை | - | கோரவிகோதை |

ஆகியோர் ஆவணங்கள் ஈரோடு மாவட்டத்தில் கிடைத்துள்ளன.

கொல்லம்பாளையம் இரவிகோதை கல்வெட்டு கி.பி.948ஆம் ஆண்டுக்குரியது. தென்னவன் பேரரையனான வஞ்சிவேள் தாழி என்பவன் ஈரோட்டில் ஒரு ஏரி அமைத்தான். அந்த ஏரிக்குத் 'தாழி ஏரி' என்று பெயர் வழங்கியதாக அந்தக் கல்வெட்டுக் கூறுகிறது.

ஈரோட்டுத் திருத்தொண்டீசுவரர் கோயிலில் உள்ள இரவி கோதையின் நான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் ஆவணிப் பேரூரில் வெள்ளாளர் பில்லரில் விக்கிரம சோமயரையன் தன் மகனுக்கு அக்கன் சோமன் மாமணியாழ்வான் என்று பெயரிட்டு

பேருடைச் சிறப்புக்குக் கோயிலுக்கு நிலம் கொடையாக அளிக்கப் பட்டதைத் தெரிவிக்கிறது. அதே கோயிலில் உள் 27ஆம் ஆண்டுக் கல்வெட்டு அக்கோயிலுக்கு வடகரை நாட்டு அந்தியூரில் பெருங் குளத்தைக் கொடையாகக் கொடுத்து புன்செய் நிலத்தை நன்செய் ஆக்கி நான்கில் ஒருபாகம் கோயிலுக்குக் கொடுக்க வேண்டும் என்று கூறுகிறது. இரவிகோதை 'க்ஷத்திரிய மௌலி சிகாமணி' எனப் புகழப் பட்ட வடமொழிச் சுலோகம் கல்வெட்டின் தொடக்கத்தில் உள்ளது.

கொடுமுடி மகுடீசுவரர் கோயிலில் உள்ள வீரநாராயண இரவி வர்மனின் 27ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் கொடுமுடிக் கோயிலுக்கு ஊஞ்சலூரைக் கொடையாக அரசன் கொடுத்த விபரம் கூறப்பட்டுள்ளது. ஊர் வருவாயில் காரைக்கண்டன் துளை நிறை செம்பொன் 87 பொன் ஐந்தே மூன்று மஞ்சாடி குன்றியும், நெல் 345 கலம் தூணியும் கொடுக்க வேண்டும் என்று குறிக்கப்பட்டுள்ளது. கொடுமுடி ''அதிராசராச மண்டலத்துக் காவேரி நாட்டுக் கரையூர்'' என்று கூறப்பட்டுள்ளது. வீரகேரள அதிராஜராஜன், கேரள அதிராஜ ராஜ ஸ்ரீராஜராஜன் ஆகிய சேரமன்னர்களின் ஒருவர் பெயரால் கொங்கு நாடு 'அதிராஜராஜ மண்டலம்' என்று அழைக்கப்பட்டிருக் கலாம். பெருந்தலையூரில் சேரமன்னன் வீரநாராயணன் கல்வெட்டு அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டது.

பிரமியம் கல்வெட்டில் கோவரகுண பராந்தகனும், பொன்னி வாடிக்கல்வெட்டில் கோக்கண்டன் ரவியும் 'சந்திராதித்யகுல திலக சார்வபூமன்' என்ற பட்டப் பெயருடன் குறிக்கப்படுகின்றனர். பொன்னி வாடிக் கோயிலுக்கு கோக்கண்டன் ரவியின் அடியான் திருநிலைகால் அளித்துள்ளான்.

ஈரோடு கல்வெட்டில் இரவிகோதை கோக்கலி மூர்க்கன் என்று குறிக்கப் பெறுகின்றான். இரண்டாவது கோனாட்டுக் கொங்குத் தலைவன் வீரசோழக் கலி மூர்க்கன், அவன் தந்தை கலிமூர்க்கன். வீரசோழக் கலிமூர்க்கன் தன் மனைவியை ''நம் பிராட்டியார் வரகுண மகாதேவியார்'' என்று குறிக்கின்றான். அவன் கோவரகுண பராந்தகன்

மகளாக இருக்கலாம். தாராபுரத்தின் பழைய பெயர் ''பராந்தக புரம்'' சேரன் வரகுண பராந்தகன் பெயரால் ஏற்பட்டதா என்பது ஆய்வுக்குரியது.

இதுவரை கிடைத்துள்ள கோ இரவி கோதையின் மூன்று செப்பேடுகளில் இரண்டு செப்பேடுகள் ஈரோடு மாவட்டத்தில் கிடைத்துள்ளன. ஈரோட்டிலும், பூந்துறையிலும் கிடைத்த அச்செப் பேடுகள் முறையே அனுமன்பள்ளிக்கும், ஈரோட்டிற்கும் உரியவை.

இரவிகோதை கருவூர் சித்திரா கூடத்தில் எழுந்தருளியிருக்கும் போது பூந்துறை நாட்டு அனுமன்பள்ளியை செல்லன் தேவன், வேம்பன் பண்ணன், நக்கன் முதலி என்ற மூன்று பேருக்குக் கொடை யாகக் கொடுத்ததை ஈரோட்டுச் செப்பேடும், இரவிகோதை ஈரோடு பள்ளி கொண்ட பெருமாள் கோயிலில் கொங்கு அரசனாக அபிஷேகம் செய்து கொண்டதை பூந்துறைச் செப்பேடும் கூறுகின்றன. இரவி கோதை ''காவேரி வல்லவன்'' என அழைக்கப்படுகிறான்.

பகைவரை வென்ற இரகுநாத சிங்கன் என்ற வீரருக்கு நீலம் பூரைக் (நிலம்பேரூர்) காணியாக வேணாடுடையார் கொடுத்த பிற் காலச் செப்பேட்டில் ''வெள்ளாள மகாராசாவாகிய சேரராசா செங் கோல் செலுத்தி தர்மநீதி தப்பாமல் அரசு புரிந்து வரும் நாளில்'' என்று எழுதிய ஒரு ''மெய்க்கீர்த்தி'' சேரரின் பெருமைகளையும் கொங்கு நாட்டுத் தொடர்பையும் விளக்கமாகக் கூறுகிறது.

''அக்கினி கோத்தின் அம்புலிக் குடையான்
பனைந்தார் மார்பன் பவள மாலிகையான்
அன்னக் கொடியான் ஆறுநன் மலையான்
கொல்லி மலையான் கோட்டைநற் கரையான்
வஞ்சிநற் பதியான் வளர்பொன்னி யாறன்
ஆவிநன் குடியான் ஆன்பொருநை யாலயன்
விருதூர் வஞ்சியில் விளங்கிய கோமான்
வெள்ளிநற் பொருப்பு விளங்கும் தேவேந்திரன்
தலைமலை சூழ்ந்த களப்படை வீரன்
குளித்தலை அளவும் கொங்கன் ஆனோன்''

என்பது அச்செப்பேட்டு மெய்க்கீர்த்தியாகும்.

''அக்கினி கோத்திரம்'' சேரமானுக்கு பூந்துறை, வெள்ளோட்டைச் சேர்ந்த வேளாளர்கள் முடி சூட்டியதாக வாலசுந்தரக் கவிராயரின் கொங்கு மண்டல சதகம் கூறுகிறது (எண்-49). கொங்கு வேளாளர்களிலும் சேர குலத்தார், அக்கினி குலத்தார் உண்டு.

''கேரளோற்பத்தி'' என்ற சேர நாட்டு வரலாறு கூறும் மெக்கன்சியின் ஆவணம் சேரமான் பெருமாள் ராசா (சுந்தரருடன்) கயிலை செல்லுமுன் பூந்துறைக்கு வந்து மானீசன், விக்கிரமன் என்ற இரு சிறுவர்களை அழைத்துக் கொண்டு சென்று சேரநாட்டில் இரண்டு இடங்களில் இருவருக்கும் முடிசூட்டியதாகக் கூறுகிறது.

காளியண்ணப் புலவர் பாடிய பூந்துறைப் புராணத்தில் சேரமான் வரலாற்றுச் சருக்கத்திலும் இதே செய்தி கூறப்படுகிறது. அழைத்துச் சென்ற சிறுவன் பெயர் மட்டும் வேறுபடுகிறது. பூந்துறைக் காடை குல நண்ணாவுடையார் வழிவந்த ''வேலப்ப நயினார்'' சேர மன்னனுடன் சென்று முடிசூட்டப் பெற்றதாகப் புராணம் கூறுகிறது. ஈரோடு மாவட்டப் பூந்துறைக்கும் சேரமன்னர்கட்கும் உள்ள தொடர்பு மேலும் ஆய்வுக்குரியது.

கள்ளிக்கோட்டை மன்னர் சாமொரின் பரம்பரையினரின் பல்வேறு பட்டப் பெயர்களில் ஒன்று ''பூந்துறைக் கோன்'' என்பது. கேரள வரலாற்று ஆசிரியர்கள் பூந்துறை காவிரிக்கரையருகே இருப்பதாக எழுதியுள்ளனர்.

※※※

# 10. கொங்குச் சோழர் காலம்

(கி.பி. 942 - 1304)

ஈரோடு மாவட்ட வரலாற்றில் வேளாண்மை, வணிகம், சமயம், அரசியல், பொருளாதாரம் ஆகியவற்றில் உன்னதமான காலம் கொங்குச் சோழர் ஆட்சிக்காலமேயாகும். ஏறக்குறைய கி.பி.942 முதல் 1304 முடிய சுமார் மூன்றரை நூற்றாண்டுக் காலம் அவர்கள் ஆட்சி புரிந்துள்ளனர்.

## இருக்குவேளிர் வழியினர்

அவர்கள் சோழப் பேரரசின் இளைய வழியினர்; சோழரின் பிரதி நிதிகள் அல்லது ஆணையாளர்கள்; சோழர் படைத்தலைவன் கொட்ட மண்டல நாதன் அப்பிரமேயன் வழியினர்; சேரர் மரபினர், கொடும் பாளூர் இருக்குவேளிர் தலைவர்கள்; முத்தரையர்கள் என்ற பல கருத்துக்கள் உள்ளன.

ஆனால் கே.வி. சுப்பிரமணிய அய்யர், வி. மாணிக்கம் ஆகியோர் அவர்கள் கொடும்பாளூர் இருக்குவேளிர் வழியினர் என்று ஆய்ந்து கூறும் கருத்தே வலிமை பெறுகிறது. முதல் மூன்று அரசர்கள் தங்களை 'கோநாட்டான்' என்றே அழைத்துக் கொள்கின்றனர். 'கோனாடு' என்பது இருக்குவேளிர் பகுதியே. கொங்கு நாட்டை வென்ற பேரரசுச் சோழரின் பிரதிநிதிகளாக அவர்கள் ஆட்சியைத் தொடங்கியதால் 'கொங்குச் சோழர்' என அழைக்கப்படுகின்றனர். சோழரைப் போலவே இவர்களும் இராசகேசரி, பரகேசரி என்ற பட்டப் பெயர்களை ஏற்றுள்ளனர். இவர்களின் தலைநகர் தாராபுரம் என்று பெயர் மருவிய பண்டைய இராசராசபுரம்.

## சோழர் ஆட்சி

சோழப் பேரரசன் முதல் ஆதித்தன் (870-907) கொங்கு நாட்டை வென்றதாக ''கொங்கதேச ராசாக்கள்'' நூல் குறிப்பிடுகிறது.

முதலாம் ஆதித்த சோழன் மகன் முதலாம் பராந்தகனின் (907-955) 15ஆம் ஆட்சியாண்டைச் சேர்ந்த கல்வெட்டு ஈரோட்டில்

உள்ளது. பராந்தகன் காலத்தில் கொங்கு நாட்டு விவகாரங்களைக் கவனிக்க "கொங்கு ஸ்ரீகார்யம் ஆராயும் காரிநக்கன்" என்ற அலுவலன் இருந்ததாகத் திருவிடைமருதூர்க் கல்வெட்டுக் கூறுகிறது.

### 1) பரகேசரி கோநாட்டான் வீரசோழப் பெருமானடிகள் (942-980)

கொடும்பாளூர் இருக்குவேளிர் மரபில் "மகிமாலய இருக்குவேள் ஆயின பராந்தக வீரசோழன்" என்பவன் பராந்தக சோழனின் படைத் தலைவனாக விளங்கினான். பராந்தகன் பெயரையும், பராந்தகனின் பட்டப் பெயர்களில் ஒன்றாகிய 'வீரசோழன்' என்ற பெயரையும் பெற்றிருந்தான். அவனே முதல் கொங்கின் பிரதிநிதியாகப் பராந்தக சோழனால் நியமிக்கப்பட்டான்.

இவனுடைய கல்வெட்டு ஈரோடு மாவட்டம் காங்கயம் வட்டம் வள்ளியறச்சல் மாந்தீசுவரர் கோயிலில் இரண்டு உள்ளது. ஒன்று 6ஆம் ஆட்சியாண்டையும் மற்றொன்று 38ஆம் ஆட்சியாண்டையும் குறிக்கிறது. இவன் ஈரோட்டில் தன் பெயரால் 'மகிமாலீச்சுரம்' என்ற சிவன் கோயிலைக் கட்டினான். அவிநாசிவட்டம் ஆலத்தூரிலும் இவன் கல்வெட்டுக் காணப்படுகிறது.

### 2) இராசகேசரி வீரசோழக் கலிமூர்க்கப் பெருமாள் (980-1004)

தாராபுரம் வட்டம் பிரமியத்தில் இவனுடைய கல்வெட்டுக்கள் மூன்று கிடைத்துள்ளன. அவை 13, 17, 24ஆம் ஆட்சியாண்டைச் சேர்ந்தவை. இவனது மனைவியர்

"நம்பிராட்டியார் வரகுணமாதேவியாரான நாட்டானத்தார்,
நம்பிராட்டியார் வளவன் மாதேவியாரான இட்டில் மூத்தார்"

ஆகியோர். இருவரும் பிரமியம் கோயிலுக்குக் கொடையளித்துள்ளனர்.

### 3. பரகேசரி கலிமூர்க்க விக்கிரம சோழன் (1004-1047)

இவன் கல்வெட்டுக்கள் ஆதியூர், உலகடம், காவேரிபுரம், குண்டடம், கோனாபுரம், திங்களூர், பட்டாலி, பிரமியம், பொன்னி வாடி, மூலனூர், வள்ளியறச்சல், விசயமங்கலம் ஆகிய இடங்களில்

கிடைத்துள்ளன. இவன் மகள் விக்கிரமசோழன் சோழமாதேவியார் இறந்ததன் நினைவாக வெள்ளகோயில் கோயிலுக்குத் 'தூங்கா விளக்கு' நந்தாவிளக்கு வைத்துள்ளான். இவனது அமைச்சன் 'வடகரைத் திருக்கழுமல வளநாட்டு நந்தியநல்லூருடையான் வீரசங்காதச் சுற்றிய தேவன் வானவன் உத்தரமந்திரியாயின நானா தேசிய நாட்டுச் செட்டி' என்பவன். மற்றொரு உயர் அலுவலன் 'பெருமாள் பெருந்தனத்து அரையர்களில் நக்கன் விடங்கனான விக்கிரம சோழப் பல்லவரையன்' என்பவன்.

இவன் அமைச்சன் புதுப்பித்த விசயமங்கலம் சமணக்கோயில் 'வீரசங்காதப் பெரும்பள்ளி' எனப்பட்டது. இவன் காலத்தில் திங்களூர் சமணக்கோயிலில் மண்டபம் கட்டி 'சிங்களாந்தகன்' என்று பெயரிடப் பட்டது.

### 4. இராசகேசரி அபிமானசோழ ராசாதிராசன் [1085-1100]

இவன் கல்வெட்டுக்கள் கண்ணபுரம், பட்டாலி, பிரமியம், கீரனூர், விசயமங்கலம் ஆகிய இடங்களில் காணப்படுகின்றன. இவன் காலத்தில் பிரமியம் திருவலஞ்சுழி நாதர் கோயில் முன் மண்டபம் கட்டப்பட்டது.

### 5. பரகேசரி இராசாதிராச உத்தம சோழன் [1100-1117]

இவன் கல்வெட்டுக்கள் பிரமியம், விசயமங்கலம் ஆகிய இடங்களில் கிடைத்துள்ளன. இவனது படைத்தலைவன் பெயர் 'பெருமாள் சாமந்தரில் உரிமையாரில் கண்டுகன் அபிமான சோழ ராசாதிராசன்' என்பது. ஒரு படைவீரன் பெயர் 'பெருமாள் வாளிலாரில் கேரள கேசரி அமரபுயங்கன் அபிமான சோழ ராசாதிராசன்'' என்பது.

### 6. இராசகேசரி ராசாதிராச வீரசோழன் [1117-1138]

இவன் கல்வெட்டுக்கள் பிரமியம், விசயமங்கலம் ஆகிய இடங்களில் உள்ளன. இவன் காலத்தில் பிரமியம் காமக்காணி சோமாசி என்ற பிராமணன் ராஜத்துரோகி ஆனதால் அவனது பூமியை

அரசன் பறிமுதல் செய்தான். அரசனின் படைத்தலைவன் ‘பெருமாள் சாமந்தரில் பெரியான் சோழனான வீரசோழக் காங்கயன்’ என்பவன்.

## 7) பரகேசரி உத்தம சோழ வீரநாராயணன் (1138-1149)

இவன் கல்வெட்டுக்கள் பரஞ்சேர்வழி, கத்தாங்கண்ணி ஆகிய இடங்களில் கிடைத்துள்ளன.

பரஞ்சேர்வழியில் உள்ள வீரநாராயணப் பெருமாள் கோயில் இவன் காலத்தில் கட்டப்பட்து. காவடிக்கா நாட்டில் வீரநாராயண நல்லூர் என்ற ஊர் உள்ளது. ஒரு முகத்தலளவைக்கும் ‘வீரநாராயணன்’ என்ற பெயர் இருந்தது.

## 8) இராசகேசரி குலோத்துங்கசோழன் (1149-1168)

இவன் கல்வெட்டுக்கள் குண்டடம், கொடிவேரி, பிரமியம், மறவபாளையம், முத்தூர், விசயமங்கலம் ஆகிய ஊர்களில் கிடைக்கின்றன.

மாவலி வாணாதிராயர் மரபினர் ஒருவர் இவனிடம் படைத் தலைமையேற்றுள்ளார். பிரமியம் கல்வெட்டில் ‘‘இராசராசபுரத்தில் பெருமாள் சாமந்தரில் மாவலி வாணராயர் அழகன் சோழப் பிரானான கங்கவதரையன்’ என்று அவன் குறிக்கப்பட்டுள்ளான்.

முத்தூர் குலோத்துங்க சோழீசுவரம் இவன் பெயர் பெற்றுள்ளது. இராசகேசரி மரக்கால் இவன் காலத்தில் வழக்கில் இருந்துள்ளது.

## 9) பரகேசரி வீரசோழன் (1168-1195)

இவன் கல்வெட்டுக்கள் தாராபுரம், கீரனூர், அலங்கியம் ஆகிய ஊர்களில் கிடைத்துள்ளது. குறுப்பு நாட்டின் தென்பகுதி வீரசோழ நாடு என்று இவன் பெயரால் அழைக்கப்பட்டது. இவன் தென் கொங்குப் பகுதியையும் தன் கீழ்க் கொண்டு வந்ததால் ‘இரு கொங்கும் ஆண்ட’ என்ற பட்டப் பெயர் சூட்டிக் கொண்டான்.

விசயமங்கலம், பாரியூர், கீரனூர் ஆகிய ஊர்களில் காணப்படும் ‘திரிபுவன வீரதேவன்’ இவனே என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

## 10) இராசகேசரி குலோத்துங்கன் (1195-1207)

இவன் கல்வெட்டுக்கள் பட்டாலி, சாத்தம்பூர், கத்தாங்கண்ணி, கொங்கூர், கொடிவேரி, திங்களூர், முத்தூர் ஆகிய ஊர்களில் கிடைக்கின்றன. திங்களூர்க்குளம் இவன் காலத்தில் வெட்டப்பட்டது. தேரையூர் குலோத்துங்க சோழநல்லூர் எனப்பட்டது. சாத்தம்பூர்க் கல்வெட்டில் 'அநியாயம் அழிபிழை செய்தாரை வெட்டுதல் குத்துதல் செய்தால் அவர்கட்குத் தண்டம் தலைவிலை இல்லை' என்று எழுதப் பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

## 11) இராசகேசரி வீரராசேந்திரன் (1207-1255)

இவனது கல்வெட்டுக்கள் அலங்கியம், ஓலகடம், கண்ணபுரம், கத்தாங்கண்ணி, கீரனூர், குண்டடம், கொங்கூர், சத்தியமங்கலம், சர்க்கார்பெரியபாளையம், கொளிஞ்சிவாடி, கொடிவேரி, தாராபுரம், திங்களூர், பட்டாலி, பட்டிலூர், பிரமியம், பொன்னிவாடி, முத்தூர், வள்ளிஎறிச்சில், விசயமங்கலம் ஆகிய பல ஊர்களில் கிடைத்துள்ளன.

ஈரோடு மாவட்டத்தில் உள்ள கொங்குச் சோழர் கல்வெட்டுகள் 190இல் 100 கல்வெட்டுக்கள் வீரராசேந்திரன் காலத்தவையாகும். இவனும் 'இருகொங்கும் ஆண்ட' என்று புகழப்பட்டான். இரண்டாம் குலோத்துங்கன், வீரராசேந்திரன் ஆகியோர் பேரரசுச் சோழர் தொடர்பைக் குறைத்துக் கொண்டு பாண்டியருடன் நெருங்கிய உறவு கொண்டனர். கொங்குச் சோழர்கள் பாண்டியரை 'மருமகன்' என்றும், பாண்டியர் கொங்குச் சோழரை 'மச்சுனன்', 'மாமடி' (மாமா) என்றும் கல்வெட்டில் குறித்துக் கொள்கின்றனர்.

விசயமங்கலம் கரியமாணிக்கப் பெருமாள் கோயில் சித்திரமேழி விண்ணகரம் என்று அழைக்கப்பட்டது. இவன் 'உலகுடைய பெருமாள்' என்றும் அழைக்கப்பட்டான். மனைவி உலகுடைய பிராட்டியார், மகன் நச்சினார்க்கினியன் ஆன கண்டியதேவன் என்பவன்.

## 12) பரகேசரி விக்கிரம சோழன் (1255-1266)

இவன் கல்வெட்டுக்கள் குன்னத்தூர், பட்டாலி, பரஞ்சேர்வழி, பொன்னிவாடி, திங்களூர், விசயமங்கலம் ஆகிய ஊர்களில் கிடைக்

கின்றன. இவன் 'திருச்சிற்றம்பலமுடையான்' என்ற சிறப்புப் பெயரைப் பெற்றவன். இவனுடைய உயர் அலுவலன் ஒருவன் 'பெருமாள் முதலிகளில் கூத்தன் யாழ்வல்லான் ஆன உதயசிங்கதேவன்' என்பவன்.

## 13) பரகேசரி விக்கிரமசோழன் (1273-1304)

இவன் கல்வெட்டுக்கள் ஓலகடம், திங்களூர், பட்டாலி, பொன்னிவாடி, விசயமங்கலம் ஆகிய ஊர்களில் கிடைத்துள்ளன. வீரராசேந்திரன் காலத்தில் கொடை கொடுக்கப்பட்டு கல்வெட்டாத சில ஊர்களில் ''வீரராசேந்திர தேவர் நீர் வார்த்தபடிக்கு'' என இவன் காலத்தில் கல்வெட்டும் பொறிக்கப்பட்டது.

## பொது

கொங்குச் சோழர் காலத்தில் பல கோயில்கள் திருப்பணி செய்யப் பெற்றன. அவை சோழீசுவரம் எனப்பட்டது. முதல் மூன்று கொங்குச் சோழர் காலத்தில் கொடைகள் ஊராரிடமும், ஊர்ச் சபையிடமும் அளிக்கப் பெற்றன. சிவப்பிராமணர்கள் கோயில் காணியாளர்களாக நியமிக்கப்பட்ட பின்னர் ''குடமும் குச்சியும் கொண்டு கோயில் உள்புகுவார்'' ஆகிய சிவப்பிராமணரிடமே எல்லாக் கொடைகளும் அளிக்கப்பட்டன. ஒரு கல்வெட்டில் காணி பற்றி விளக்கப்படுகிறது. குரக்குத் தளி ஆளுடைய நாயனார். தென்னூர் ஆளுடைய நாயனார் ஆகிய கோயில்கட்கு வீரராசேந்திரச் சக்கர வர்த்தி பட்டன் காணியாளனாக நியமிக்கப்பட்டான். பூசையும், தேவகன்மிப் பேறும், எழுவன முளைப்பன உரிமையும், திருமடை விளாகத்து வேண்டும் குடிகளைக் குடியேற்றிக் கொள்ளவும் மன்றாட்டு முதன்மை பெறுதல், பண்டாரச் செலவு செய்யும் உரிமை ஆகியன கோயில் காணியுரிமை எனப்பட்டது.

அலுவலர்களும், சிவப்பிராமணர்களும் பலர் அரசன் பெயரைப் பெற்றனர். கொங்குச் சோழர் காலத்தில் ஏராளமான பெண்கள் கொடை கொடுத்தனர். பிற நாட்டவரும் அரசுப் பணியில் இருந்தனர். வீரராசேந்திரன் கல்வெட்டில் ''பெருமாள் சாமந்தரில் துங்கன்

உடையானான தெலுங்கநாடு உடையான்'' என்ற பெயர் காணப் படுகிறது.

கோயில் உரிமை இழந்த உவச்சர்கள் மீண்டும் ஓரளவு உரிமை பெற்றனர். மாதேவர் கோயில், திருமுற்றம் பிள்ளையார் கோயில், பிடாரியார் கோயில் மற்றுமுள்ள கோயில்களில் உவச்சர்க்கு நாலத் தொன்றும் (1/4) சிவப்பிராமணர்க்கு முக்கூறும் (3/4)'' வழங்கப் பட்டது என்று கல்வெட்டுக் கூறுகிறது.

திருவிளக்குக் கொடைகள் ஏராளமாக வழங்கப்பட்டன. புதுக் குளங்கள் பல வெட்டப்பட்டன. வளம் மிகுந்த கொங்கு நாட்டில் வாங்கும் சக்தி அதிகமாக இருந்ததால் பலநாட்டு வியாபாரிகள் ஈரோட்டுப் பகுதிக்கு வணிகம் செய்ய வந்தனர். ஈரோடு மாவட்டப் பொருள்களைக் கொண்டு வணிகர்களும் பிறநாடு சென்றனர். ஈரோடு மாவட்டத்தின் பொற்காலம் கொங்குச் சோழர் ஆட்சி என்று கூறலாம்.

***

# 11. கொங்குப் பாண்டியர் காலம்

(கி.பி. 1265 - 1320)

## முற்காலப் பாண்டியர்கள்

அரிகேசரி பராங்குச மாறவர்மன் (710-765) ஈரோடு மாவட்டப் பகுதியில் படைஎடுத்து வந்த போது எதிர்த்த அரசர்களை வென்று கொடுமுடிக்கு வந்து இறைவனை வணங்கிக் கொடைபல கொடுத்தான் என்று இவன் மகன் நெடுஞ்சடையன் பராந்தகனின் வேள்விக்குடிச் செப்பேடு கூறுகிறது.

''ஈண்டொளிய மணிஇமைக்கும்
எழில் அமைந்த நெடும்புரிசை
பாண்டிக் கொடுமுடி சென்றெய்தி
பசுபதியது பத்மபாதம் பணிந்தேத்தி
கனகராசியும் கதிர்மணியும்
மனமகிழக் கொடுத்திட்டு''

என்பது வேள்விக்குடிச் செப்பேட்டுப் பகுதியாகும்.

நெடுஞ்சடையன் பராந்தகன் (765-790) கொங்கு நாட்டை வென்று ''கொங்கர்கோன்'' என்று பெயர் பெற்றான். காவிரி, நொய்யல் கரையில் இவன் படை நடமாடியுள்ளது. கொங்கு மன்னனைப் பிடித்துக் கொண்டு போய் மதுரையில் சிறை வைத்தான்.

இராசசிம்மபாண்டியன் (790-792) தான் கொங்கு முதல் தேனூர் வரை வென்றதாகக் கூறுகின்றான்.

## கொங்குப் பாண்டியர்

சடையவர்மன் சுந்தரபாண்டியன் (1251-1271) சேரர், சோழர், போசளர் ஆகியோரை வென்று தன் தம்பி வீரபாண்டியனைக் கொங்கு நாட்டுக்கு ஆட்சிப் பிரதிநிதியாக நியமித்தான் என்று திருவரங்கம் வடமொழிக் கல்வெட்டுக் கூறுகிறது. அவ்வீரபாண்டியனே கொங்குப் பாண்டியர் ஆட்சியைத் தாராபுரத்தில் நிறுவி 1265 முதல் கொங்கு நாட்டை ஆட்சி புரிந்தவன்.

வென்ற அரசர்கள் தோற்ற அரசர்களின் பெயர்களைப் புனைந்து கொள்வது மரபாதலின் கொங்குப் பாண்டியர் சிலர் இராசகேசரி, பரகேசரி என்ற கோனாட்டுக் கொங்குத் தலைவர்கள் பட்டப் பெயர் களைச் சூட்டிக் கொண்டனர்.

ஈரோடு மாவட்டப் பகுதியில் வீரபாண்டியன், சுந்தரபாண்டியன், ஸ்ரீவல்லபன் ஆகியோர் பெயர் பொறித்த கல்வெட்டுக்கள் சுமார் 120 கிடைத்துள்ளன.

விசயமங்கலக் கல்வெட்டின் மூலம் 1275ல் ஆட்சி பீடம் ஏறிய ஒரு வீரபாண்டியன் பெயர் காணப்படுகிறது. 1251-1271 ஆட்சி புரிந்த சடையவர்மன் சுந்தர பாண்டியனால் நியமிக்கப்பட்ட வீரபாண்டியன் 1265ல் ஆட்சி பெற்றவன். எனவே இரண்டு வீரபாண்டியர்கள் ஈரோட்டுப் பகுதியில் ஆட்சி செய்திருக்க வேண்டும்.

ஈரோடு மாவட்டத்தில் சுந்தரபாண்டியன் கல்வெட்டுக்கள் பல ''சடையவர்மன்'' என்ற பாண்டியர் பட்டம் புனைந்தும், சில கல்வெட்டுக்கள் 'எம்மண்டலமும் கொண்டருளிய சடையவர்மன் சுந்தரபாண்டியன்' என்ற பட்டப் பெயருடனும் காணப்படுகிறது. இந்தச் சுந்தரபாண்டியனை மதுரையில் ஆட்சிபுரிந்த பேரரசன் சடைய வர்மன் சுந்தரபாண்டியன் என்பர். ஆனால் அந்தச் சடையவர்மன் சுந்தர பாண்டியன் ஆட்சி செய்தது 20 ஆண்டுகள். கொங்குச் சுந்தரபாண்டியனின் கல்வெட்டுக்கள் 28ஆம் ஆட்சியாண்டு வரை நீடிக்கிறது. எனவே அக்கல்வெட்டுக்களையும் பேரரசுப் பாண்டியர் பட்டத்தைச் சூட்டிக் கொண்ட கொங்குப் பாண்டியர் என்றே கொள்ள வேண்டும்.

1239இல் முடிசூடிப் பாண்டிய நாட்டை ஆட்சிபுரிந்த மாற வர்மன் சுந்தரபாண்டியன் கொங்கு அரசர்களை 'மச்சுனன்', 'மாமடி' (மாமா) என்ற திருமணத் தொடர்பால் உறவு கொண்டாடுகின்றான். அதனால் கோனாட்டுத் தலைவர்களான கொங்கு அரசர்களின் இறுதிக் காலத்தில் எவ்வித எதிர்ப்பும் இன்றிப் பாண்டியர்கள் தம் ஆட்சியை இங்கு தொடங்கினர்.

கொங்குப் பாண்டியர் ஆட்சிக் காலத்தில் ஈரோடு மாவட்டத்தில் அலங்கியம், அனுமன்பள்ளி, ஆதியூர், ஆறுதொழு, காங்கயம்,

காவேரிபுரம், கீரனூர், குண்டடம், கொளிஞ்சிவாடி, தலையநல்லூர், திங்களூர் முதலிய பல ஊர்களில் திருப்பணிகள் நடைபெற்றதாகக் கல்வெட்டுக்கள் மூலம் அறிகின்றோம். திங்களூர் அழகப் பெருமாள் கோயில் 'வீரபாண்டிய விண்ணகரம்' என்ற பெயரால் அழைக்கப் பட்டது. குன்னத்தூர் லட்சுமிநாராயணப் பெருமாள் கோயில் 'சுந்தர பாண்டிய விண்ணகரம்' எனப்பட்டது. நிலம், நாடு, ஊர், கோயில், அளவு போன்றவை சோழர் பெயரில் இருந்தவை பாண்டியர் நாளிலும் தொடர்ந்து வழக்கத்தில் இருந்தது. இது பாண்டியர் - சோழர் உறவைக் காட்டுகிறது.

சர்க்கார் பெரியபாளையம், எலத்தூர், விசயமங்கலம், திங்களூர், பாரியூர் போன்ற பல ஊர்களில் பாழ்பட்ட பழைய குளங்கள் சீர் செய்யப்பட்டன. புதுப்பித்த விசயமங்கலம் வாகைக்குளம் 'வீரபாண்டியப் பேரேரி' என்று அழைக்கப்பட்டது. அணைகள், குளங்கள், வாய்க் கால்கள் இரவும் பகலும் உலவிப் பார்த்து சேதம் இல்லாமல் கண் காணிக்கப்பட்டது. புதுக்குளங்கள் வெட்டப்பட்டன. பவானி தொடங்கி கொடுமுடி ஆவுடையாபாறை வரை செல்லும் காலிங்கராயன் கால்வாய் 1282ஆம் ஆண்டு வீரபாண்டியன் அமைச்சன் காலிங்கராயனால் வெட்டி முடிக்கப்பட்டது. காடழித்து நாடாக்கி மக்கள் குடியேற்றப் பட்டனர்.

1285இல் ஆட்சி பீடம் ஏறிய சுந்தரபாண்டியனின் ஆட்சியாண்டு 30 ஆண்டுகள் நீடித்தது. வடகரை நாடு, பூந்துறை நாடு, காங்கய நாடு, நறையனூர் நாடு, தென்கரை நாடு, குறுப்பு நாடு, வீரசோழபுர நாடு ஆகிய நாடுகளில் ஏறக்குறைய ஈரோடு மாவட்டப் பகுதி முழுவதற்கும் சிவாலயங்களின் ஒட்டச்சு (ஒப்புக் கொண்ட வரி) குறைக்கப்பட்டது. தாழ்த்தப்பட்ட மக்கள் பல உரிமைகளை அடைந் தனர். கோயில் கடமைகள் மிக நேர்மையாகச் செலுத்தப்பட்டன. பாண்டிய நாட்டு வணிகர்களும், பெருமக்களும் ஈரோடு மாவட்டக் கோயில் களுக்குத் திருப்பணியும் பொருள் உதவியும் தாராளமாகச் செய்தனர். பொதுவாக எவ்விதக் குறையும் இன்றி நல்லாட்சி நடைபெற்றது.

❊❊❊

# 12. போசளர் காலம்

(கி.பி.1291 - 1342)

மேலைச் சளுக்கியர் ஆட்சிக்குப் பின் சாசகபுரம் என்ற சோசவூரைச் சேர்ந்த யாதவர்களில் இராச்சயமல்லப் பெருமானடி' என்னும் சிறப்புப் பெயரைப் பெற்ற நிருபகாமன் (கி.பி. 1022-1040) கருநாடக மாநில ஹாசன் மாவட்ட வேளூரில் போசள மரபைத் தோற்றுவித்தான். அடுத்து வந்த போசளமன்னன் வினயாதித்தன் (கி.பி.1040-1100) தலைநகரை ஹளேபீடு என்னும் துவாரசமுத்திரத்திற்கு மாற்றினான்.

'கொங்கதேச ராசாக்கள்' என்னும் பழைய வரலாற்று நூல் போசளன் முதலாம் வல்லாளன் (கி.பி.1093) 'கொங்கு பாளையக் காரரை செயித்தான்'' என்றும், நரசிங்கராயன் (கி.பி. 1172) இரண்டாம் வல்லாளன் (கி.பி.1174) ஆகியோர் கொங்கு நாட்டில் கப்பம் வாங்கினர் என்றும் கூறினாலும் காவிரிக்கு மேற்கே இருக்கிற கொங்குப் பகுதியில் ஈரோடு, கோவை மாவட்டங்களில் அதற்குரிய சான்றுகள் எதுவும் கிடைக்கவில்லை.

இறுதி அரசனான மூன்றாம் வீரவல்லாளன் (கி.பி.1291-1344) ஆட்சி ஈரோடு மாவட்டத்தில் நடந்தது. தொறவலூர் என்ற டணாயக்கன் கோட்டை முதல் தாராபுரம் வரை அவன் கல்வெட்டுக்கள் பரவிக் கிடக்கின்றன. அந்தியூர், அயிலூர், அறச்சலூர், ஆதியூர், இராமக் கராம்பாளையம், ஈரோடு, ஊராட்சிக்கோட்டை, எலத்தூர், கத்தாங் கண்ணி, குன்னத்தூர், கூகலூர், சிலம்பூர், சிவகிரி, நம்பியூர், பட்டிலூர், பருவாச்சி, பாரியூர், பெருந்தலையூர், மறவபாளையம், மொசக்குத்தி வலசு, விசயமங்கலம், டணாயக்கன்கோட்டை ஆகிய ஊர்களில் மூன்றாம் வீரவல்லாளன் கல்வெட்டுக்கள் 37 உள்ளன. வீரவல்லாளன் திருவண்ணாமலையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்தான்.

ஈரோட்டுக் கல்வெட்டில் இவன் 'பிரதாபச் சக்கரவர்த்தி போஜள புஜபல'' என்ற பட்டங்களுடன் அழைக்கப்படுகிறான். இஸ்லாமியத்

தலைவன் மாலிக் காபூர் படையெடுப்பால் அழிந்து போன சிலம்பூர் (எண்ணமங்கலம்) பந்தீசுரமுடையார் கோயில் கி.பி. 1334இல் திருப்பணி செய்யப்பட்டது.

ஈரோடு வட்டம் சாத்தம்பூர் சிவன் கோயிலும், பெருந்துறை வட்டம் ஈங்கூர்ச் சிவன் கோயிலும் 'வல்லாள ஈசுவரன் கோயில்' என்று அழைக்கப்படுகின்றன.

இவன் மகாபிரதானி 'மோடகுலைய கமல மார்த்தாண்ட சித்கர கண்ட இம்மடி இராகுத்தராய மாதப்ப தண்டநாயகன்' என்பவன். இவன் தொறவலூரில் கோட்டை கட்டி அதிகாரம் செலுத்தித் தன் பெயரால் கல்வெட்டுக்களும் பொறித்துக் கொண்டான். அக் கோட்டை 'நீலகிரி சாதாரன் கோட்டை', 'சித்கரகண்டன் கோட்டை' 'தண்டநாயகன் கோட்டை' என்றெல்லாம் அழைக்கப்பட்டது. இன்று 'டணாயக்கன்கோட்டை' என்று அழைக்கப்படுகிறது.

டணாயக்கன்கோட்டையில் மாதப்ப தண்டநாயகன் மூத்தமகன் வீரசிக்கய தண்ட நாயகன் தன் தந்தை பெயரால் ''மாதவப் பெருமாள் கோயில்'' கட்டினான். அதற்கு வடகரை நாட்டார் முடுதுறை, ஆப்பக் கூடல், திருக்கம்பூர், புலியூர், ஈங்கூர், பாலத்தொழு, பாப்பினி, புத்தூர், இடிகரை முதலிய ஊர்களைக் கொடையாக விட்டனர்.

பாப்பினிக்கும் 'கொங்கரமாரி மாதவநல்லூர்' என்று பெயரிடப் பட்டது. வீரசிக்கய தண்ட நாயகனுக்கு இரேச்சயன், சிங்கயன் என இரு தம்பியர் இருந்தனர். அவர்களும் மகாபிரதானி ஆகித் தங்கள் பெயரால் கல்வெட்டுக்களைப் பொறித்துக் கொண்டனர். சிங்கய தண்டநாயகன் ஆப்பக்கூடல் மானியத்தைத் திருவரங்கம் கோயி லுக்கு மாற்றி விட்டான்.

இவர்கள் கல்வெட்டுக்கள் ஆப்பக்கூடல், டணாயக்கன் கோட்டை, மறவபாளையம், பாப்பினி, விண்ணப்பள்ளி ஆகிய ஊர்களில் உள்ளன. தற்போது டணாயக்கன்கோட்டை முழுவதும் பவானிசாகர் அணை யில் மூழ்கிவிட்டது.

மகாபிரதானி மாதப்ப தண்டநாயகன், அவன் மூன்று மக்கள் ஆகியோர் ஆட்சி ஈரோட்டுப் பகுதியில் மக்கள் போற்றும் வண்ணம் நடைபெற்றிருக்க வேண்டும். பல கோயில்களில் 'சித்கரகண்டன் சந்தி', 'இராகுத்தராயன் சந்தி' என்ற பெயரில் வழிபாட்டுக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. பல ஊர்கள் 'சித்கரகண்ட நல்லூர்', 'இராகுத்தராய நல்லூர்' என்று அழைக்கப்பட்டன.

மாலிக்காபூரால் தோற்கடிக்கப்பட்டு வீரவல்லாளன் தன் தலைநகரை இழந்து துன்பப்பட்டான். இருப்பினும் கி.பி. 1342 வரை அவன் கல்வெட்டுக்கள் தொடர்ந்து ஈரோடு மாவட்டம் முழுவதும் காணப்படுகின்றன.

❋❋❋

# 13. மதுரை சுல்தான்கள் காலம்

(கி.பி. 1329 - 1365)

டில்லியில் ஆப்கானிய முகமதியரான அலாவுதீன் கில்ஜி மாலிக்காபூர் என்ற தன் படைத்தலைவனை 1310ஆம் ஆண்டு பெரும் படையோடு தென்னகம் அனுப்பினார். ஈரோடு மாவட்டப் பகுதி அதனால் பாதிக்கப்பட்டது.

பத்தாண்டுகளுக்குப் பின் குஸ்ருகான் என்ற டில்லிப் படைத் தலைவன் படையெடுப்பாலும் ஈரோடு மாவட்டம் பாதிக்கப்பட்டது. முகமது துக்ளக் காலத்தில் 1327இல் மீண்டும் முகமதியப்படை ஈரோடு மாவட்டம் வழியாக மதுரை சென்றது. 1329இல் ஜலாலுதீன் அசன்சா என்பவர் மதுரையில் சுல்தான்கள் ஆட்சியை நிறுவினார். டில்லி சுல்தானின் பிரதிநிதியாக இருந்த அவர் 1335 முதல் சுயேச்சையாக மதுரையில் ஆட்சி புரியத் தொடங்கினார். விசயநகர மன்னர் கம்பண உடையார் வருகையால் மதுரை சுல்தான்கள் ஆட்சி மறைந்தது.

முகமதியப்படையெடுப்பால் சில கோயில்கள் சேதமுற்றன. அவை போசளர், விசயநகர அரசர்கள், உம்மத்தூர்த் தலைவர்கள் காலத்தில் திருப்பணிகள் செய்யப்பட்டன என்று கல்வெட்டுக்கள் கூறுகின்றன. சடையம்பாளையம், தாராபுரம், கொளிஞ்சிவாடி, கொடுவாய்க் கல்வெட்டுக்கள் முகமதியர்களால் ஏற்பட்ட அழிவைக் கூறுகின்றன.

1373ஆம் ஆண்டு தாராபுரம் வட்டம் சடையம்பாளையம் ''நாகீசுவரர் ஆவுடையார் துலுக்கர் வாணத்தில் இறங்கல்பட்டுப் புதியதாக ஆவுடையார்'' அமைக்கப்பட்டதாக வீரகம்பண்ண உடையார் கல்வெட்டுக் கூறுகிறது.

அதே சடையம்பாளையத்தில் 1373 ஆம் ஆண்டு ''குறையூரில் வடுகப்பிள்ளையார் துலுக்கர் வாணத்தில் துன்பப்படுகையில் இந்த

இழிவு தீர்வித்து ஏறி அருளப் பண்ணுவித்தேன்'' என்று நாகீசுவரன் கோயிலில் உள்ள வீரகம்பண்ண உடையார் கல்வெட்டுக் கூறுகிறது.

தாராபுரம் உத்தம வீரராகவப் பெருமாள் கோயிலில் உள்ள 7.8.1387ல் வெட்டப்பட்ட இரண்டாம் அரிகர உடையார் (1386 -1397) கல்வெட்டு,

''கொங்க மண்டலத்து நரையனூர் நாட்டுப் பிரதான ராசதானி யான ராசராசபுரத்து ராஜ்ய அபிஷேக கர்த்தரான பெருமாள் உத்தம வீரராகவப் பெருமாள் என்னும் திருநாமம் உடைய ராஜ்ய அபிஷேக விண்ணகரம் பெருமாள் உடைய திருக்கோயில் முன்பே துலுக்கர் வாணமாய் இறந்து துலுக்கர் பள்ளியாய் ஸ்தானம் தெரியாது போன இத்தை மீண்டும் பழையிலும் காட்டில் அதிசய ஸ்தானமாக பிரதிஷ்டை பண்ணி கர்ப்பக் கிரகம், அர்த்த மண்டபம், அந்தராள மண்டபம், மகா மண்டபம், சேனை முதலியார் கோயில, இரண்டு சோபானம், மேற்கில் மண்டபம், திருமடைப்பள்ளி, திருவாசல் இவை யும் சமைப்பித்து முன்பே இறங்கல் போன பெருமாள் சேனை முதலியார் இவர்களையும் ஏறியருளுவித்து பூர்வத்தில் ராசாக்கள் காலத்தில் உண்டாயிருந்த திருவிளையாட்டம் இறங்கல் மீட்டுண் டாக்கி வைத்து இந்நாட்டு இடைகுளம் நான்கு எல்லையிலுள்ள சமஸ்தப் பிராப்தியும் பூர்வ பிரகாரத்திலே சர்வமானியமாய்க் குடுத்து'' என்று கூறுகிறது.

தாராபுரம் வட்டம், கொளிஞ்சிவாடியிலேயுள்ள சொக்கநாதர் கோயிலில் உள்ள இரண்டாம் தேவராயனின் (1419-1451) 1440 ஆம் ஆண்டுக் கல்வெட்டு,

''நரையனூர் நாட்டு உடைய பிராட்டிச் சதுர்வேத மங்கலத்து நாயனார் அழகிய சொக்கனார் கோயில் துலுக்க வாணத்திலே இறங்கல்பட்டு மாயநாயனார்க்குத் தன்மமாக தரங்கையா மன்றாடியார் திருப்பணி செய்விக்கையில்'' என்று கூறுகிறது.

கொடுவாய் கல்வெட்டு ''விண்ணிறைந்த பெருமாள் கோயில் துலுக்க வாணத்திலே இறந்து சீர்ணமாயி அனைத்தாண்டும் பாழாய்க்

கிடக்கையில் இப்பொழுது உபானம் முதல் பஞ்சாங்கம் முதலாக சாந்து சாத்திக் கிடந்த கல்லும் எடுத்துக்கட்டி முடித்து கோயிலும் கட்டி முகிப்பித்து பூருவத்தில் மணப்படை வீட்டில் எழுந்தருளியிருந்த பெருமாளையும் எழுந்தருளுவித்து பிரதிஷ்டையும் பண்ணுவித்து'' என்று கூறுகிறது. போரினால் அழிவு ஏற்படுவது இயல்பு.

மதுரை சுல்தான்கள் ஆட்சி ஈரோடு மாவட்டத்தின் தெற்குப் பகுதி வரை பரவியிருக்க வேண்டும். தாராபுரம் வட்டம் அலங்கியம் கலியுகக் கண்ணீசுவரர் கோயில் கல்வெட்டில் மதுரை சுல்தான் காலக் கல்வெட்டு உள்ளது.

> ''எம்மண்டலமுங் கொண்டருளிய வீரசுல்தானுக்கு
> யாண்டு 751''.

என்று ஹிஜ்ரி ஆண்டை அக்கல்வெட்டுக் குறிக்கிறது.

****

# 14. விசயநகர அரசுக் காலம்

(கி.பி. 1364 - 1642)

டில்லி முகமதியர்கள் தெற்கே வந்ததால் துவாரசமுத்திரம் போசளர் அரசு மறைந்தது, முகமதியர்கள் தெற்கே பொருள் ஆசையால் வந்தார்களேயன்றி ஆட்சிபுரிய வரவில்லை.

போசளரிடம் 'சங்கமன்' என்ற யாதவ குலத்தினன் குறுநிலத் தலைவனாக விளங்கினான். அவனுக்கு நான்கு ஆண் மக்கள் இருந்தனர். அவர்களில் ஹக்க, புக்க என்ற இருவர் துங்கபத்திரை நதிக்கரையும் வேட்டையாடச் சென்ற போது வித்யாரண்யர் என்ற முனிவர் பழைய கிஷ்கிந்தை இருந்த இடமாகிய பம்பா நதிக்கரையில் இந்து அரசு தோற்றுவித்து நாட்டைக் காக்குமாறு கூறினார். 1336ஆம் ஆண்டு அங்கு அவர்களால் அரசு நிறுவப்பட்டது. 'வித்யாரண்யபுரம்' என்பது விஜயநகர் என வெற்றித் திருநகர் ஆயிற்று. ஹக்க - ஹரிஹரன் என்று பெயர் மாற்றிக் கொண்டார். புக்க - புக்கண உடையார் ஆனார்.

வீர விசைய புக்கண உடையார் (1364-1377) முதல் ஆட்சி யாண்டுக் கல்வெட்டு காங்கயம் வட்டம் வள்ளிஎறிச்சலில் காணப் படுகிறது. புக்கண உடையார் காலத்தில் அவருடைய மற்றொரு சகோதரன் வீர கம்பண உடையார் மதுரை வரை படையெடுத்து வந்து மதுரை சுல்தான்களை வென்றார்.

புக்கண உடையார் மகன் இரண்டாம் அரிகரன் கல்வெட்டு (1377-1404) தாராபுரத்தில் உள்ளது. 'பிரதான இராசதானி'யான தாராபுரம் உத்தம வீரராகவப் பெருமாள் கோயிலுக்கு ''இராஜ்ய அபிஷேக விண்ணகரம் பெருமாள்'' என்று பெயர். துலுக்க வாணத்தால் அக் கோயில் பள்ளி வாசலாக மாற்றப்பட்டிருந்தது. 1387இல் வீர அரியண உடையார் அக்கோயில் முழுவதையும் மீண்டும் பழையதை விட நன்றாகக் கட்டி, இறைபடிமங்களையும் எழுந்தருளுவித்து ''பூர்வத்தில் இராசாக்கள் நாளில் உண்டாயிருந்த'' கொடைகளை மீண்டும் அளித்தார்.

இரண்டாம் அரிகரன் பேரனும், முதலாம் தேவராய உடையார் (1406-1422) மகனுமான மூன்றாம் அரிகரன் இளவரசனாக ''குமார

அரிகர உடையார்'' என்ற பெயரில் கல்வெட்டுக்களைப் பொறித்துள்ளார். விசயமங்கலம் (1412) மடவளாகம் (1408) ஆகிய ஊர்களில் அவர் கல்வெட்டுகள் உள்ளன.

இரண்டாம் தேவராய உடையார் (1422-1445) பிரபுடதேவர் எனப் புகழப்பட்டவர். அவர் காலத்தில் காரியத்துக்குக் கர்த்தர் மாய நாயக்கர் நன்மைக்காக 1441ஆம் ஆண்டு கொளிஞ்சிவாடி அழகிய சொக்கனார் கோயிலைப் பதுப்பித்து ஊரவர் வசமிருந்த மானிய பூமிகளையும் தரங்கைய மன்றாடியார் கோயிலுக்கு அளிக்கச் செய்தார்.

சிவகிரி, தளவாய்பட்டணம் கோயில்கள் தேவராய உடையார் காலத்தில் புதுப்பிக்கப்பட்டன. பவானி வட்ட வரதநல்லூர், ஓரிச்சேரி ஆகிய இடங்களில் கன்னடிய பிராமணர்களுக்கு அக்கிரகாரங்கள் அளிக்கப்பட்டன.

இரண்டாம் தேவராயன் இளையமகன் மல்லிகார்ச்சுன ராயர் (1447-1465) கல்வெட்டுக்கள் காங்கயம் வட்டம், வெள்ளகோயில், நத்தக்காடையூர் ஆகிய ஊர்களில் இருக்கின்றன. இரண்டாம் விருபாட்சன் (1465-1485) கல்வெட்டு ஈரோடு வட்டம் நசியனூரில் உள்ளது.

கிருஷ்ண தேவராயர் (1509-1529) உம்மத்தூர்த் தலைவனை வென்று கொங்கு நாட்டுக்குப் பருவதராகுத்தன் என்பவனை ஆட்சியாளனாக நியமித்தார். அவன் கல்வெட்டு ஈரோட்டில் உள்ளது (1511).

கிருஷ்ண தேவராயர் தளவாய் கொண்டமரசர் பெயர் காங்கயம் வட்ட ஆறுதொழு (1526), காடையூர் ஆகிய ஊர்க் கல்வெட்டுக்களில் காணப்படுகிறது. கொங்கு நாட்டு அதிகாரி வாலராச உடையார் ஆறுதொழு, பவானி, காடையூர்க் கோயிலில் திருப்பணிகள் மேற்கொண்டு கொடையும் அளித்துள்ளார். மருதுறை ஆலால சுந்தரர் மடத்திற்கும், அக்காலத்தில் கொடைகள் அளிக்கப்பட்டன. அடுத்து அச்சுத தேவராயர் (1529-1542) ஆட்சிக்கு வந்தார்.

ஊஞ்சலூர், எறகணஹள்ளி, அலங்கியம், கீரனூர், நசியனூர், அறச்சலூர், பிடாரியூர் ஆகிய ஊர்களில் அச்சுதராயர் கல்வெட்டுக்கள்

உள்ளன. கிருஷ்ணதேவராயரின் கொங்குப்பகுதி அதிகாரி வாலய தேவராசா அச்சுததேவராயர் காலத்திலும் பணியில் இருந்துள்ளார். அவர் பெயர் கீரனூர், அலங்கியம் கல்வெட்டில் காணப்படுகிறது. அவர் 'தட்சிணபுஜம்' என்று சிறப்பிக்கப்படுகிறார். அச்சுதராயர் அதிகாரிகள் கோவிந்தராயர், திம்மாதராயர் ஆகியோர் அறச்சலூர், அலங்கியம் கல்வெட்டில் குறிக்கப்படுகின்றனர். பிடாரியூரில் உள்ள மதுரை விசுவநாத நாயக்கர் கல்வெட்டில் அச்சுததேவமகாராயர் குறிக்கப் பெறுகிறார். குருக்கபாளையம் மேலை மடம் ஞானசிவாச்சாரி யாருக்குக் கொடைகள் அளிக்கப்பட்டன (1532).

அச்சுததேவராயர் தம்பி ரங்கராயன் மகன் சதாசிவராயர் அடுத்து ஆட்சிக்கு வந்தார் (1542-1570). அவர் காலத்தில் பூந்துறைக் கோயில் திருப்பணி செய்யப்பட்டது. அதிகாரிகள் காரியத்துக்குக் கர்த்தர் இராமராசேந்திரர், கந்தாசாரம் திம்மராசையன், இராசேந்திர புரம் சங்கப்பையன் ஆகியோர் குறிக்கப் பெறுகின்றனர். தாராபுரத்தில் சதாசிவராயரின் இரண்டு கன்னடக் கல்வெட்டுக்கள் உள்ளன.

1565ல் நடைபெற்ற தலைக்கோட்டைப் போரில் சதாசிவராயர் தோல்வியடையவே விசயநகர ஆட்சி வலிமை இழந்தது. மைசூர் உடையார்களிடம் ஆட்சியைப் பறிகொடுத்த கடைசி விசயநகர மன்னன் மூன்றாம் சீரங்கன் (1642-1672) 1663இல் மைசூர் தொட்ட தேவராயனுடன் இறுதிப்போரில் தோல்வியுற்று 1663இல் மதுரை சொக்கநாத நாயக்கரிடம் அடைக்கலம் அடைந்தார்.

சொக்கநாத நாயக்கர், செஞ்சி - தஞ்சை மராட்டியத் தலை வர்கள், மதுரை நாயக்கரின் ஈரோடு ஜாகீர்தார் அய்யப்ப நாயக்கன் ஆகியோருடன் தொட்டதேவராயன் தளபதி சிக்கதேவராயனுடன் மூன்றாம் சீரங்கன் ஒரு லட்சம் காலாட்படையோடு ஈரோட்டில் போரிட்டுத் தோல்வியடைந்து இறுதிக் காலத்தில் இக்கேரி சென்ற சீரங்கன் 1672இல் மரணமடைந்தார். முன்னூறு ஆண்டுகாலம் ஆட்சி புரிந்த விசயநகரப் பேரரசில் ஈரோடு மாவட்டப்பகுதி சுமார் 150 ஆண்டுக் காலமே அவர்கள் கையில் இருந்தது.

❋❋❋

# 15. உம்மத்தூர் தலைவர் காலம்

(கி.பி. 1489-1527)

மத்திய அரசு வலிமை குன்றும் பொழுதெல்லாம் அரசப் பிரதி நிதிகளும் சிற்றரசர்களும் சுயேச்சையாக நிர்வாகம் செய்வது வழக்கம். விசயநகர மன்னன் இரண்டாம் தேவராயனுக்குப் பின் வந்தோர் வலிமையற்று இருந்த காரணத்தால், விசயநகரப் பிரதிநிதியாக இருந்த உம்மத்தூர்த் தலைவர்கள் தாங்களே கொங்கு நாட்டை சுயேச் சையாக ஆளத் தொடங்கினர்.

## வீர நஞ்சராய உடையார் [1489-1500]

இவன் உம்மத்தூர்த் தலைவர்களின் முதல்வன். இவன் பெயர் பொறித்த கல்வெட்டுக்கள் ஈரோடு மாவட்டத்தில் அந்தியூர், ஆறுதொழு, குன்னத்தூர், கொளிஞ்சிவாடி, சர்க்கார் பெரியபாளையம், டணாயக்கன் கோட்டை, நசியனூர், மறவபாளையம், வெள்ளோடு ஆகிய இடங்களில் கிடைக்கின்றன.

முதலில் 'மகாமண்டலேசுவரன்' என்று மட்டும் தன்னைக் கூறிக்கொண்ட வீரநஞ்சராயன் பின்னர் வீரப்பிரதாபன், புஜபலராயன், சமஸ்த ஜகதாதிபதியப்பன் முதலிய பட்டங்களைச் சூட்டிக் கொண் டான். இராமைய நஞ்சைய தேவன், தென்கடம்பை ஒன்னக்கன் செட்டி ஆகியவர்களை காரியத்துக்குக் கர்த்தராக நியமித்த நஞ்சராயன் தாரமங்கலம் கெட்டி முதலியார், சேவூர் ஆண்ட மன்றாடியார், பழைய கோட்டை சர்க்கரை மன்றாடியார் போன்றவர்களை மதித்துப் பொறுப்புக்கள் கொடுத்தான்.

முற்றிலும் அழிந்துகிடந்த கொடுவாய்க் கோயிலைப் புதுப்பித்து பழைய கல்வெட்டுக்களையும் வெட்டி வைத்தான். நசியனூர், வெள்ளோடு சிவாலயங்கள் திருப்பணி செய்யப்பட்டன. கொடிவேரி அணையைப் பவானியைத் தடுத்துக் கட்டினான். நெருஞ்சிப் பேட்டை அருகே காவிரியைத் தடுத்து அணை கட்டிய முதல்வன்

இவனேயாவான். இவன் சர்க்கார் பெரியபாளையத்தில் நள்ளாற்றில் அணையும் குளமும் ஏற்படுத்தினான். முறையே நஞ்சராயன் அணை, நஞ்சராயன் குளம் என்று பெயர் பெற்றுள்ளன. 24 கொங்கு நாட்டுச் செட்டியார்களையும் கூட்டி ஆலயப்பணிகள் செய்ய வைத்தான்.

கொடுமணல் பட்டயம், காரையூர்ச் செப்பேடு, தொறவலூர்ச் செப்பேடு ஆகியவை நஞ்சராயன் காலத்தவை. பாலவேளாளர் அதி காரத்தில் இருந்த தொறவலூரை செம்பெரிச்சிக்கவுண்டருக்கு அளிக்கச் செய்து அவரைப்பட்டக்காரர் ஆக்கினான்.

## வீரசிக்கராய உடையார் [1500-1527]

இவன் நஞ்சராய உடையார் மகன். இவன் கல்வெட்டுக்கள் ஈங்கூர், ஈரோடு, குறிச்சி ஆகிய இடங்களில் உள்ளன. இவன் காலத்தில் நஞ்சப்பராயர் என்பவர் பிரதானியாக இருந்தான். இவன் இறுதிக் காலத்தில் வீரராய தேவக்க மாரைய நாயக்கன் என்ற அதிகாரி சுயேச் சையாகக் கல்வெட்டுக்களைப் பொறிக்கத் தொடங்கினான். இவன் விசயநகர விருதுகள் பலவற்றைப் புனைந்துகொண்டான்.

## நஞ்சண உடையார் [1527-1540]

இவனுக்கும் வீரசிக்கராய உடையார்க்கும் என்ன உறவு என்பது தெரியவில்லை. இவன் தந்தை அரிகரராயன் என்பவர். நஞ்சண உடையார் காலத்தில் நயினார் இராகுத்தப் பெருமாள் என்ற பாண்டியர் வழிவந்த ஒருவன் குறுப்பு நாட்டுப் பகுதியில் அதிகாரம் செலுத்தி யுள்ளான். அவர் ''திரிபுவனத்து ராசாக்கள் தம்பிரானார் பராக்கிரம பாண்டிய தேவர் திருமகன்'' என்று கூறப்படுகிறார். இவர் ஒரு சிறு பகுதியைப் பெயரளவுக்கு நிர்வாகம் செய்தார்.

***

# 16. மதுரை நாயக்கர் காலம்

(கி.பி. 1629 - 1708)

கிருஷ்ண தேவராயர் காலத்தில் (1509-1529) விசயநகரப் பேரரசு வடக்கே கிருஷ்ணா நதி முதல் தெற்கே கன்னியாகுமரி வரை பரவியிருந்தது. நாட்டை ஆறு ராஜ்யங்களாகப் பிரித்து ஆறு பிரதி நிதிகளை (நாயகன்) நியமித்தார். மதுரை ராஜ்யத்திற்கு கொட்டியம் நாகம நாயக்கரை ஆட்சியாளராக நியமித்தார்.

நாகமநாயக்கர் வரிப்பணத்தை முறையாகப் பேரரசுக்குச் செலுத்தவில்லை. விசயநகர ஆணைக்கும் அடங்கவில்லை. எனவே கிருஷ்ணதேவராயர் ஆணையால் நாகமநாயக்கர் மகன் விசுவநாத நாயக்கரே தன் தந்தையை வென்று அடக்கி விசயநகரம் கொண்டு சென்றார்.

கிருஷ்ணதேவராயர் விசுவநாத நாயக்கரையே மதுரை ஆட்சி யாளனாக நியமித்தார். 1529இல் விசுவநாதன் ஆட்சி மதுரையில் தொடங்கியது. 1736இல் விசயரங்க சொக்கநாத நாயக்கரின் மனைவி மீனாட்சி வரை 13 அரசர்கள் மதுரையை ஆட்சிபுரிந்தனர்.

பாண்டிய நாட்டை ஆட்சி புரிந்த காரணத்தால் அவர்கள் மீன் சின்னத்தைப் பொறித்துக் கொண்டனர். பெங்களூர் அருங்காட்சியகச் சின்னம் ஒன்றில் மீன்சின்னத்துடன் விசுவநாத பாண்டியன் என்ற வாசகமும் உள்ளது.

விசுவநாத நாயக்கர் (1529-1564)

முதலாம் கிருஷ்ணப்ப நாயக்கர் (1564-1572)

வீரப்பநாயக்கர் (1572-1595)

இரண்டாம் கிருஷ்ணப்ப நாயக்கர் (1595-1601)

முத்து கிருஷ்ணப்ப நாயக்கர் (1601-1609)

முதலாம் முத்து வீரப்பநாயக்கர் (1609-1623)

திருமலை நாயக்கர் (1623-1659)

இரண்டாம் முத்துவீரப்பநாயக்கர் (1659)

சொக்கநாத நாயக்கர் (1659-1682)

ஆகியோர் ஆட்சிக் காலங்களில் ஈரோடு மாவட்டப் பகுதி மதுரை நாயக்கர்கட்கு உள்பட்டிருந்தது.

1529ல் மதுரை ஆட்சிக்கு வந்த விசுவநாத நாயக்கர் பேரறிவு மிக்க தன் தளவாய் அரியநாத முதலியார் அறிவுரைப்படி தன் நாட்டை 72 பாளையப்பட்டுக்களாகப் பிரித்தார். அதற்கு மதுரைக் கோட்டையில் 72 கொத்தளங்கள் இருந்ததே காரணம். ஒவ்வொரு கொத்தளமும் ஒவ்வொரு பாளையக்காரர் பொறுப்பில் பாதுகாக்க விடப்பட்டன.

இதனை மெக்கன்சியின் ஆவணம் ஒன்று கீழ்வருமாறு கூறுகிறது.

> ''பாண்டியன் தேசம் மதுராபுரிக்கு விசுவநாத நாயக்கர் அவர்களுக்குப் பட்டாபிஷேகமானதின் பின்பு தளவாய் அரியநாத முதலியார் அவர்களும் விசுவநாத நாயக்கரும் இருபேருமாக மதுராபுரிக்கு வந்து முன் பாண்டியன் போட்டிருந்த கோட்டையைச் சுற்றி விலாசமாய் 72 கொத்தளத்துடனே கோட்டை போட்டு 72 கொத்தளத்துக்கும் 72 பாளையக்காரரையும் நேமுகம் செய்குறது. திருமஞ்சனவாசலுக்குப் பிரதட்சணமாய் வடக்கு மூலையில் அன்பதாங் கொத்தளம் காக்கச் சொல்லி''

என்பது ''அம்மைய நாயக்கனூர் ஜமீன்தாரி வம்சாவளி' ஆவணப் பகுதியாகும்.

72 பாளையப்பட்டுக்காரர்களாக ஏற்கனவே இருந்த அவ்வப் பகுதித் தலைவர்களும், விசுவநாதன் படையுடன் வந்த முக்கிய நாயக்கப் படைத் தலைவர்களும் நியமிக்கப்பட்டனர்.

''நாகமநாயக்கரவர்கள் குமாரன் விசுவநாத நாயக்கன் படை வெட்டப் போறமுன்னுக்கு எங்களுடைய பெரியவர் பெஞ்சம நாயக்கரும் எங்கள் சனமும் கூடப் போய்ப் பாளையத்தில் அனேகம்

சண்டை செய்து அநேக ஜனங்களை இறக்கக் குடுத்து அவர்களையும் செயித்து உத்தரவாதம் பண்ணினதில் விசுவநாத நாயக்கர் அவர் களுக்குச் சந்தோஷம் வந்து எங்களுக்கு அனேகம் வெகுமதியும் செய்து சிறிது கிராமமும் பூமியும் விட்டுக் கொடுத்து உன் சேவகம் இருக்கட்டுமென்று உத்தரவு கொடுத்தார். மதுராபுரிக்கு வடமேற்குச் சிறுமலையும் அதில் சேர்ந்த நெல்வழிக் கிராமங்களும் விட்டுக் குடுத்து அதுக்கு நாமகரணம் அம்மையநாயக்கன்பாளையம் என்று பேருங்குடுத்து சிறுமலை அடிவாரத்தில் கோட்டை போட்டுக் குடுத்தார்'' என்பது ஒரு ஆவணப் பகுதியாகும்.

இதே போல் ஊத்துக்குளி பாளையக்காரர் 51ஆம் கொத்தளத் தைக் காத்ததாகவும், தவசிமேடு சோத்தளநாயக்கர் 72ஆம் கொத்தளத் தைக் காத்ததாகவும் கூறிக்கொள்கின்றனர். புதிய-பழைய தலைவர் களின் பாளைய எல்லைக்குள் இல்லாத மற்ற பகுதிகள் மதுரை நாயக்கரின் நேரடி ஆட்சியில் இருந்தன.

விசுவநாத நாயக்கர் காலத்தில் நாயக்கருக்கு உள்படாமல் கலகம் விளைவித்த திருநெல்வேலி அஞ்சுராசாக்களை நாயக்கர் சார்பில் சென்று அடக்கி ஊத்துக்குளி நஞ்சையகாலிங்கராயர் ''பராக்கிரம'' பட்டம் பெற்றதாகக் கூறிக் கொள்கிறார்.

திருமலைநாயக்கர் காலத்தின் தளவாய் இராமப்பய்யன் இராமநாதபுரம் சடைக்கத்தேவனோடு போர் புரியப் போகும்போது ஈரோடு மாவட்டப் பகுதித் தலைவர்கள் பலர் நாயக்கர் படையுடன் சென்று போரிட்டு வெற்றிக்குத் துணை நின்றுள்ளனர். இராமப்பய்யன் அம்மானை ''ஈரோடு தன்னில் எண்ணவொண்ணாக் கொங்கு மன்னர்'' உதவியதாகக் கூறிச் சிலர் பெயர்களையும் கூறுகிறது. அவர்கள் அப்பாச்சிக்கவுண்டன், கணக்கதிகாரி கவுண்டன், கொப்பக் கவுண்டன், குறிக்கவுண்டன், மெய்க்கவுண்டன் ஆகியோர் ஆவர்.

நாயக்கர் காலத்தில் கொங்கு நாட்டில் பல கோட்டைகள் இருந்தன. ஈரோடு மாவட்டப் பகுதியில் தாராபுரம், விசயமங்கலம், டணாயக்கன்கோட்டை, ஈரோடு, சத்தியமங்கலம், அந்தியூர்,

குன்னத்தூர், காங்கயம், பெருந்துறை, கோசணம், கொளாநல்லி, பாலத்தொழு போன்ற பல ஊர்களில் கோட்டைகள் இருந்தன. கோட்டையில் சிறு படையும் ஒரு தலைவனும் இருந்தனர்.

ஈரோடு கோட்டையில் அய்யப்பநாயக்கன், அக்காரெட்டி போன்றவர்கள் தலைவர்களாக இருந்துள்ளனர்.

ஈரோட்டைத் தலைமையிடமாகக் கொண்டு ஓமலூர், காவேரி புரம், சாம்பள்ளி, அந்தியூர், குன்னத்தூர் போன்ற பகுதிகளில் ஆட்சி புரிந்த கெட்டி முதலியார் வழிவந்த தலைவன் வணங்காமுடிக் கெட்டிமுதலி என்று பெயர் வைத்துக் கொண்டு நாயக்கர் ஆட்சிக்குக் கட்டுப்படாமல் தன் பெயரில் கல்வெட்டுக்கள் பொறித்தான். அவனுடைய பல கல்வெட்டுக்கள் பவானி, அத்தாணி போன்ற பகுதிகளில் உள்ளன.

திருமலை நாயக்கர் தளவாய் இராமப்பய்யனை ஈரோட்டுக்கு அனுப்பி வணங்காமுடிக் கெட்டியை அடக்குமாறு கூறினார். இராமப்பய்யன் பல நாள் போரிட்டும் கெட்டி முதலியை அடக்க முடியவில்லை. தன் இயலாமையையும், கெட்டி முதலியார் வீரம் பற்றியும் இராமப்பய்யன் எழுதிய கடிதம் கண்ட திருமலை நாயக்கர் கெட்டி முதலியாரோடு சமாதானம் செய்து கொண்டு மைசூர் ஆபத்தைத் தடுக்க கெட்டிமுதலி துணை வேண்டுமென்று யோசித்து அவருக்குப் பல மரியாதை செய்து தொடர்ந்து ஆளுமாறு பணித்தார்.

சொக்கநாத நாயக்கர் காலத்தில் கொங்கு 24 நாடு 4 கட்ட மனைகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு கட்டமனைக்கும் ஆறு நாடுகளை உள்ளடக்கி நான்கு தலைவர்களை நியமித்தார். தாராபுரம், ஈரோடு, அவிநாசி, டணாயக்கன்கோட்டை ஆகிய நான்கு கட்ட மனைகளில் ஈரோடு கட்டமனைக்குக் காங்கயம் பல்லவராயக் கவுண்டர் தலைவராக நியமிக்கப்பட்டார்.

சிவகிரி, பிடாரியூர், தாராபுரம் ஆகிய ஊர்களில் வீரப்பநாயக்கர் கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. சிவகிரிக் கல்வெட்டில் ரங்கராயர் என்பவரும், தாராபுரம் கல்வெட்டில் தம்பிக்கு நல்லார்பிள்ளையும்

அரசு அதிகாரிகளாகக் குறிக்கப்பட்டுள்ளனர். பிடாரியூர்க் கல்வெட்டில் காரியத்துக்குக் கர்த்தர் ஈரோட்டிலிருந்து அதிகாரம் செய்வதாகக் குறிக்கப்பட்டுள்ளது.

முதலாம் முத்து வீரப்பநாயக்கர் காலத்தில் அறச்சலூர் - காரையூர் இடையில் ஏற்பட்ட எல்லைச் சண்டையை 1617ஆம் ஆண்டு ''காரியத்துக்குக் கர்த்தரான அரமனை மனுஷர் திம்மப்ப முதலியார்'' தீர்த்து வைத்துள்ளார். அவர் ராதாபுரம் (தாராபுரம்) சீமைக்குக் கர்த்தர் எனக் குறிக்கப் பெறுகிறார். தாராபுரத்துத் தலத்துச் சம்பிரதி தட்சிணா மூர்த்தி அய்யன், தலத்துச் சேர்வை எல்லாரிமாவுத்தர் இன்னும் சில நாயக்கத் தலைவர்கள் பெயரும் குறிக்கப் பெறுகின்றன.

ஊஞ்சலூர் திருமலை நாயக்கர் கல்வெட்டில் கி.பி. 1538இல் அச்சுதராயர் காரியத்துக்குக் கர்த்தர் என்று குறிக்கப் பெறுகிறார். திருமலை நாயக்கர் அதிகாரி மெய்க்கும் பெருமாள் பிள்ளை பெயரும் குறிக்கப் பெறுகிறது. பூந்துறை நாட்டார் மேலோலையில் திருமலை நாயக்கரின் பூந்துறை நாட்டு அதிகாரிகளாக சிவக்குராசா, நரசிம்ம ராசா என்ற சகோதரர்கள் குறிக்கப் பெறுகின்றனர்.

வெங்கம்பூரில் உள்ள சொக்கநாத நாயக்கர் கல்வெட்டில் ஏற ரெட்டியார் என்ற அதிகாரி குறிக்கப் பெறுகிறார். அவர் அதிகாரத்தில் அவர் கீழ் அரைய நாட்டில் அல்லாள இளையா நாயக்கர் என்பார் நிர்வாகத்தில் இருந்துள்ளார் என்று கூறப்படுகிறது.

வட்டமலையில் விஜயரங்க சொக்கநாத நாயக்கர் (1708) காலத்தில் காங்கய நாட்டில் வேங்கி அழகிரி நாயக்கர் காரியத்துக்குக் கர்த்தராக இருந்தமை கூறப்படுகிறது. ஈரோடு பள்ளி கொண்டருளிய பெருமாள் கோயில் கல்வெட்டில் சேனைக்கார முதலி அக்காரெட்டி காரியத்துக்கு முகாமியானவர் என்று கூறப்படுகிறார்.

விசயநகர அரசுக்கு உட்பட்டவரை அவர்களுக்கு மதுரை நாயக்கர்கள் ஆண்டுக்கு 40 லட்சம் ரூபாய் திறை செலுத்தியதாக ஹீராஸ் பாதிரியார் எழுதியுள்ளார்.

தலைக்கோட்டை யுத்தத்தில் தோல்வியுற்ற விசயநகரம் வலிமை குன்றவே முத்து வீரப்பநாயக்கர் சீரங்கப்பட்டணம் வரை ஈரோடு மாவட்ட வழியாகச் சென்று அங்குள்ள தலைவனிடம் திறைப் பணம் பெற்றுத் திரும்பினார்.

திருமலை நாயக்கர் காலத்தில் (1523-1559) சாமராச உடையார் (1617-1637) டணாயக்கன் கோட்டையைக் கைப்பற்றினார். சாம் பள்ளியையும் முற்றுகையிட்டார். மதுரை நாயக்கருக்கு உட்பட் டிருந்த டணாயக்கன்கோட்டைத் தலைவன் சாமராச உடையாருக்கு 12000 வராகன் திறை செலுத்த ஒப்புக் கொண்டான்.

கண்டீரவ நரசராசா காலத்தில் (1638-1659) திருமலை நாயக்கர் உதவியோடு கெட்டி முதலியார் மைசூரார் பிடித்திருந்த டணாயக்கன் கோட்டை மீது போர் தொடுக்கவே மைசூர் உடையார் 1641இல் சாம்பள்ளியில் கெட்டி முதலியாரைத் தோற்கடித்து திருச்சி வரை சென்றதாக மைசூர் வரலாறு கூறுகிறது.

கண்டீரவ நரசராசாவின் தளபதி ஹம்பையன் மீண்டும் ஈரோட்டுப் பகுதிக்குப் படை எடுத்து வந்தான். திருமலை நாயக்கர் நோய்வாய்ப்பட்டிருந்த போது இப்போர் நடந்தது. மைசூர்த் தளபதி ஹம்பையன் ஈரோட்டுப் பகுதியில் தோல்வியுற்ற மதுரை நாயக்கர் படையை மூக்கரிய அரசன் கண்டீரவன் ஆணையிட ஹம்பையனோ இளையோர், முதியோர், பெண்கள், சிறுவர், சிறுமியர் மூக்குகளையும் அரிந்து கண்டீரவனுக்கு அனுப்பி வைத்தான். வரலாற்றில் இது ''ஈரோடு மூக்கறுப்புப் போர்'' என்றே கூறப்படுகிறது.

இது பொறுக்காத திருமலை இரகுநாத சேதுபதியை வேண்ட அவர் 25000 வீரரோடு வந்து மைசூர்ப் படையை ஈரோட்டில் தோற் கடித்தார். தொடர்ந்து மைசூரின் மீது படை நடத்திச் சென்ற திரு மலையின் இளைய சகோதரர் குமாரமுத்து நாயக்கர் சீரங்கப் பட்டணம் வரை சென்று பழிக்குப் பழி மைசூரார் மூக்குகளை அரிந்தார்.

மைசூர் உடையார் மரபில் தொட்ட தேவராயர் (1659-1673) பட்டத்திற்கு வந்தார். அப்போது நாடிழந்த விசயநகர மன்னன்

மூன்றாம் சீரங்கன் மதுரை சொக்கநாத நாயக்கரிடம் (1659-1682) அடைக்கலம் புகுத்திருந்தான். சொக்கநாத நாயக்கர் சீரங்கன் வேண்டுகோள்படியும், மைசூரைப் பழிவாங்க வேண்டும் என்ற எண்ணத்துடனும் செஞ்சி, தஞ்சை மராட்டியத் தலைவர்கள், ஈரோடு அய்யப்ப நாயக்கன் ஆகியோர் துணையோடு ஒரு லட்சம் பேர் கொண்ட பெரிய கூட்டுப் படையோடு தொட்ட தேவராயனை எதிர்க்க முற்பட்டார். மைசூர்த் தளபதி சிக்கதேவராசனிடம், மதுரைத் தளவாய் லிங்கம நாயக்கன் 1672ல் ஈரோட்டில் நடைபெற்ற போரில் தோல்வி யடைந்தான். விசயநகர மன்னன் இக்கேரிக்கு ஓடி விட்டான். மதுரை நாயக்கரும் அழிவின் விளிம்பைத் தொட்டனர்.

***

# 17. மைசூர் உடையார் காலம்

(கி.பி.1617 - 1766)

விசயநகர ஆட்சியின் கீழ் மைசூர் ஹடதனா பகுதிக் கிராமங்களை நிர்வாகம் செய்து வந்த யதுராயன் அல்லது விசயராயன் (1399-1424) வழிவந்த நான்காம் சாமராச உடையார் (1572-1578) மகன் ராச உடையார் (1578-1617) விசயநகர ஆட்சிக்குக் கப்பம் செலுத்தாமல் தனி மைசூர் உடையார் அரச மரபை ஏற்படுத்தினார்.

அவருக்குப் பின் ஆட்சிக்கு வந்த அரசர்களில்,

சாமராச உடையார் (1617-1637)
முதலாம் கண்டீரவ நரசராச உடையார் (1635-1659)
கெம்பதேவன் என்ற தொட்ட தேவராச உடையார் (1659-1673)
சிக்க தேவராச உடையார் (1673-1704)
முதலாம் கிருஷ்ணராச உடையார் (1714-1732)
இரண்டாம் கிருஷ்ணராச உடையார் (1734-1766)

ஆகியோர் தொடர்பு ஈரோடு மாவட்டத்தோடு உள்ளது.

மைசூர் உடையார்களின் வளர்ச்சியைத் தடுத்து நிறுத்தும் முயற்சியில் மதுரை நாயக்கருக்கும் தெற்கே தங்கள் ஆதிக்கத்தைப் பரப்ப முயன்ற மைசூராருக்கும் இடையில் ஈரோடு மாவட்டப்பகுதி சுமார் நூறாண்டுகளுக்கு மேல் போர்க்களமாகவே மாறியது.

டணாயக்கன் கோட்டைத் தலைவன் மதுரை நாயக்கர் சார்பில் நிர்வாகம் செய்து வந்தான். சாமராச உடையாரின் தளவாய் மல்லராசய்யா படையுடன் சென்று மதுரைப் படையை வென்று டணாயக்கன் கோட்டையைக் கைப்பற்றினான். டணாயக்கன் கோட்டைத் தலைவன் வேறு வழியின்றி ஆண்டுக்கு பன்னிரண்டாயிரம் வராகன் கப்பம் செலுத்துவதாகக் கூறி தன் நிர்வாகத்தைத் தொடர்ந்தான்.

மைசூராரின் டணாயக்கன் கோட்டை வெற்றியைக் கண்டு அஞ்சிய மதுரை நாயக்கர்கள் மைசூருக்கும் தெற்கிலும் மேற்கிலும்

இருந்த சிற்றரசுகளை மைசூருக்கு எதிராக கூட்டாக அணிவகுக்கத் தூண்டினர்.

ஹெக்கடதேவனகோட்டைத் தலைவன், கட்டெ மல்லலவாடித் தலைவன் கோபால ராசய்யா, இக்கேரி சதாசிவ நாயக்கனின் படைத் தலைவன், சென்னபட்டணம் செகதேவராயன் படைத்தலைவன் ஆகியோரோடு டணாயக்கன் கோட்டைத் தலைவனும் மதுரைக்கு ஆதரவாகக் கூட்டணியில் சேர்ந்தான். ஆனால் சத்யகயா, ஹசரா ஆகிய இடங்களில் நடைபெற்ற போர்களின் கூட்டணித் தலைவர் களின் படையை மைசூர்ப்படை மிக எளிதில் வெற்றி கொண்டது.

1625-27 ஆம் ஆண்டுகளில் நடைபெற்ற இப்போர் மூலம் மைசூர்ப்படைக்கு மிக அதிகமான அளவில் யானைகள் கிடைத்தன. மதுரை, இக்கேரி நாயக்கர்கட்கு இது பெரிய அதிர்ச்சியைத் தந்தது. தோற்ற தலைவர்கள் மைசூருக்கு மிகுதியான கப்பப்பணமும் தந்தனர்.

பீஜப்பூர் சுல்தான் முகம்மது அடில் ஷா வடக்கிலும், மதுரை திருமலை நாயக்கர் தெற்கிலும் மைசூருக்குப் பெரும் சவாலாக விளங்கினர். மதுரை நாயக்கரின் பெரும் படையோடு 1641ஆம் ஆண்டு தாரமங்கலம் கெட்டி முதலியின் மூத்தமகன் பெத்தடய்யன் மைசூரின் மீது போர் தொடுத்தான். இன்று மேட்டூர் அணைக்குள் மூழ்கிவிட்ட காவேரிபுரம் கணவாய் வழியாக வந்த கண்டீரவனின் தளபதி ஹம்பையன் மதுரைப் படையை மாறதள்ளி, சாம்பள்ளி ஆகிய இடங்களில் நிர்மூலமாக்கி ஈரோடு மாவட்டப் பகுதியைக் கைப்பற்றி னான். மைசூர்ப்படை ஈரோடு கோட்டையில் நிலையாகத் தங்கியது. 1654ஆம் ஆண்டு ஹம்பையன் ஈரோடு கோட்டை ஈசுவரன் கோயி லுக்குத் திருப்பணி செய்து துவார பாலகர்களைச் செய்தளித்ததாக ஈரோட்டிலுள்ள கன்னடக் கல்வெட்டுக் கூறுகிறது.

மைசூர் உடையாரிடம் தோல்வியடைந்து கடைசி விசயநகர மன்னன் மூன்றாம் சீரங்கன், மதுரை சென்று சொக்கநாத நாயக்கர் ஆதரவில் இருந்தான். மைசூராரை எதிர்க்கவும், விசயநகர அரசை மீண்டும் நிறுவவும் சொக்கநாத நாயக்கர் உதவியைச் சீரங்கன் வேண்டினான்.

மைசூர் ஆதிக்கத்தை ஒழிக்க நல்ல தருணம் என்று மகிழ்ந்த சொக்கநாதன் சீரங்கன் மீது அனுதாபம் கொண்டு தாராளமாக உதவி செய்ய வாக்களித்தான். பீஜப்பூர் சுல்தானின் செஞ்சி, தஞ்சைத் தலைவர்களும் மதுரை நாயக்கருக்கு உதவியாக வந்தனர். மதுரைக்கு உள்பட்ட ஈரோடு ஜாகீர்தார் அய்யப்ப நாயக்கனும் மதுரைக்கு உதவ வந்தான்.

நான்கு படைகளும் மைசூர் ஆதிக்கத்தை விரட்டும் நோக்கோடு விசயநகர மன்னன் சீரங்கனுக்கு உதவும்படையுடன் வந்தனர். ஒரு லட்சம் காலாட் படையினர், நூறு யானைகள், பல்லாயிரம் குதிரைப் படையினர் ஆகியோர் சொக்கநாதன் படைத்தலைவன் லிங்கம நாயக்கர் தலைமையில் மைசூருக்கு உள்பட்டிருந்த ஈரோடு நோக்கிப் புறப்பட்டனர். தொட்ட தேவராயன் தன் அண்ணன் மகன் சிக்க தேவராயன் தலைமையில் ஈரோட்டுக்குப் படையை அனுப்பினான். 1667இல் ஈரோட்டில் நடைபெற்ற இப்போரில் மைசூர்ப் படை பெரும் வெற்றி பெற்றது.

தொட்ட தேவராயன் காலத்தில் ஈரோடு வட்டம் நசியனூர்க் கோயிலுக்கு நிலக்கொடை வழங்கப்பட்டது. தொட்டதேவராயன் இறந்தபின் சிக்கதேவராயன் மைசூர் அரசன் ஆனான். பெரும்படை திரட்டி சொக்கநாத நாயக்கர் தன் படைத்தலைவன் 'சங்கார கிருதி' என்று பட்டம் பெற்ற வெங்கட கிருஷ்ண நாயக்கன் தலைமையில் சிக்கதேவராயன் மீது போர் தொடுத்தார். இம்முறையும் மதுரைப்படை தோற்றது. மதுரைப் படையை முற்றிலும் அழித்த மைசூர்ப்படை ஏராளமான ஆயுதங்களையும் குதிரைகளையும் யானைகளையும் கைப்பற்றியது.

குன்னத்தூர், அந்தியூர்க் கோட்டைகளும் ஈரோடும் மைசூரார் வசம் ஆயின. சிக்கதேவராய உடையார் சத்தியமங்கலம் அருகேயுள்ள தவளகிரியில் குமாரசாமி கோயிலைக் கட்டியதாகத் தமிழில் தவளகிரியிலும், சத்தியமங்கலத்தில் கன்னடத்திலும் உள்ள கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. மதுரை வலுவிழந்ததால் மைசூர் உடையார்கள் ஈரோடு மாவட்டத்திலும் ஆலயப்பணிகளிலும் அறப்பணிகளிலும்

ஈடுபட்டனர். மைசூர் அரசர்களது திறமைக் குறைவால் மைசூரில் எல்லாப் பொறுப்புக்களையும் தளவாய்கள் ஏற்றனர். பெயருக்கு மட்டும் அரசர்கள் இருந்தனர்.

இரண்டாம் கிருஷ்ணராய உடையார் காலத்தில் 1641ஆம் ஆண்டு பவானி சங்கமேசுவர் கோயில் கல்வெட்டில் தளவாய் தேவரா சய்யன் பெயரும், சர்வாதிகாரி நஞ்சராசய்யா பெயரும் குறிப்பிடப் பட்டுள்ளது. இரண்டாம் கிருஷ்ணராச உடையார் கல்வெட்டுக்கள் ஈரோடு, துடுப்பதி, சிவகிரி ஆகிய இடங்களிலும் காணப்படுகின்றன. மலையப்பாளையம் கல்வெட்டில் அரசன் பெயர் இல்லாமல் தேவ ராயன் பெயர் மட்டுமே காணப்படுகிறது.

இவர்கள் காலத்தில் ஏராளமான கன்னட பிராமணர்கள் ஈரோடு மாவட்டத்தில் குடியமர்த்தப்பட்டனர். ராமசமுத்திரம், சாம்பள்ளி, சின்னாண்டி ஹள்ளி, மூலக்காடு, குள்ளவீரன ஹள்ளி, துக்கட நாயக்கன்ஹள்ளி, கோவிந்தப்பாடி, கிருஷ்ணராஜபுரம், திருக்கனம்பூர், தட்டாரபாளையம், கணக்கம்பாளையம், அக்கிரகாரம்பாளையம், கோபாலசமுத்திரம், முட்ட நாயக்கன்பாளையம், திருமலை செட்டி பாளையம், கலியனூர், லவகம்பாளையம் ஆகிய ஊர்களில் அவர்கள் குடியமர்த்தப்பட்டனர். பிறரிடமிருந்து விலைக்கு வாங்கி அவர் களுக்கு இனாமாக நிலங்களை அரசன் அளித்தான். ஊர் வருமானம் முழுவதும் சுங்கம், பேரம் உட்படப் பிராமணர்களுக்குப் கொடுக் கப்பட்டன. சில கணக்கர்களுக்கு கன்னட பிராமணர்களைக் குடிய மர்த்துவதே வேலையாக இருந்தது.

❊❊❊

# 18. ஐதர்அலி திப்புசுல்தான் காலம்

(கி.பி. 1761-1799)

இசுலாம் மதகுருவாக பஞ்சாபிலிருந்து மைசூர் வந்த குடும்பத்தைச் சேர்ந்த வீரர்கள் நான்கு தலைமுறை மைசூர் உடையாரிடம் பணிபுரிந்தனர். இரண்டாம் கிருஷ்ணராச உடையார் (1734-1766) காலத்தில் தளவாய் தேவராசய்யாவின் தம்பி பிரதானி நஞ்சராசய்யாவின் கீழ் ஒரு சாதாரணப் படை வீரராக ஐதர் அலி பணிபுரிந்தார்.

மராட்டியருடனும் கர்நாடக நவாபுடனும் மைசூர் உடையார் சார்பில் நஞ்சராசய்யா போரிட்டபோது பெரும் வீரம் காட்டி ஐதர் அலி புகழ்பெற்றார். அரசரால் அத்தாணி மண்டபத்தில் ''பத்தே ஐதர் பகதூர்'' என்று பாராட்டப்பட்டார். நஞ்சராசய்யா ஐதர்அலிக்கு 'பௌஸ்தார்' பதவி கொடுத்து 200 காலாள்கள், 50 குதிரைகள் கொண்ட படைக்குத் தலைவர் ஆக்கினார். திண்டுக்கல்லுக்குப் பணிபுரிய அனுப்பப்பட்ட ஐதர் கண்டேராவ் என்பவரோடு சேர்ந்து கொண்டு ஈரோடு பகுதியில் வரிவசூல் செய்தார்.

போர்ச் செலவுகளுக்காகக் கோவை, ஈரோடு மாவட்டப் பகுதியில் அதிகம் வரிவசூல் செய்ய அரிசிங் என்பவர் மைசூர் அரசனால் அனுப்பப்பட்டார். துணை செய்ய அனுப்பப்பட்ட ஐதர்அலி அரிசிங்கைப் புறந்தள்ளி தானே வரி வசூலித்ததாகச் சிறு தொகையை அரசனுக்கு அனுப்பி விட்டுப் பெரும் தொகையைத் தானே வைத்துக் கொண்டார். அரசுக்கு அதிக வருவாய் தரக்கூடிய கோவை, ஈரோடு பகுதிகளில் ஐதர் தன் ஆதிக்கத்தைத் செலுத்தினார். வரி வசூலைத் தானே வைத்துக் கொண்டார். லஞ்சம் கொடுத்துப் படைவீரர்களைத் தன் வசமாக்கினார்.

சீரங்கப்பட்டணம் வந்த ஐதர் நஞ்சராசய்யாவை மூன்று லட்சம் ரூபாய் மதிப்புடைய ஜாகீர் ஒன்றை அளித்து பதவியிலுருந்து நீக்கி தான் 'தளவாய்' ஆகி நண்பன் கண்டேராவைப் 'பிரதானி' ஆக்கினார்.

பொம்மை அரசருக்கு ஆசை வார்த்தை கூறி 1761 வாக்கில் தானே முழு அதிகாரத்தையும் மேற்கொண்டார். மைசூருக்கு உட்பட்டிருந்த ஈரோடு மாவட்டப்பகுதி முழுவதும் 1761இல் ஐதர் அலியின் அதிகாரத்தின் கீழ் வந்துவிட்டது.

போர்ச் செலவுகளுக்காகவும் படையெடுத்து வருபவர்களுக்குப் பல லட்சம் பகோடாக்கள் கொடுத்துத் திருப்பி அனுப்புவதற்காகவும் மக்களிடம் கசக்கிப் பிழிந்து ஐதர் அலியின் அதிகாரிகள் வரிவசூல் செய்தனர்.

பழைய கோட்டைப் பட்டக்காரர் கொற்றவேல் சர்க்கரையார் ''காசுமேல் ஆசையாம் ஐதர் அலிகான் சாயபு'' என தன் பாடலில் கூறியுள்ளார். ஐதர், திப்பு நாளில் பல ஆவணங்கள் ஈரோடு மாவட்டப் பகுதியில் எழுதப்பட்டன. ஈரோடு மாவட்டப்பகுதி மக்கள் அவர்களிருவரும் மைசூர் அரசர் சாமராச உடையார் (1772-1798) சார்பில் ஆட்சி செய்வதாகவே எண்ணினர்; எழுதினர்.

''உபயகாவேரி மத்திய அரங்கமான சீரங்கப்பட்டணத்
தில் ரத்தினசிம்மாசன ரூடராய் சாமராஜஉடையார்
அய்யன் அவர்கள் பிருத்விராஜ்யம் பண்ணுகிற
நாளையில் அவர்கள் காரியத்துக்குக் கர்த்தராகிய
டிப்பு சுலுத்தான் பாட்சா சாயுபு அவர்கள்''

என்றே விசயமங்கலம் 'கபிலமலை' பட்டாலி ஆவணங்கள் கூறுகின்றன.

ஐதர், திப்பு ஆட்சியில் 10 முதல் 20 கிராமங்கள் அடங்கிய தாலுக்காப் பகுதி ஒவ்வொரு 'அமுல்தார்' பொறுப்பில் விடப்பட்டது. அவருக்கு சேனபாகம், சிரஸ்ததார் ஆகியோர் துணைபுரிந்தனர்.

ஊர் - அமுல்தார் - சேனபாகம் - சிரஸ்ததார்
விசயமங்கலம் - மம்முதலி - அண்ணய்யன் - வெங்கிட்டய்யன்
ஊத்துக்குளி - கான்சாகிபு - சுப்பய்யன் - சேஷகிரி அய்யன்
அறச்சலூர் - அமானுல்லாகான் - கோபாலகிருஷ்ணய்யன் - கண்ணய்யன்
என்பன சில தாலுக்கா அதிகாரிகளின் பெயர்கள்.

தாலுக்காவுக்குப் பொறுப்பான அதிகாரிகளில் ஒருவர் (அமுல் தார்) இசுலாமியராகவும் மற்ற இருவர் பெரும்பாலும் பிராமணராகவே இருந்தனர். பாலக்காடு, கோயமுத்தூர் கோட்டைகளின் தலைவர் களும் பிராமணர்களே. திப்புவின் தலைமை அமைச்சர் பூர்ணய்யா தாராபுரத்தைச் சேர்ந்த கன்னட பிராமணர் என்பது குறிப்பிடத்தக்கது. பிராமணர்கள் பலர் முக்கியப் பொறுப்பில் இருந்தனர்.

இடைவிடாத போர்களின் இடையிலும் அதிகாரிகளை ஊர்தோறும் பயணம் செய்து நீதி பரிபாலனம் செய்யுமாறு திப்பு உத்தரவிட் டிருந்தார். விசயமங்கலத்தில் ஏற்பட்ட வலங்கை - இடங்கைத் தகராறை அந்தியூர்க் கச்சேரி திவான் கிரிமிரே சாயுபு 5.2.1794ஆம் நாள் தீர்த்து வைத்தார்.

பவானிவட்டம் காவேரிபுரம் அருகே சுயம்வரப்பள்ளம் என்ற பகுதியிலிருந்த ''சுயம்வர ஏரி'' 50 ஆண்டுகள் உடைந்து கிடந்தது. திப்பு சுல்தான் 16000 பகோடாக்கள் செலவில் திருத்தி 520 ஏக்கர் பாயுமாறு செய்தார். குன்னத்தூர் அருகில் உள்ள குறிச்சிக் கோயிலுக்குக் கொடை அளித்தார்.

ஐதர், திப்பு ஆட்சியில் வரி வசூலில் 10இல் ஒரு பங்கு வைத்துக் கொண்டு பாளையக்காரர்கள் 9 பங்கு அரசுக்குச் செலுத்தவேண்டும் என்று ஆணையிடப்பட்டது.

எமக்கலாபுரம் ஜமீன் 100 பணம் வரி (நிகுதி) கொடுத்து வந்ததை ஐதர் அலி அதிகாரி 130 பணம் என்றும் பின் 300 பணம் என்றும் மீறு சாயபு சையது சாயபு உயர்த்தினார்.

> ''காச்சல் உபத்திரவத்தினாலே சிறிது குடிகள் மரணமாய்ப்
> போன படியினாலேயும் பத்து வருஷம் அதிக தீர்வை
> குடுத்து குடிகள் கைமெலிந்து ஓடிப்போய்விட்டபடியி
> னாலேயும்''

உரிய வரிப்பணம் செலுத்தாத பாளையக்காரர்கள் சிறையில் அடைக் கப்பட்டனர்.

காங்கயம் பல்லவராயர் வம்சாவளி பின்வருமாறு கூறுகிறது. ''அரமனையார் கட்டளைப்படிக்கு பணம் செலுத்திக்கொண்டு இருக்கும் நாளையில், திப்பு சுல்தான் அவர்கள் அரமனைக்குப் பணம் செல்லவில்லையென்று துராக்கிரதமாய் சிதம்பரப் பல்லவராயக் கவுண்டர் அவர்களையும் அவர் குமாரன் அமராவதிப் பல்லவராயக் கவுண்டர் அவர்களையும் சங்ககிரியிலே கைது வச்சுயிருந்து அதற்குமேல் சீரங்கப்பட்டணத்துக்குத் தரிவிச்சு விசாரணை செய்து விடுதலை பண்ணின சமயத்தில் சிதம்பரப் பல்லவராயக்கவுண்டர் தெய்வகதி அடைந்தார்''.

வரி கொடுக்காத அக்கிரகாரங்கள் ஜப்தி செய்யப்பட்டு வரியுடன், ஜப்திவரியும் சேர்த்து வசூலிக்கப்பட்டது, பவானி அருகில் உள்ள ஆண்டிகுளம் அக்கிரகாரத்தார்,

''டிப்பு நாளையில் சோபகிறிது வருஷத்தில் அக்கிர
காரம் செபுதியாச்சுது. செபுதிவரி கண்டிராயன் பணம்
96 பொன்மேரைக்கு சோபகிறிது வருஷம் முதல்
காலயுக்தி வருஷம் வரைக்கும் குடுத்து வந்தோம்''.

என்று கூறுகின்றனர். இடைவிடாமல் ஏற்பட்ட போர்களின் மிகுதியான செலவாலும், சில சமயம் போரைத் தவிர்க்க அளிக்கப்பட்ட பெரும் தொகையாலும் இவ்வாறு வரிவசூல் செய்ய நேரிட்டது.

ஈரோடு மாவட்டம் காவேரிபுரம் கணவாய் வழியாக 1800ஆம் ஆண்டு இரண்டு மாதங்களில் புகையிலையை 300 காளைகளும், நெய்யை 70 காளைகளும், துணிகளை 50 காளைகளும், கருப்பட்டி - வெல்லத்தை 50 காளைகளும், எண்ணெ வகைகளை 10 காளை களும், பாத்திரங்களை 5 காளைகளும் ஏற்றிக் கொண்டு சென்றதாக புக்கானன் கூறுகிறார். ஐதர் நாட்களில் இதைப்போலப் பத்துமடங்கு சென்றதாம்.

மதுரை நாயக்கருக்கும் மைசூர் உடையாருக்கும் நடைபெற்ற இடைவிடாத போர்களில் ஈரோடு மாவட்டம் அலைக்கழிக்கப்பட்டது போல ஐதர், திப்புவிற்கும் கும்பினிப்படைக்கும் அவர்கட்கு ஆதரவாக

வந்த ஐதரபாத் நிஜாம், ஆர்க்காடு நவாபு படைகளுக்கும் இடையில் 1767 முதல் 1799 வரை நடைபெற்ற நான்கு மைசூர்ப் போர்களிலும் ஈரோடு மாவட்டம் மிகப் பெரிய பாதிப்பை அடைந்தது. ஈரோட்டில் மட்டும் மூன்றில் இரண்டு பங்குக்கு மேல் வீடுகள் அழிந்தன. மக்கள் பெரிதும் அல்லல்பட்டனர்.

கும்பினிப் படைகளும் ஐதர், திப்புவும் ஈரோட்டை மாறி மாறி முற்றுகையிட்டுக் கைப்பற்றினர். வடக்கே கிருஷ்ணா நதி முதல் தெற்கே திண்டுக்கல் வரை பரவியிருந்த ஐதர், திப்புவின் ஆட்சி 4.5.1799இல் சீரங்கப்பட்டணம் போரில் திப்பு மரணம் அடைந்ததால் திப்பு வசம் இருந்து ஈரோடு மாவட்டம் கும்பினியார் வசம் ஆயிற்று.

❊❊❊

# 19. கும்பினி ஆட்சிக் காலம்

கி.பி. 1799-1858

இந்திய வரலாற்றில் 16.4.1609, 4.5.1799 ஆகியவை மிக மிக முக்கியமான நாட்களாகும். 1599இல் இங்கிலாந்தில் ஏற்படுத்தப்பட்ட பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கும்பினி சார்பில் 1608இல் முதலில் தலைமை தாங்கி வந்த வில்லியம் ஹிக்கிசிற்கு இந்தியாவில் விற்பனை யைத் தொடங்க டில்லி ஜிகாங்கீர் அனுமதி கொடுத்த நாள் 16.04.1609, 1611இல் மசூலிப் பட்டணத்தில் தங்கள் குடியிருப்பை நிறுவிய கும்பினி யார் முதல் தொழிற்சாலையை 1613இல் சூரத்தில் தொடங்கினர். 1640ல் சென்னையில் குடியேறி டச்சுக்காரர்களையும், பிரெஞ்சுக் காரர்களையும் வென்று படிப்படியாக அதிகாரத்தைப் பரப்பிய கும்பினி யார் தென்னிந்தியாவில் கடைசியாக அவர்களை எதிர்த்த திப்பு சுல் தானை 4.5.1779இல் கொன்று தங்கள் ஆட்சியை நிலைநிறுத்தினர்.

7.11.1800இல் ஈரோடு வந்த ஆங்கிலேயப் பயணி புக்கானன், ''ஐதர் ஆட்சித் தொடக்கத்தில் ஈரோட்டில் 3000 வீடுகள் இருந்தன. திப்பு காலத்தில் பெரும்பகுதி அழிந்து 1000 வீடுகள் இருந்தன. ஜெனரல் மெடோஸ் ஈரோட்டை முற்றிலுமாக அழித்து விட்டான். இப்போது 400 வீடுகள் தான் உள்ளன. ஈரோடு மீண்டும் உயிர் பெற்று வருகிறது'' என்று கூறியுள்ளார்.

கும்பினியின் வெற்றிக்கு ஐதராபாத் நிஜாம், மராட்டியர், ஆர்க்காடு நவாப் ஆகியோரின் படை உதவி மட்டும் காரணமல்ல; ஐதர், திப்பு வின் வரிக் கொள்கையாலும் அதிகாரிகள் கெடுபிடியாலும் படையின ரின் கொள்ளை, கொலையாலும் பாதிக்கப்பட்ட கொங்கு நாட்டுப் பாளையக்காரர்கள் கும்பினியை மிகப் பெரும்பாலோர் எதிர்க்காமல் வரவேற்றனர்.

ஐதர் காலத்தில் கொங்கு நாட்டில் அவர் வசூலித்த வரிப்பணம் 761094 பகோடாக்கள் (2666664 ரூபாய்) ஆகும்.

படை எடுத்துவந்த மராட்டியருக்கு ஐதர் கொடுத்தது 35 இலட்சம் ரூபாய்; மீண்டும் 1772இல் மராட்டியர் ஐதரிடம் பெற்றது 30 இலட்சம் ரூபாய். 1783இல் கும்பினிப் படைத்தலைவன் 81 இலட்சம் ரூபாய் திப்புவின் ஆட்களிடம் பறித்து விட்டான். 1787இல் நிஜாம், மராட்டியர் கூட்டுப்படையைத் திருப்பி அனுப்ப 45 இலட்சம் ரூபாய் கொடுத்தார். மூன்றாம் மைசூர்ப் போரின் இறுதியில் கார்ன் வாலிசோடு 19.3.1991 இல் செய்து கொண்ட உடன்படிக்கையின்படி கும்பினி போர்ச் செல வுக்காகப் பெற்றது 3 கோடி ரூபாய்! ஒரு சமயம் தன் இரு மகன்களைக் கும்பினியிடம் அடகு வைத்து மீட்டார். மற்றொரு சமயம் கோலாரை அடகு வைத்துப்பின் மீட்டார். இச்செலவுகளை ஈடு செய்ய அதிக வருவாய் வரும் கோவை, ஈரோட்டுப் பகுதிகளில் மிக அதிகமான வரியை வசூலித்தனர்.

கொடுமைப்படுத்தி வரிப்பணம் அதிகம் வாங்கியதோடு திப்பு வின் படையினர் கொள்ளையுமடித்தனர். ''சையது நவாபு சாயபு சிறிது குதிரையோடு வந்து இடையகோட்டை கொள்ளை செய்து அக்கினிப் பரகெதியும் போட்டு வடக்கே போய் விட்டார்கள்'' என்பது ஒரு மெக் கன்சி ஆவணப் பகுதியாகும்.

இதனால் மிக அதிகமாக வசூலிக்கப்பட்ட வரியைக் கொடுக்க முடியாமல் பாளையக்காரர் பலர் திண்டுக்கல், சங்ககிரி, சீரங்கப்பட்ட ணத்தில் சிறை வைக்கப்பட்டனர். மற்றவர்கள் அனைவரும் கும்பினி யாரை வரவேற்றது மட்டும் அல்ல; படைத்துணையும் செய்து உதவினர்.

''ஸ்ரீ செங்கன் துரையவர்கள் நாளையில் வெள்ளை மருதன் சல்லியத்தில் அறுநூறு சனம் அனுப்பிவச்சு, ஸ்ரீ அக்கினீசு துரையவர்கள் மக்காளி துரையவர்களிடத்தில் காத்திருந்து சின்ன மருதன் பெரிய மருதன் சனத்துடனே சண்டை செய்து கும்பினிக்குக் கருத்தாக நடந்து கொண்டு எதிரி வகைக் குறிக்காரரை தலையை அறுத்து கும்பினித் துரையவர்கள் முன்னே கொண்டு வந்து போட்டதில் கும்பினியாரவர் களுக்குத் தயவு வந்து குதிரையும் கொடுத்தனுப்பினார்கள்''.

''ஆர்டீசு துரையவர்கள் துரைத்தனத்தில் சீரங்கப்பட்டணத்தின் பேரிலே கும்பினியாரவர்கள் தண்டு போற போது என்னையும் என்னு டைய சனத்தையும் வரச்சொல்லி உத்தரவாகி நானும் என் சனம் அறு நூறு சனம் வரைக்கும் சேவுகம் செய்தோம்'' என்பன கொங்குப்பாளை யக்காரர்கள் ஆவணப்பகுதிகளாகும்.

படை உதவியுடன் கம்பெனியின் எதிரிகளைக் காட்டிக் கொடுத்தும் பாராட்டும் பரிசும் கும்பினியாரிடம் சிலர் பெற்றனர்.

''துரையள் உத்தரவுப்படிக்கு விருப்பாட்சி லட்சும நாயக்கனைப் பிடிச்சுக் கொண்டு வந்து துரையள் சன்னிதானத்திலே கொண்டு வந்து ஒப்புவிச்சபடியினாலே மகா.ரா.ரா.ஸ்ரீ கிரீம் துரையவர்கள் என் பேரில் கடாட்சம் செய்து வெகுமதி பண்ணி 500 புலி வராகன் இனாம் கொடுத்தார்கள்'' என்பது ஒரு கொங்குப்பாளையக்காரர் கூற்று.

தீரன் சின்னமலையைப் பிடிக்க ஒரு பாளையக்காரர் முயற்சி செய்துள்ளார்.

''சனங்களைக் கூட்டிக்கொண்டு வந்து முச்சடையாண்டிக் கவுண் டனையும் அவனுக்குக் குமுக்கா இருக்கப்பட்ட தம்பாக்கவுண்ட னையும் கைப்பிடியாகப் பிடிக்க வேணுமென்று நினைச்சவிடத்தில் தப்பிவிச்சுக் கொண்டு ஓடிப்போய் விட்டார்கள்'' என்று ஒரு பாளை யக்காரர் கூறுகிறார்.

திப்புவின் வீழ்ச்சிக்குப்பின் எல்லாப் பாளையக்காரர்களும் பத்தில் ஏழுபங்கு வரிப்பணத்தைக் கண்டிப்பாகக் கொடுக்க வேண்டுமென்று ஆணையிட்ட கும்பினியார் ஐதர், திப்புவை விட வசூலில் வெகு கண்டிப்பாக இருந்தனர். மக்கள் சாவினால், காய்ச்சல் முதலிய நோயால், பலர் ஓடிப்போவதால், வெள்ளத்தால், வறட்சியால் வரிவசூல் குறைவு ஏற்பட்ட போதும் வரியைக் குறைக்கவில்லை. பாளையத்தை ஜப்தி செய்து பாளையக்காரரை சிறைவைத்தனர்.

''ஊரான் ஊரான் தோட்டத்திலே ஒருவன் போட்டானாம் வெள்ளிரிக்காய் காசுக்கு ரண்டு விக்கச்சொல்லி காகிதம் போட்டானாம்

வெள்ளைக்காரன்'' என்ற நாட்டுப்பாடல் கும்பினி அதிகாரத்தை விளக்கும்.

''ஆர்டீசு துரையவர்கள் நாளையில் கிஸ்திபந்தி வாய்தாப் பிர காரம் கும்பினி காயிதம் மேரைக்கு பணம் செலுத்த இயலாமல் போன படியினாலே ஆயர் துரை வந்து என் சீமையை ஜப்தி செய்து போட் டார்கள்'' என்கிறார் ஒரு பாளையக்காரர். ஜப்தி செய்தபின் அரசு செய்த அப்பாளையக்காரருக்கு 15 ரூபாயும், இருபது ரூபாயும் சம்பளமாக கொடுத்தனர்.

நிலையான ஆட்சி 1799இல் அமைந்தபின் அரசுப்பணிகளைக் கும்பினியார் மேற்கொண்டார்கள். ஒரு ஆவணம்.

''தாராபுரம் சீமைக்கு அமுலாக வந்த ராசமானிய ஸ்ரீ ஆர்டீசு துரையவர்கள் சீமையை 25 பாகம் சங்கிலியால் மலை, கரடு, பாதை, அனாதி தரிசு, ஆறு, ஓடை, நிலம் சகலமானதும் அளந்து பதிவு செய்தார்'' என்று கூறுகிறது.

''மகாமண்டலீசுவரராகிய கும்பினி துரையவர்கள் ராச்சியம் பண்ணுகிறபோது மகா.ரா.ரா.ஸ்ரீ ஆர்டீசு துரையவர்கள் அதிகாரத்தில்'' என்பது போல ஆவணங்கள் எழுதினர். தங்கள் அரசர்களுக்கு முன்பு கொடுத்த பட்டங்களை கும்பினி அதிகாரிக்கும் கொடுத்தனர்.

''கும்பினியாரவர்கள் தாராபுரம் சீமை துரைத்தனத்துக்கு வந்த மகா.ரா.ரா.ஸ்ரீ மக்களூட்டு துரையவர்கள் அதிகாரத்தில்'' என ஒரு ஆவணம் கூறுகிறது.

பல துறைகளிலும் மேல்நாட்டு முறைப்படி அலுவல்களை மேற்கொண்ட கும்பினியார் பொறுப்புக்கள் பெருகியதன் காரணமாக 1858இல் தங்களுக்கு உள்பட்டிருந்த பகுதிகளை இங்கிலாந்து அரசிடம் ஒப்படைத்தனர்.

***

# 20. இங்கிலாந்து மன்னர் காலம்

கி.பி. 1858 - 1947

1858 வரை கிழக்கிந்தியக் கம்பெனியார் இங்கிலாந்து அரசின் அனுமதி பெற்று இந்தியாவின் பெரும் பகுதியை ஆட்சி புரிந்தனர். கும்பினிக்கு வருமானம் பெருகியது. கும்பினி இயக்குநர்கள் மீது பல புகார்கள் கூறப்பட்டன. இங்கிலாந்து அரசு இந்தியாவின் ஆட்சியை மேற்கொள்ள முடிவு செய்தது. கும்பினியார் அதை ஏற்றுக்கொண்டு 1.9.1958 அன்று கும்பினிக் கொடியை இறக்கி 'யூனியன் ஜாக்' என்ற இங்கிலாந்துப் பேரரசின் கொடியை ஏற்றி வணக்கம் செய்து நாட்டை இங்கிலாந்து அரசுவசம் ஒப்படைத்தனர்.

அதுமுதல் இங்கிலாந்து அரசர், அரசியாரின் பிறந்தநாள், முடி சூட்டிய நாள், பிற முக்கிய நாட்கள் அரசு விழாவாக டில்லியிலும் இதர இடங்களிலும் நடைபெற்றன. இங்கிலாந்து அரசர்கள் சிலர் டில்லி வந்தும் இந்தியாவின் அரசராகத் தம்மை முடி சூட்டிக் கொண்டனர்.

டில்லியில் நடைபெறும் அரசரின் 'தர்பார்'களுக்கு இங்கிலாந்து ஆட்சியை ஆதரிக்கும் பிரமுகர்கள் அழைக்கப்பட்டனர். பலருக்கும் பலவிதமான கௌரவப் பட்டங்கள் வழங்கப்பட்டன. 1877ஆம் ஆண்டு முடிசூடி அரசி ஆன விக்டோரியா மகாராணியின் முடிசூட்டு விழா டில்லியிலும் கொண்டாடப்பட்டது. வெள்ளிவிழா, பொன்விழா, வைர விழாக்களும் நடைபெற்றன.

1897ஆம் வருடம் விக்டோரியா மகாராணியின் பிறந்தநாள் வைரவிழா இந்தியாவெங்கும் கொண்டாடப்பட்டது. 8.6.1897 அன்று கோபிசெட்டிபாளையத்தில் உதவிக் கலெக்டர் ஜெ.ஜி.வுட் தலைமையில் நடைபெற்ற வைரவிழா நினைவாகத்தான் கோபியில் வைரவிழா மேல்நிலைப்பள்ளி தொடங்கப்பட்டது. இந்திய நாணயங்களிலும் பதிவுப்பத்திரங்களிலும் அரசரின் உருவம் பொறிக்கப்பட்டது. பெரும் பொறுப்புக்களுக்கு ஆங்கிலேயர்களே நியமிக்கப்பட்டனர்.

மக்கள் எழுதும் ஆவணங்களிலும் அரசர் அரசியின் பெயரைப் பொறித்தனர். ஈரோடு மாவட்டத்தில் விக்டோரியா மகாராணியின் பெயர் பொறித்த மூன்று கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. விசய மங்கலம் நாகேசுவரர் கோயிலில் இரண்டு கல்வெட்டுக்களும், ஊத்துக் குளியை அடுத்துள்ள தளவாய்பாளையம் விசயபுரியம்மன் கோயிலில் ஒரு கல்வெட்டும் கிடைத்துள்ளது அவற்றில்

''இந்திய சர்க்கார் மகாராணியார் அவர்கள் அரசாட்சியில் இங்கிலீஸ் துரைத்தனத்தில்''

''மகத்துவம் தங்கிய இந்தியா சக்கரவர்த்தினியார் அவர்கள் அரசாட்சியில்''

என்ற தொடர்கள் தொடக்கத்தில் காணப்படுகின்றன.

மேனாட்டு அறிவியல் வளர்ச்சியும், நவீன தொழிற் கருவிகளும், போக்குவரத்து, தொலைத்தொடர்பு, கல்விமுறை போன்ற பலவும் இந்தியாவை வந்தடைந்தன. எனினும், இங்கிலாந்தின் சந்தையாகவும் செல்வ வளத்தையெல்லாம் இங்கிலாந்துக்கு வாரிக் கொடுக்கும் அமுத சுரபியாகவும் இந்தியா இருந்தது.

ஏழாம் எட்வர்டு மன்னர் மறைவிற்குப் பின்னர் மன்னர் 5ஆம் ஜார்ஜ் இங்கிலாந்தில் முடிசூடினார். மிகப்பெரிய விழா நடைபெற்றது. இந்தியர்களுக்கு வியப்பை ஏற்படுத்த, பயபக்தியை ஊட்ட டில்லி மாநகரிலும் மிகப்பெரிய ''கார்னேஷன் தர்பார்'' நடைபெற்றது (1912). நாடெங்கும் நடைபெற்ற ''முடிசூட்டுவிழா'' கொண்டாட்டத்தினை ஒட்டி ஈரோட்டில் ஒரு மைதானத்திற்கு 'கார்னேஷன் கிரௌண்டு'' என்று பெயரிடப்பட்டது. பெருந்துறையில் ஒரு விளக்குத்தூண் நிறுவப் பட்டது. பழையகோட்டைப் பட்டக்காரர் நல்லதம்பிச் சர்க்கரை உத்த மக்காமிண்ட மன்றாடியாருக்கு 'ராயபகதூர்' பட்டம் வழங்கப்பட்டது.

மன்னர் ஆட்சி பூலோக ராமராஜ்யமாக நடைபெறுகிறது என்றும் என்றென்றும் மன்னருக்கும் இராணிக்கும் விசுவாசமாக இருப்போம் என்றும் பாராட்டு மடல்களில் கூறப்பட்டது.

பள்ளிகளிலும், பொது நிகழ்ச்சிகளிலும் இந்தியாவை ஆளும் மாட்சிமை தாங்கிய இங்கிலாந்து அரசர்க்கும், அரசியர்க்கும் வாழ்த்துப் பாப்பாடப்பட்டது. புலவர்கள் தாங்கள் எழுதும் பாடல்களிலும் இலக்கியங்களிலும் அவர்களைப் புகழ்ந்தனர்.

1876ல் ஏற்பட்ட மிகக்கொடிய தாது வருடப் பஞ்சம் பற்றி 'பஞ்ச லட்சணத் திருமுக விலாசம்' என்ற நூலை வில்லியப்ப பிள்ளை என்பார் பாடினார். அதில் விக்டோரியா மகாராணியார்க்கு இடையில் வாழ்த்துப் பாப் பாடப்பட்டுள்ளது.

''தொல்லையுறு
இன்னல் பகையச்சம் என்பதில்லாமலே உலக
மன்னுயிரைத் தன்னுயிர்போல் வாழ்விக்கும் - அன்னை விக்
டோரிமகா ராணிசெங்கோல் ஊழி வாழ்கவெனப்
பார்முழுதும் பல்லாண்டு பாடினவே''

என்பது அப்பாடல் ஆகும்.

அரசு நீர்ப்பாசன வசதிகள் செய்து கொடுக்காததாலும், உற்பத்தியாகும் உணவுப்பொருளில் பெரும்பகுதியை ஏற்றுமதி செய்ததாலும், அவுரி, பருத்தி பயிர்செய்யக் கட்டாயப்படுத்தியதாலும் மிகுதியான வரிக்கொடுமையாலும் தான் அத் தாதுவருடப் பஞ்சம் நீட்டித்தது. உண்ண உணவும், குடிக்கத் தண்ணீரும் கிடைக்காமல் பன்னிரண்டு ஆண்டுகள் நீட்டித்த பஞ்ச காலத்திலேயே மேற்கண்டவாறு புகழ்ச்சிப்பாடல் பாடப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. தாதுவருடப் பஞ்சத்தில் 40 லட்சம் பேர் இறந்தனர்.

***

# 21. விடுதலைப் போர்

வணிகம் செய்ய வந்து இந்தியாவை வளைத்துப்பிடித்த ஆங்கிலேயர்களின் ஆதிக்கத்தை அகற்ற இமயம் முதல் குமரி வரை மக்கள் வெள்ளம் வீறிட்டெழுந்த போது ஈரோடு மாவட்டம் தன் உரிய பங்கைச் செலுத்த தவறவில்லை.

## தீரன் சின்னமலை

ஈரோட்டு மண்ணின் முதல் விடுதலை வீரன் தீரன் சின்னமலை (1756-1805) திப்பு சுல்தானுக்கு உதவியதுடன் 1801, 1802, 1804 ஆகிய மூன்று ஆண்டுகளில் நடைபெற்ற போரில் வெள்ளையரை முறியடித்துத் துரோகத்தால் வீழ்ந்து 31.7.1805இல் சங்ககிரிக் கோட்டையில் தூக்கிலிடப்பட்டு வீர மரணம் அடைந்தார். அவருடன் தம்பண்ணன், கிலேதார் என்ற அவர் சகோதரர்களும், தளவதி கறுப்ப சேர்வையும் தூக்கிலிடப்பட்டனர்.

சின்னமலைக்கு ஈரோடு வாரணவாசிக்கவுண்டர், வெள்ளைக் கவுண்டர், பெருந்துறை குமாரவெள்ளை ஆகியோர் பெரிதும் துணையாக இருந்தனர். இவர் கோட்டை இருந்த ஓடாநிலையில் அரசு நினைவு மண்டபம் கட்டியுள்ளது. அஞ்சல் தலையும் வெளியிடப்பட்டது. சின்னமலை பிறந்த மேலப்பாளையத்திலும் சமுதாயக் கூடம் உள்ளது.

## திருப்பூர் குமரன்

சென்னிமலையில் பிறந்த குமரன் (1904-1932) ஈரோட்டு வணிகர் கடையில் நூல் வாங்கிப் பாவு தோய்த்து நெசவு நெய்து ஈரோடு கொண்டு வந்து கொடுத்து உரிய கூலி பெற்றார். ஈங்கூர் ரங்கசாமிக்கவுண்டர் கடையில் திருப்பூரில் வேலை செய்தவர் சட்டமறுப்புப் போரில் ஈடுபட்டு போலீசாரால் அடிபட்டு 11.1.1932ல் காலமானார். இறக்கும் வரை கொடியைத் தாங்கிக் 'கொடி காத்த குமரன்' எனப்பட்டார். சென்னிமலையில் அவருக்குச் சிலை வைக்கப்பட்டுள்ளது.

### சங்கங்கள்

காங்கிரஸ் பேரியக்கத்துடன் ஈரோட்டில் விடுதலை வீரர்கள் பல அமைப்புக்களையும் ஏற்படுத்தி மக்களிடையே தேசிய உணர்ச்சியை ஊட்டினர். 'தேசிய வாலிபர் சங்கம்' 'ஜவகர் வாலிபர் சங்கம்' ஆகியவை முக்கியமானவை. 1942இல் காங்கிரஸ் பேரியக்கம் தடை செய்யப்பட்டபோது 'பாரதி வாலிபர் சங்கம்' என்று தொடங்கி இயக் கத்தை நடத்தினார். அதன் உறுப்பினர்கள் 4 அணா சந்தாவுடன் மாதம் ஒரு சிட்டா கதர் நூல் கொடுக்க வேண்டும். ஈரோடு கருங்கல் பாளையத்தில் தங்கப் பெருமாள் பிள்ளை பாரதி வாசகசாலை தொடங்கி விடுதலை உணர்வைப் பரப்பினார்.

### காந்தியடிகள்

அண்ணல் காந்தியடிகள் 18.8.1920; 25.9.1921; 8.3.1925; 11.2.1934 ஆகிய நாள்களில் ஈரோடு வருகை புரிந்தார். 1934இல் ஈரோடு தாலுக்கா போர்டு தலைவர் வி.எஸ். ராஜாக்கவுண்டர்; ஈரோடு நகராட்சித் தலைவர் கே.ஏ. ஷேக்தாவூது; வணிகர் சங்கம்; சுதேச ஜவுளி வர்த்தகர் சங்கம்; ஷராப் வர்த்தகர் சங்கம்; அரிசன சேவா சங்கம் ஆகியவை வரவேற்பளித்தன. இலண்டன் மிஷன் பயிற்சிப்பள்ளி மாணவர்கள் தாங்கள் நெய்த பாயை அன்பளிப்பாகக் கொடுத்தனர். கொடுமுடியிலும் வரவேற்பு அளிக்கப்பட்டது.

### பிறதலைவர்கள்

ஜவகர்லால் நேரு, இராஜேந்திர பிரசாத், அலி சகோதரர்கள், சரோஜினி தேவி, பாரதியார், வ.உ.சி, திரு.வி.க, வரதராஜுலு நாயுடு போன்ற பலர் ஈரோட்டுக்கு வருகைபுரிந்து விடுதலைப் போரை ஊக்குவித்தனர்.

### விடுதலைப்படை மாநாடு

இந்தியா முழுவதும் 'நவஜவான் பாரத் சபா' என்ற அமைப்பு தீவிரமாக இருந்தது. தமிழகம் தழுவிய பெரிய மாநாடு 1931இல் ஈரோட்டில் நடைபெற்றது. கேசவலால் காளிதாஸ் சேட் முன்னின்று

நடத்தினார். எஸ்.பி.வெங்கடாசலம் எஸ்.சி. தியாகராசன் போன்றோர் கலந்து கொண்டனர்.

## வனமலர்ச்சங்கம்

சென்னைக்கு உயர் கல்விக்குச் சென்ற ஈரோட்டு மாணவர்கள் முயற்சியால் சென்னையில் 1928இல் 'வனமலர்ச்சங்கம்' என்ற சங்கம் தோன்றி பாரதி பாடல்களையும், வ.வே.சு போன்றோர் பணிகளையும் பரப்ப 'பித்தன்' என்ற இதழை நடத்தினர். அதற்கு ஆசிரியர் ஈரோடு டாக்டர் எல்.கே. முத்துசாமி அவர்கள். கவிஞர் மஞ்சக்காட்டுவலசு ம.ப. பெரியசாமித் தூரன் பதிப்பாசிரியர், குட்டப்பாளையம் கே.எஸ். பெரியசாமிக்கவுண்டர், கே.எஸ். பழனிசாமிக்கவுண்டர் போன்றோர் முக்கிய உறுப்பினர்கள்.

## கள்ளுக்கடை மறியல்

25.9.1921 ஈரோட்டில் தந்தை பெரியார் இல்லத்தில் காந்தி யடிகள் தங்கியபோது தான் 'கள்ளுக்கடை மறியல் போராட்டமே உரு வானது. அதற்கு மிகவும் முக்கியக் காரணமாக இருந்தவர்கள் பெரி யாரின் துணைவியார் நாகம்மையாரும், தங்கை கண்ணம்மாளும் தான். 22.12.1921இல் 'யங் இந்தியா' இதழில் 'இரு ஈரோட்டுப் பெண்கள்' என்ற தலைப்பில் அவர்களைப் பற்றிக் காந்தியடிகள் பாராட்டி எழுதி யுள்ளார். கள்ளுக்கடை மறியலை நிறுத்தி அரசின் பேச்சுவார்த்தைக்குச் செல்ல வேண்டும் என்று முக்கிய தலைவர்கள் கூற அது என் கையில் இல்லை. ஈரோட்டுப் பெண்கள் இருவர் கையில் தான் உள்ளது என்று காந்தியடிகள் கூறினார். பெரியார், தங்கப் பெருமாள் பிள்ளை உள்பட 40 பேர் கள்ளுக்கடை மறியலில் சிறை புகுந்தனர்.

## போராட்டங்கள்

விடுதலைப் போரின் அங்கமாக நடைபெற்ற அனைத்துப் போராட் டங்களிலும் ஈரோட்டு மக்கள் ஆர்வமாகக் கலந்து கொண்டனர். நாகபுரிக் கொடிப் பேராட்டத்திற்கு ஈரோட்டிலிருந்து எம்.ஏ. ஈஸ்வரன் தலை மையில் வீரர்கள் சென்றனர். வேதாரண்யம் உப்பு சத்தியாக்கிரகத்தில்

எம்.ஏ. ஈஸ்வரன், ஆர். லூர்துசாமி, திருமலைக்கவுண்டர் உள்ளிட்ட பலர் கலந்து கொண்டனர். ஈரோடு கொங்கலம்மன் கோயில் அருகே உப்புக்காய்ச்சிச் சிலர் கைதாகினர்.

1942 ஆகஸ்டு கிளர்ச்சியின் போது 19.8.42, 24.8.42 ஆகிய நாட்களில் டெலிபோன் ஒயர்கள் 1 மைல் நீளம் வெட்டப்பட்டது. 23.8.42.இல் சாவடிப்பாளையத்தில் இரயில்பாதை தகர்க்கப்பட்டது. செப்டம்பரில் ஆர்.டி.ஓ ஆபீஸ் தீ வைக்கப்பட்டது.

கே.ஏ.ஷேக் தாவூது சாகிப் அவர்களும், ஈ.கே.ஹாஜி முகமது மீரா சாகிப் அவர்களும் 1.1.1933இல் அரசு அவர்களுக்கு அளித்த கான் சாகிப் பட்டத்தை வேண்டாம் என்று திருப்பி அளித்தனர்.

ஈரோட்டு உணவு விடுதிகளில் ''பிராமணாள் சாப்பிடும் இடம்'', ''இதராள் சாப்பிடும் இடம்'', ''தாழ்த்தப்பட்டவர்கள் சாப்பிடும் இடம்'' என்று தனித்தனியாக இருந்தது. இப்படி வேறுபாடு காட்டினால் உணவு விடுதிக்கு அனுமதியில்லை என்ற தீர்மானத்தை கே.ஏ.ஷேக் தாவூது அவர்கள் தலைமையில் கேசவலால் காளிதாஸ் சேட் நகராட்சியில் கொண்டுவர எம். சிக்கயநாயக்கர் வழிமொழிய ஏகமனதாகவே நிறை வேற்றப்பட்டது. ஆர்.கே. வெங்கிடுசாமி அவர்கள் தலைவராக இருக்கும் போது நகராட்சி நிர்வாகத்திற்கு உள்ளிட்ட எல்லாக் கட் டிடங்களிலும் தேசியக்கொடி பறந்தது.

## பெயர் மாற்றம்

1927இல் திறக்கப்பட்ட ''பீப்பில்ஸ் பார்க்'' வ.உ.சி. பூங்கா ஆனது. ஈரோட்டிலிருந்த இராணி தெரு ஆசாத் தெரு என்றும் மெக்ரிகர் தெரு சிவசண்முகம் தெரு என்றும் மெக்வெப்ஸ்டர் தெரு காமராஜ் தெருவென்றும் வெட்டர்பர்ன் தெரு முத்துரங்கம் தெரு என்றும் லார்டு நேப்பியர் தெரு நேதாஜி தெரு என்றும் எர்ஸ்கின் தெரு காந்திஜி தெரு என்றும் பிராடிதெரு ஜின்னா தெரு என்றும் பிஷர் தெரு ஆர்.கே. வெங்கிடுசாமி தெரு என்றும், வெல்ஸ்பார்க் பன்னீர் செல்வம் பூங்கா என்றும் பல பெயர்கள் தேசியப்பற்றால் மாற்றப்பட்டன.

## விடுதலை வேர்கள்

12.4.1854இல் ஈரோட்டில் பிறந்த பகடால நரசிம்மலு நாயுடு 1885இல் முதல் காங்கிரஸ் மாநாட்டில் கலந்து கொண்டார். அதே கொள்கையோடு அதற்கு முன்பு சென்னையில் தொடங்கிய சென்னை மகாஜன சபையிலும் உறுப்பினராக இருந்தார். 1885, 1886 இரு காங்கிரஸ் மாநாடுகள் பற்றி நூல் வெளியிட்டார். மூன்றாவது சென்னை மாநாட்டில் 1887இல் 'காங்கிரஸ் கீதம்' என்ற பாடல் தொகுதியை வெளியிட்டார்.

தந்தை பெரியார் (1879-1973) 1919இல் காங்கிரஸ் பேரியக்கத்தில் சேர்ந்தார். இவர் தமிழகக் காங்கிரஸ் தலைவராகவும், செயலாளராகவும் இருந்த காலத்தில் ஈரோடே மாநிலத் தலைமையமாக விளங்கியது.

எம்.ஏ. ஈஸ்வரன் (1890-1978) பி.ஏ. பட்டத்தைத் துறந்து ஊர் ஊராகக் கதரைச் சுமந்து விற்றார். எல்லாப் போராட்டங்களிலும் தலைமை தாங்கி முன்னின்ற இவர் ''சுதந்திரம் பெறும் வரை திருமணம் செய்து கொள்ள மாட்டேன். காலுக்குச் செருப்பணிய மாட்டேன்'' என்று கூறி அவ்வாறே கடைசிவரை இருந்தார். 1946இல் போட்டியின்றி சட்ட மன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

ஈரோடு ஆர்.சி. கிருஷ்ணன் 1930 முதல் நடைபெற்ற எல்லாப் போராட்டங்களிலும் கலந்து கொண்டவர். வார்தா சபர்மதி ஆசிரமம் சென்று காந்தியடிகளுடன் தங்கி ஆசிரமப் பணிகளில் ஈடுபட்டவர். தன் சொத்து முழுவதையும் விடுதலைப் போருக்காக இழந்தவர். தாழ்த்தப்பட்ட சிறுவனை வீட்டில் வளர்த்தார். இவர் தோற்றம் நேதாஜி போல் இருக்கும்.

கேசவலால் காளிதாஸ் சேட் விடுதலை இயக்க மாநாடுகளை நடத்தியவர். நகராட்சிக் கட்டிடங்களில் காங்கிரஸ் கொடி பறக்கக் காரணமாக இருந்தவர். தான் எடுத்த மேனகா திரைப்படத்தில் 'பாரதியார்' பாடலை முதலில் பாடவைத்தார். இவர் வீட்டில் 1934ல் காந்தியடிகள் தங்கினார்.

1937 தேர்தலில் காங்கிரஸ் பேரியக்கதிற்காக மேடையெங்கும் 'ஓட்டுடையீர் எல்லாம் கேட்டிடுவீர்' என்று அடானா ராகத்தில் பாடிப் பிரச்சாரம் செய்தவர் கொடுமுடி கே.பி. சுந்தராம்பாள், கொடுமுடி கே.எம். மகுடபதி இல்லத்திற்கும் சுந்தராம்பாள் இல்லத்திற்கும் 11.2.1934 அன்று காந்தியடிகள் வருகைபுரிந்தார். 'பிரிய சகோதரி' என்று தமிழில் எழுதி காந்தியடிகள் சுந்தராம்பாளுக்குக் கடிதம் எழுதினார்.

கூகலூர் கே.கே. சுப்பண்ண கவுண்டர் தன் வீட்டுக்கிணற்றை தாழ்த்தப்பட்டவர்களுக்குத் திறந்துவிட்டு தேசியப்பணியாற்றி 'கூகலூர் காந்தி' எனப் பெயர் பெற்று காந்தியடிகள் போலவே உடை யணிந்தார். கொடுமுடி எம்.சுப்பையா ''சோட்டா காந்தி'' என்று அழைக்கப்பட்டார். கோபி லட்சுமண ஐயர், கருக்கம்பாளையம் எம்.எம். ஆயண்ணன், பாப்பம்பாளையம் ப.வை. கந்தசாமி, சாவடிப்பாளையம் புதூர் ஆர். முத்தப்பன், சாமிநாதபுரம் பொன்னுசாமி, ஈரோடு வி.பி. குருசாமி போன்ற ஈரோடு மாவட்டம் சார்ந்த சுமார் 400 பேர் விடு தலைப் போரின் வேராகவும் விதையாகவும் விளங்கினர்.

ஈரோடு எம்.ஆர். கமலவேணி, எம். பங்கஜத்தம்மாள், கொடு முடி அலமேலுமங்கை, சத்தி முத்துலட்சுமியம்மாள், கோபி.கே.எஸ. லட்சுமியம்மாள் போன்ற பல பெண்களும் விடுதலைப் போரில் முன்னின்றனர்.

9.4.1927இல் டி. சீனிவாசமுதலியார் நகராட்சித் தலைவராக இருந்தபோது காந்தியடிகள் சிலையை கவர்னர் வைக்கவுண்ட் கோஷன் அவர்களைக் கொண்டு திறக்கச் செய்தார். 1.10.1939இல் மற்றொரு சிலை ஆர்.கே.வெங்கிடுசாமி காலத்தில் ஒ.பி. ராமசாமி ரெட்டியாரால் திறக்கப்பட்டது.

## தந்தை பெரியார்

பெரியார் ஈ.வெ. இராமசாமி ஒரு சமூகப் புரட்சியாளர். உறுதி யான பகுத்தறிவாளர். சுய சிந்தனை மிக்கவர். எல்லாவற்றிற்கும் மேலாக உயர்ந்த மனித நேயத்தின் உறைவிடம்.

சமத்துவ நெறியும் சமநீதியும் நிலைநாட்டப்படுவதற்காகவே அரசியலை அவர் ஒரு களமாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டார். மூட நம்பிக்கைகள், சமயநெறி, உயர்சாதி மனப்பான்மை, தீண்டாமை, பெண்ணடிமைத்தனம் ஆகிய தளைகளை அறுத்தெறிய முற்பட்ட சமூக சீர்திருத்தவாதி பெரியார்.

1879ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 17ஆம் நாள் வெங்கட நாயக்கரின் இரண்டாவது மகனாகப் பிறந்தார். பன்னிரண்டாம் வயதில் படிப்பை நிறுத்திவிட்டு தந்தையாருக்கு வணிகத் தொழிலில் துணை புரிந்தார். தந்தைக்குப்பின் 1911இல் முழுமையாக வணிகத்தில் ஈடுபட்டார். நகர்மன்றத் தலைவராக இவர் விளங்கியபோது ஈரோட்டுக்குப் பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்கப்பட்டது.

இவர் 1919இல் காங்கிரசில் சேர்ந்தார். தீண்டாமை ஒழிப்பு, மதுவிலக்கு ஆகிய இரு களங்களில் தீவிரமாக விளங்கினார். குடும்பத்தோடு கதர் அணிந்து கதர் துணிகளை மக்களிடையே பரப்பினார். ஒத்துழையாமை இயக்கத்தின் போது நீதி மன்றப் புறக்கணிப்பை மேற்கொண்டு 50000 ரூபாய் பெறுமானமுள்ள பத்திரங்களை எரித்தார். மதுவிலக்குப் போராட்டத்தின் போது தன் தோப்பிலிருந்த 500 தென்னை மரங்களை வெட்டினார். 1924இல் கேரள மாநில வைக்கத்தில் தாழ்த்தப்பட்ட மக்கள் உரிமைக்காகத் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராக இருந்தபோது போராடி வெற்றி கண்டார். பெரியாரின் துணைவியார் நாகம்மையாரும் சகோதரி கண்ணம்மாளும் பல போராட்டங்களில் பங்கேற்றனர்.

வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ முறைத் தீர்மானத்தைக் காங்கிரஸ் எதிர்த்ததால் 1925ல் காங்கிரசிலிருந்து வெளியேறினார். அத்தீர்மானத்தை நீதிக்கட்சி ஏற்றாலும், அது போதாது என்று சுயமரியாதை இயக்கத்தைத் தோற்றுவித்தார். 1944ல் சேலத்தில் நீதிக்கட்சி மாநாட்டில் நீதிக்கட்சியை திராவிடர் கழகம் ஆக்கினார். தம் கொள்கைகளுக்காக குடியரசு, விடுதலை, பகுத்தறிவு, உண்மை, ரிவோல்ட் இதழ்களைத் தொடங்கி ஓயாது எழுதினார். 'பெரியார்' என்று

போற்றப்பட்டார். 150க்கு மேற்பட்ட நூல்களை எழுதி, பிறருடைய நூல்கள் பலவற்றையும் பதிப்பித்தார். 1973 டிசம்பர் 24ஆம் நாள் காலமானார். இவர் நூற்றாண்டு விழாவில் 17.9.1979 அன்று பெரியார் மாவட்டம் அமைக்கப்பட்டது.

❊❊❊

# 22. சமயங்கள்

## அ) சைவம்

ஈரோடு மாவட்டத்தில் பெரும்பாலோர் பின்பற்றும் சமயம் சைவ சமயமேயாகும். கொங்கு நாட்டை ஆட்சிபுரிந்த இரட்ட அரசர்களில் ஏழாவது கடைசி அரசனான திருவிக்கிரமதேவன் சங்கரதேவர் ஆணைப் படி சிவஞானம் அடைந்து வாழ்ந்தான் என்று கூறப்பட்டுள்ளது.

சோழர் வருகைக்குப்பின் சைவமும் சிவவழிபாடும் பெருகின. முதல் பராந்தகனின் திருவிடைமருதூர்க் கல்வெட்டில் ''கொங்கு ஸ்ரீ கார்யம் ஆராய்கின்ற காரிநக்கன்'' என்ற கோயில் அலுவலன் குறிக்கப்படுகின்றான். ஈரோடு மாவட்டத்தில் பல கோயில்களைச் சோழர் புதியதாகக் கட்டினர். அவை

விக்கிரம சோழீசுவரம் (கண்ணபுரம்)
குலோத்துங்க சோழீசுவரம் (முத்தூர்)
செயங்கொண்ட சோழீசுவரம் (நத்தக்காரையூர்)
பராக்கிரம சோழீசுவரம் (வெள்ளகோயில்)
அபிமான சோழீசுவரம் (கண்ணபுரம்)

எனப் பெயர் பெற்றன.

சோழநாட்டிலிருந்து கோயில் பூசைக்கு சிவப்பிராமணர்கள் அழைத்து வரப்பட்டனர். ''சோழர்கள் கொங்கிடை மெய்த்தல பூசை நன்குறத் தன் நாட்டுளாரில் சமர்த்தர்கண்டு'' அழைத்துக் கொண்டு வந்து நிலையான காணியும் மேன்மையுந் தந்ததாகத் திருச்செங் கோட்டுத் திருப்பணிமாலை கூறுகிறது. சோழர்கள் தமது மண்ட லத்துச் சைவ மறையோரைப் பூசனைக்கு அழைத்து வந்ததாகக் கொங்கு மண்டல சதகமும் கூறுகிறது.

காணியுடைய சிவபிராமணர்கள்
திருமழபாடிப்பட்டன், தில்லையுடையான்
திருவேகம்பமுடையான், சிகாழிநாதன்

என்ற சோழமண்டல ஊர்ப் பெயர்களுடன் குறிக்கப்படுகின்றனர்.

வீரசோழ பட்டன், விக்கிரமசோழ பட்டன் என்று அரசர் பெய ருடன் பட்டப் பெயர்களையும் வைத்துக் கொண்டதைக் கல்வெட் டுக்கள் காட்டுகின்றன. மற்றும் சிலர் தங்களை ''சோழிய பிராமணர்'' என்றும் அழைத்துக் கொண்டனர்.

தேவாரத் திருமுறைகளையும் சைவமரபு வரலாறுகளையும் ஈரோடு மாவட்டப்பகுதி மக்கள் 11-13 ஆம் நூற்றாண்டுகளில் நன்கு உணர்ந்திருந்தனர். இது

தடுத்தாட் கொண்டான், பிறைசூடும் பெருமாள்,
சேரமான் தோழன், நம்பி நல்லமங்கை பாகன்,
சிறுநம்பி நம்பியாரூரன், சொக்கன் ஆலாலசுந்தர நம்பி
கொன்றைவார் கடையன், எடுத்தகை அழகியான்

என ஆண்கள் பெயராலும், மங்கயைர்க்கரசி, சடைமேலிருந்தாள் என பெண்கள் பெயராலும் அறியலாம்.

சிவ பிராமணர்கள் சைவ சூடாமணி, சைவ சக்கரவர்த்தி, சைவ புரந்தரச் சக்கரவர்த்தி, சமய மந்திரி என்று குறிக்கப்பட்டுள்ளனர். சிவ பிராமணர் தங்கள் கோயில் இறைவன் பெயரைச் சிலர் வைத்துக் கொண்டனர். பால்வண்ணத்தான் (பால் வெண்ணீசுவரர் - பட்டாலி) பச்சோட்டு அய்யன் (பச்சோட்டு ஆவுடையார் - மடவளாகம்) என்பதைக் கல்வெட்டில் காண்கிறோம்.

ஒலகடம், கண்ணபுரம் போன்ற பல ஊர்களில் முருகன் ''குன்ற மெறிந்த பிள்ளையார்'' என்று கூறப்பட்டுள்ளார். கோயில் மடவளா கத்தில் வயிராகிகள், தபசியர் இருந்ததாக இரண்டு கல்வெட்டுக்கள் கூறுகின்றன. பாவம்-புண்ணியம், சொர்க்கம்-நரகம், மறுபிறப்பு என்பவைகளில் நம்பிக்கை இருந்தது.

''தீங்கு நினைத்தவன் கங்கைக் கரையில் காராம்
பசுவைக் கொன்ற பாவத்திலே போவான்''
''இத்தருமம் அல்ல என்றவன் மறுசென்மத்துக்கும்
நரகத்துக்கு நாற்றங்கால் ஆவான்''

என்பவை கல்வெட்டுத் தொடர்கள்.

''இதனை மேன்மேலும் நடத்தினவன் அறுபத்து நான்கு விளை யாட்டு விளையாடின அழகிய சொக்கர் அருளைப் பெறுவான்'' என்று ஒரு கல்வெட்டுக் கூறுகிறது.

அபிடேக நீர்தாங்கிச் செல்லும் சிவபிராமணர் மட்டுமே கருவறைக்குள் நுழையும் உரிமை பெற்றிருந்தனர். ''குடங்கொண்டு கோயில் புகுவான்'' என்று அழைக்கப்பட்ட அவர்களே பெரும்பாலான கொடைகளைப் பெற்று சந்திர சூரியர் உள்ளவரை நடத்தி வைப்பதாக எழுதிக் கொடுத்துள்ளனர்.

மகிழன் குளம் (மகிழ்வனமுடையார் - பெருந்தலையூர்) பெருந் திருவாட்டி வாய்க்கால் என்பனபோல இறைவன், இறைவி பெயர்கள் கோயில் தொடர்புடைய இடங்களுக்கு வைக்கப்பட்டிருந்தன. தொடக்க காலத்தில் சிவன் கோயில்களில் அம்மன் சன்னதிகள் தனியாக இல்லை. பின்னரே அவை தனியாக அமைக்கப்பட்டன. அம்மன் சன்னதிகள் ''திருக்காமக்கோட்டம்'' எனப்பட்டது. அம்மன் ''திருக்காமக் கோட்டத்து நாச்சியார்'' எனப்பட்டார். சில அரசர்கள் தம் அக்கன் திருநாமத்தாலும் மாதாக்கள் பெயராலும் அம்மனை (நாச்சியார்) பிரதிட்டை செய்தனர்.

திருப்பள்ளி எழுச்சி, பதிகம், திருவெம்பாவை பாடப்பட்டன. ''திருவாதிரைப் பெரிய திருமஞ்சனம்'' ஆடி அயனம், கார்த்திகை, சிவராத்திரி முதலிய விழாக்கள் கொண்டாடப்பட்டன. பிற அம்மன் கோயில் பெரும்பாலும் பிடாரியார்' 'நங்கை' கோயில் எனப்பட்டன. கோயில் முதல் அடியாராகவும் உரிமையாளராகவும் சண்டிகேசுவரர் கருதப்பட்டார். கோயில்களைப் புதுப்பிக்கத் தனிக்கொடை வழங்கப் பட்டது. பெண்கள் பலர் கோயில் கொடைகள் அளித்துள்ளது இம் மாவட்டத்தின் சிறப்பாகும்.

அணை உடையாமல் நிற்க, திருவிழாத்தடை நீங்க, 'தேவதை களைத் திருப்திபடுத்த நரபலி கொடுக்கும் வழக்கமும்' கொற்றவைக் குத் தங்களைத் தாங்களே பலி கொடுத்துக் கொள்ளும் வழக்கமும் இருந்தன. சென்னிமலை, திங்களூர், விசயமங்கலம், பவானி, அந்தியூர் ஆகிய ஊர்களில் தலைப்பலி சிற்பங்கள் உள்ளன.

## திருமடங்கள்

சமயப் பெரியவர்கள் தங்கி சமயம் வளர்த்த திருமடங்கள் ஈரோடு மாவட்டத்தில் இருந்துள்ளன. சிவாலயம் போலவே மடத்தை 'மடாலயம்' என்றனர். மடத்திற்கு மானியங்கள் 'மடப்புரம்' என்ற பெயரில் விடப்பட்டன. கோயிலை ஒட்டியும் பிரகாரங்களிலும் உள்ள இடங்களில் 'திருமடவளாகம்' எனப்பட்டது. அங்கு 'தபசியர்', 'வைராகிகள்' இருந்ததாக ஈரோடு மாவட்டக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

அலங்கியம் கல்வெட்டில் 'ஞானமூர்த்தி தேசிகர் மடம்' இருந்ததாக கல்வெட்டுக் கூறுகிறது. குறுப்புநாட்டு ஆதியூர்க் கல்வெட்டில் மடத்துக்குப் புண்ணியம் செய்தவர்கள் ''திருப்பாட்டுப் பெற்ற நூற்றெட்டுச் சிவாலயத்தைத் தரிசித்த'' பலன் பெறுவர் என்று கூறப்படுகிறது. கண்ணபுரம் கல்வெட்டில் ''மகேசுவரர் மடம்'' குறிக்கப்படுகிறது. மயில்ரங்கம் கல்வெட்டில் ''திருஞான சம்பந்தக் கண்ணுடை வள்ளல் மடம்'' குறிக்கப்படுகிறது. இவை அனைத்தும் சைவ சமயம் தொடர்பான மடங்களே. திருமலை நாயக்கர் கல்வெட்டில் ஈரோடு 'சந்திரமதி முதலியார் மடம்' குறிக்கப்படுகிறது.

## இன்றைய மடங்கள்

விசயமங்கலத்தை அடுத்த கூனம்பட்டியில் மாணிக்கவாசகர் மடமும், மருதுறைக் குருக்கள் பாளையத்தில் ஆலால சுந்தரர் மடமும், ஈரோட்டில் அப்பர் சுவாமிகள் மடமும், சிவகிரியில் கண்ணப்பர் மடமும், பாகூர் அகிலாண்ட தீட்சிதர் மடமும், நெருஞ்சிப் பேட்டையில் ஆயிர வைசியர் மடமும், சென்னிமலையில் செங்கத்துறைப் பூசாரியார் மடமும், வேளாளத் தம்பிரான் மடமும், ஈரோட்டில் சங்கரர் மடத்தின் கிளைமடமும் ஈரோடு காவிரிக்கரையில் இராகவேந்திரர் பிருந்தாவனமும் ஊஞ்சலூரில் சேஷாத்திரி சுவாமிகள் அதிட்டானமும் இராகவேந்திரர் பிருந்தாவனமும் உள்ளன.

கஸ்தூரிபா கிராமம் அருகிலும் நஞ்சை ஊத்துக்குளி அருகிலும் ''தம்பிரான் வலசு'' என்ற ஊர்கள் உள்ளன. அவை சைவத்துறவியர்க்குக் கொடுத்த கொடை ஊர்களாகும்.

**சித்தர்கள்**

'சித்' என்றால் அறிவு என்று பொருள். சித்தர் பேரறிவு உடையவர்கள். பதினெண் சித்தர்கள் என்றும், பதினெட்டு வகையினர் என்றும் கூறுவர். இவர்கள் கண்ட மருத்துவ முறையே சித்த மருத்துவம்.

ஈரோடு மாவட்டத்தில் கொங்கணச் சித்தர் ஊதியூர் மலையில் இருந்தவர். அவர் உலையில் உலோகங்களை இட்டு ஊதி பொன் தயாரித்ததால் ஊதியூர் 'பொன் ஊதியூர்' எனப்பட்டது. ஊதியூர் மலை மேல் கொங்கணச் சித்தருக்குக் கோயில் உண்டு.

இடைஞானியார் தாராபுரம் வட்டம் மறவபாளையத்தில் அப்பிரமேய ஈசுவரர் அருள் பெற்றவர். அப்பிரமேயத் தலபுராணத்தில் இவர் வரலாறு விரிவாகக் கூறப்படுகிறது.

சிவவாக்கியர் சிவமலையைச் சேர்ந்தவர். சிவமலை என்ற பெயரே இவரால் பெற்றது என்பர். மலைமேல் சிவவாக்கியர் சமாதி உள்ளது.

பிண்ணாக்குச் சித்தர் சென்னிமலையில் வாழ்ந்தவர். பிளவு பட்ட நாக்கைப் பெற்றதால் இப்பெயர் பெற்றார். சென்னிமலை மேல் உச்சிக்குச் செல்லும் வழியில் உள்ள 'சந்நியாசி கோயில்' பிண்ணாக்குச் சித்தர் கோயில் என்பர். அருகில் இவர் தவமியற்றிய குகை உள்ளது.

பாரியூர் கொண்டத்துக்காளியம்மன் கோயிலில் சித்தர் ஒருவரின் சமாதி உள்ளது. வெள்ளகோயில் வீரக்குமாரர், சின்னமுத்தூர் செல்லக் குமாரர், வேலம்பாளையம், சேமூர் குப்பியண்ணன் ஆகியோரும் தெய்வ அருள் பெற்ற சித்தர்களே. இவர்கள் தெய்வமாக வணங்கப் பெறுகின்றனர். கோபி வட்டத்தில் சித்தர் மலை உள்ளது. பருவாச்சி அருகேயுள்ள கருமலையாண்டவர் கோயில், கிழாம்பாடி முனியப்பன்கோயில், ஈரோடு ஐயனாரப்பன் கோயில் ஆகியவற்றில் பல சித்தர்களின் உருவச் சிலைகள் உள்ளன. ஐயனார் வழிபாடும் இங்கு சிறப்பாக இருந்துள்ளது.

## ஆ] வைணவம்

ஈரோடு மாவட்ட மக்களும் ஆட்சிபுரிந்த கொங்கு அரசர்களும் கொங்கு நாட்டை ஆண்ட பிறநாட்டு அரசர்களும் பெரும்பாலும்

சைவர்களாக இருந்தாலும் வைணவ சமயத்தையும் பேணிக் காத்து வந்துள்ளனர். சிவாலயம் உள்ள ஊர்களில் எல்லாம் பெரும்பாலும் வைணவக் கோயிலும் இருந்தன. பவானி, கொடுமுடி, நத்தக்காரையூர், காடையூர் போன்ற ஊர்களில் சிவாலய எல்லைக்குள்ளேயே வைணவக் கோயில்கள் உள்ளன.

மயில்ரங்கம், ஈரோடு, எழுநூத்திமங்கலம், கொடுமுடி போன்ற பல ஊர் களில் ஒரே கொடை சிவன்கோயிலுக்கும், வைணவக் கோயிலுக்கும் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளன. கொங்கு நாட்டை ஆட்சி புரிந்த பிட்டி தேவன் என்ற கங்க மன்னன் வைணவனாகி 'விஷ்ணுவர்த் தனன்' என்று பெயர் வைத்துக் கொண்டான். பெரியாழ்வார் பாசுரத்தில் ''கொங்கும் குடந்தையும் கோட்டியூரும் பேரும்'' என வரும் அடிகளில் குறிக்கப் பட்ட 'கொங்கு' தாராபுர வட்டத்துக் கொங்கூரேயாகும். எனவே அவ்வூர் ''மங்களாசாசனம்'' பெற்ற ஊராகிறது.

இராமானுஜர் 11ஆம் நூற்றாண்டில் சோழனோடு ஏற்பட்ட மன வேறுபாட்டால் கொங்கு நாடு வழியாகக் கருநாடகம் சென்றவர் கொங் கூர் வந்து அங்கு வாழ்ந்த லட்சுமி என்ற கொங்குப் பிராட்டியாரால் உபசரிக்கப்பட்டு அங்கு சில நாட்கள் தங்கியிருந்தார். பின்னர் கர்நாட காவில் உள்ள மேல்கோட்டைக்குச் சென்றார். 'பிரபந்நாம்ருதம்' என்ற வைணவ நூலின் தனியன்களில் கொங்குப் பிராட்டியார் வணக்கத் திற்கு உரியவராகப் போற்றப்படுகிறார். கொங்குப் பிராட்டியாரின் கணவர் 'கொங்கிலாச்சன்' வைணவ சிங்காசனாதிபதிகள் 74 பேரில் ஒருவராகக் குறிக்கப்பட்டுள்ளார்.

காஞ்சிபுரத்தைச் சேர்ந்த வேதாந்த தேசிகர் தம் மதத்தைச் சேர்ந்த சிலராலும் அன்னியர்களாலும் தொல்லையுற்று ஈரோடு மாவட்டத்தின் சத்தியமங்கலத்திற்கு வந்து பாதுகாப்பாகத் தங்கினார். இராமானுஜர் பாஷ்யங்களை அவர் சத்தியமங்கலத்தில் தான் பாது காத்தார். முற்றுப் பெறாமலிருந்த ''பரமதபங்கம்'' என்ற தம் நூலை சத்தியமங்கலத்தில் இயற்றி முற்றுப் பெறச் செய்தார். இதை அவர் பாடல் ஒன்று விளக்குகிறது.

''மாதவனார் வடகொங்கில் வானியாற்றின்
வண்ணகைநன் நடங்கண்டு மகிழ்ந்து வாழும்
போதிவைநாம் பொன்னயிந்தை நகரில் முன்னாள்
புணராத பரமதப்போர் பூரித் தோமே''

என்பது அவர் பாடலாகும்.

ஈரோடு மாவட்டத்துக் கத்தாங்கண்ணி சொக்கப்பெருமாள் கோயில் குலோத்துங்கசோழ விண்ணகரம் என்றும், திங்களூர் அழகப் பெருமாள் கோயில் சுந்தர பாண்டிய விண்ணகரம் என்றும் குன்னத்தூர் இலட்சுமி நாராயணப் பெருமாள் கோயில் வீரபாண்டிய விண்ணகரம் என்றும் அழைக்கப்பட்டது. இதனால் ஈரோடு மாவட்ட அரசர்கள் வைணவ சமயத்தைப் போற்றிப் புரந்தது தெரிகிறது. 'விஷ்ணு+ கிரகம்'' என்ற சொல்லே 'விண்ணகரம்' என ஆயிற்று.

விசயமங்கலம் கரியமாணிக்கப் பெருமாள் கோயில் 'சித்திரமேழி விண்ணகரம்' என்று அழைக்கப்பட்டது. ''சித்திர மேழி'' என்பது வேளாளர் கூடும் பெரியநாட்டுச் சபையின் அடையாளச் சின்னமாகும். இங்குள்ள பெருமாள் கோயில்கள் 'திருமேற்கோயில்', 'மேலைத் திருப்பதி', ''திருமேல் திசைக்கோயில்'' என்று அழைக்கப்பட்டன. கோயில் அமைந்த இடம் ''திருமுற்றம்'' எனப்பட்டது. இங்குள்ள ''ஸ்ரீ வைஷ்ணவர்'' சிலர் ''பதினெட்டு நாட்டு வைஷ்ணவர்'' எனப்பட்டனர்.

நம்பிமார், ஸ்ரீ வைஷ்ணவர், ஸ்ரீகார்யம் செய்வார், திருவாசல் வேளைக்காரர் ஆகியோரிடம் வைணவக் கொடைகள் அளிக்கப் பட்டன. முதல் பராந்தக சோழன் காலத்தில் கி.பி.922ஆம் ஆண்டு ஈரோடு பள்ளி கொண்ட பெருமாள் கோயிலில் ''வெண்ணைக்கூத்த நாயனார்க்கு'' திருவாய்ப்பாடி நாட்டவர் திருமணவரி (கண்ணாலக் காணம்) கொடுத்துள்ளனர். அப்பெயர் ஆயர்பாடியை (ஆய்ப்பாடி) நினைவூட்டுகிறது. குன்னத்தூர் லட்சுமி நாராயணப் பெருமாள் கோயிலில் ஈரோட்டுச் சமயமந்திரி நம்மாழ்வாரையும் எம்பெருமாள் வாரையும் எழுந்தருளச் செய்துள்ளார். வழிநடையாக வரும் தேசாந்திரி வைஷ்ணவர்க்கு நாள் ஒன்றுக்குப் பொன்னாடு நாழியால் உரியரிசி

அமுது செய்து அவர்கட்குப் பிரசாதம் வழங்க திங்களூர்க் கோயிலில் கொடையளிக்கப்பட்டுள்ளது.

வைஷ்ணவக் கோயில் காணியுடைய ஸ்ரீ வைஷ்ணவர்கள் சிலரின் பெயர் திருவேங்கிடப் பெருமாள் தாசன், அழகப் பெருமாள், மலைகுனிய நின்றான், அழகிய மணவாளன் என்பதாகும். ஒருவர் பெயர் ''நம்பிமாரில் சொக்கன் சிறுத்தொண்டனான வேங்கடப் பெருமாள் தாதன்'' என்பது. 'ஸ்ரீ ஜெயந்தி' திருநாள் கொண்டாடக் குன்னத்தூர் கோயிலுக்குக் கொடையளிக்கப்பட்டுள்ளது.

கோரவிகோதை ஈரோடு பள்ளி கொண்டருளிய பெருமாள் கோயிலில் வெற்றி அபிஷேகம் செய்து கொண்டதால் அக்கோயில் ''அபிஷேக விண்ணகரம் பெருமாள் கோயில்'' எனப்பட்டது. தாரா புரம் உத்தம வீரராகவப் பெருமாள் கோயிலுக்கு 'ராஜ்ய அபிஷேக விண்ணகரம் பெருமாள் கோயில்' என்று பெயர். மூன்றாம் வீர வல்லாளனின் தண்ட நாயகன் சிங்கயத் தண்ணாயக்கன் தன் தந்தை மாதப்பத்தண்ணாயக்கன் பெயரில் டணாயக்கன் கோட்டையில் ஒரு பெருமாள் கோயில் கட்டி அதற்கு மாதவப் பெருமாள் கோயில் என்று பெயரிட்டு கொங்கு நாட்டில் 13 ஊர்களைக் கொடையாக அளித்தான். அவன் திருவரங்கம் அரங்கநாதர் கோயிலுக்கு ஈரோடு மாவட்ட ஆப்பக்கூடலைக் கொடையாக அளித்தான்.

ஈரோடு மாவட்டக் கொங்கு வேளாளத் தலைவர்கள் சிலர் திரு வரங்கம் சென்று வழிபட்டு மகப்பேறு பெற்றமையால் ''சீரங்கராயன், சீரங்காயி'' என்று தம் ஆண், பெண் குழந்தைகளுக்குப் பெயர் வைத்த தாகப் பட்டயங்கள் கூறுகின்றன. வைணவக் கோயில்களை பெருமாள் கோயில்கள் என அழைக்கும் ஈரோடு மாவட்ட மக்கள் பலர் புரட்டாசி சனிக்கிழமைகளில் பெருமாள் கோயிலில் வழிபாடு செய்வதை வழக்க மாகக் கொண்டுள்ளனர். ஈரோடு மாவட்ட ஆடவர் பெயர்களில் சைவப் பெயரை விட வைணவப் பெயர்களே அதிகம் ஆகும். சிவன்கோயில் முன் உள்ள தீபத்தம்பத்தை ''கருட கம்பம்'' என்று அழைப்பது வைண வத் தாக்கமே. அண்மையில் கண்டு பிடிக்கப்பட்ட பெரியபுலியூர்

நடுகல்லில் இறந்த வீரன் வைணவபதம் அடைவதாகக் 'கருடன்' அடையாளம் பொறிக்கப்பட்டுள்ளது.

பவானி வட்டம் ஊராட்சிக் கோட்டைமலை, ஈரோடு வட்டம் மங்கலகிரி பெருமாள் மலை, முருங்கத் தொழுவு கிராமம் அணியரங்க மலை ஆகியவற்றில் மலைமேல் வைணவக்கோயில் உள்ளது.

## இ] சமணம்

ஈரோடு மாவட்டத்திற்குச் சமண சமயம் கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் வந்தது. சமண சமயத்தலைவர் பத்திரபாகு முனிவர் (கி.மு. 327-297), மௌரியப் பேரரசன் சந்திரகுப்தர் (கி.மு. 322-298) காலத்தில் கன்னட நாட்டு சிரவணபௌகொளா வழியாக ஈரோடு மாவட்டத்திற்குச் சமணம் பரவியது.

பத்திரபாகு முனிவர் தமக்கு இறுதிக்காலம் வருவதை உணர்ந்து சிரவணபௌகொளாவில் சல்லேகனை விரதமிருந்து உயிர் விடத் தீர்மானம் செய்தார். அவருக்குப் பணிவிடை செய்ய சீடன் சந்திரகுப்தனும் அங்கேயே தங்கி விட்டான். விசாகாச்சாரியார் தலைமையில் எண்ணாயிரம் சமணர்கள் தமிழ்நாடு வந்தனர். அவர்கள் முதலில் வருகை புரிந்த பகுதி ஈரோடு மாவட்டம்.

ஈரோடு மாவட்டப்பகுதிக்கு வந்த சமணர்கள் இங்குள்ள மலைகளில் தங்கினர். ஈரோடு மாவட்டத்தில் அரசண்ணாமலை, அறச்சலூர் மலை, ஈரெட்டி மலை போன்ற சில மலைகளில் சமணர் தொடர்பு காணப்படுகிறது.

பெருந்துறை வட்டத்தில் விசயமங்கலத்திற்குத் தெற்கே 4 கி.மீ தொலைவில் அரசண்ணாமலை உள்ளது. மலை ஏறுவதற்குப் பழமையான படிகள் உள்ளன. மேற்கேயுள்ள மலைமீது முன்பு நேமிநாத தீர்த்தங்கரர் கோயில் இருந்தது. அதற்குச் சற்றுக் கீழே இயக்கி கூஷ்மாண்டினி கோயில் இருந்தது. சுமார் 80 ஆண்டுகளுக்கு முன் சந்நியாசி ஒருவர் அங்குள்ள சமணச் சிலைகளை அகற்றிவிட்டு சிவலிங்கப் பிரதிஷ்ட்டை செய்து விட்டார். நேமிநாதர், இயக்கி படிமங்களைப்

பாதுகாப்பின் பொருட்டு விசயமங்கலம் சமணக் கோயிலுக்குக் கொண்டு வந்து விட்டனர். தமிழக அரசின் பழஞ்சுவடி நூலகத்தில் அரசண்ணா மலை கூஷ்மாண்டினி இயக்கியைப் புகழ்ந்து ஒரு பாடல் உள்ளது. 'அரசண்ணாமலை அதிசயாமலை' என அப்பாடல் கூறுகிறது.

அரசண்ணாமலை அடிவாரத்தில் கொங்கம்பாளையத்தில் உள்ள கொங்கு வேளாளர்கள் மலைமேல் "அரசாத்தாள்" இருப்ப தாகக் கூறுகின்றனர். பெண்களுக்கு அரசாத்தாள் என்று பெயர் வைக் கின்றனர். இது சமண இயக்கியின் பெயராகும்.

கொங்க தேச ராசாக்கள் நூலில் கங்கமன்னர்கள் ஆதரவு பெற்ற 'அரிஷ்டணன்' என்ற சமணப் பெரியார் குறிக்கப் பெறுகிறார். 'அரிஷ் டணன் மலை' அரசண்ணாமலை ஆகியிருக்கலாம். தீர்த்தங்கரர்கள் எல்லோரும் அரசர்களே. அதனாலும் 'அரசண்ணல்மலை' அரசண் ணாமலை ஆகியிருக்கலாம்.

அறச்சலூர் மலையில் சமண முனிவர் கல்படுக்கைகளும் தமிழ் பிராமி கல்வெட்டும் உள்ளது. ஈரெட்டி மலையில் ஒரு துறவியின் நினைவுக்கல் கிடைத்துள்ளது.

கொங்கு நாட்டில் இன்றும் நல்ல நிலையில் உள்ள சமணக் கோயில்கள் 6 உள்ளன. அவற்றில் ஐந்து ஈரோடு மாவட்டத்தில் உள்ளன என்பது சிறப்புக்குரியது.

## சீனாபுரம்

பெருந்துறையிலிருந்து திங்களூர் செல்லும் வழியில் ஏழாவது கிலோ மீட்டரில் உள்ள மமுட்டித்தோப்பு என்ற இடத்தில் முதல் தீர்த்தங்கரர் ஆதிநாதர் (பகவான் ரிஷபதேவர்) கோயில் உள்ளது.

நன்னூலாசிரியர் பவணந்தி முனிவர் வாழ்ந்து வழிபட்ட கோயில், 70 ஆண்டுகளுக்கு முன்பு விசயமங்கலம் சமணர் சூரய்யர் வந்து வழிபாடியற்றியதாகக் கூறப்படுகிறது. இக்கோயிலுக்கு நமிட்டிபாளை யத்தில் 27.67 ஏக்கரும், தலையம்பாளையத்தில் 22 ஏக்கரும் மானிய பூமி உள்ளது எனக் கூறுகிறார்கள்.

**திங்களூர்**

திங்களூரிலிருந்து சுங்கக்காரன்பாளையம் செல்லும் வழியில் உள்ள கோயில் தோட்டத்தில் புஷ்பதந்த தீர்த்தங்கரர் கோயில் உள்ளது.

கருவறை அர்த்தமண்டபம், மகாமண்டபம் என்று மூன்று பாகங்களையுடைய கோயில். மூலவர் 9ஆம் தீர்த்தங்கரர் புஷ்பதந்தர் மண்டபத் தென்புற அறையில் பிரமயட்சன் உருவம் உள்ளது.

10ஆம் தீர்த்தங்கரர் சீதளநாதர் உருவமும் குதிரை வாகனமும் இருந்ததாக கோவை கிழார் குறிப்பிடுகிறார் (1953). இன்று அவை இல்லை. இக்கோயில் மடப்பள்ளியில் உள்ள கோநாட்டான் விக்கிரம சோழனின் 40ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு அம்மண்டபத்தை ''சிங்களாந்தகன்'' என்று குறிக்கிறது. இதை அமைத்தவன் அறத் துளான் முத்தன் பொன்னன் ஆன கணித மாணிக்கச் செட்டி என்பவர் (கி.பி.1045)

இக்கல்வெட்டு திங்களூரை 'சந்திரவசதி' என்று குறிக்கிறது. வசதி என்பது பஸ்தி என்ற சொல்லின் திரிபு ஆகும். பஸ்தி என்பது சமணக் கோயிலைக் குறிக்கும். திங்களூர்ச் சிவன்கோயில் இறைவன் பெயர் சந்திரபுரி ஈஸ்வரர்.

**பூந்துறை**

ஈரோடு - அறச்சலூர்ப் பாதையில் 12ஆம் கிலோ மீட்டரில் உள்ள பூந்துறையில் 23ஆம் தீர்த்தங்கரர் பார்சுவநாதர் கோயில் உள்ளது. இங்கு இயக்கி பத்மாவதி உருவச்சிலையும் உள்ளது. இக் கோயில் கி.பி.1508ஆம் ஆண்டு திருப்பணி செய்யப்பட்டதாகக் கிழக்குச் சுவர்க் கல்வெட்டுக் கூறுகிறது.

இனாம் தாசில்தார் ராபின்சன் காலத்தில் 30 ஏக்கர் பூமி இருந்த தாகக் கூறுகிறார்கள்.

**விசயமங்கலம்**

பெருந்துறை - கோவை நெடுஞ்சாலையில் பெருந்துறையி லிருந்து 10ஆவது கிலோ மீட்டரில் உள்ள விசயமங்கலத்தில் புகழ்

வாய்ந்த எட்டவாது தீர்த்தங்கரர் சந்திரப்பிரபர் கோயில் உள்ளது. விசயமங்கலத்தின் பழைய பெயர் வாகை.

சமணர்கள் இங்கு பெற்ற வெற்றியால் 'விசயமங்கலம்' என்று பெயர் ஏற்பட்டதென கோவை கிழார் கூறுகிறார். சமணக்கோயில் உள்ள பகுதி மேட்டுப்புத்தூர், பஸ்திபுரம், பஸ்திபாளையம், கோயில் பாளையம் என அழைக்கப் பெறுகிறது.

கோயில் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம், வாத்திய மண்டபம், நிருத்தமண்டபம் என்ற ஐந்து பகுதிகளையுடையது.

கருவறையில் மிகப்பெரிய சந்திரப்பிரப தீர்த்தங்கரர் உருவம் சுதையால் செய்யப்பட்டிருந்தது. அது சிதைந்து அழிந்தபின் அபிடேகத்திற்காக வைத்திருந்த 30 செ.மீ உயரம் உள்ள சிறு சிலையை கருவறையில் வைத்துள்ளனர். அர்த்தமண்டபத்தில் வர்த்தமான மகாவீரர் உருவச்சிலையை வைத்து வழிபடுகின்றனர். மகாமண்டபத்தில் அரசண்ணா மலையிலிருந்து கொண்டு வந்த நேமிநாதர் இயக்கி கூஷ்மாண்டினி உருவங்கள் உள்ளன. வாத்தியமண்டபத்தில் சந்திரப்பிரப தீர்த்தங்கரரின் இயக்கியான 'சுவாலாமாலினி' உருவச் சிலை சிறு அறையில் உள்ளது. வாத்திய மண்டபத்தில் ஆதிநாதர், கொங்குவேளிர், தமிழ்ப் புலவர்கள், பவணந்தி முனிவர், சீயகங்கன், கொங்கு வேளிரின் அடிமைமாது ஆகியோர் கற்சிலைகள் உள்ளன.

நிருத்தமண்டபத்தில் ஆதிநாதரின் தோற்றம் முதல் அவர் பரிநிர்வாணம் அடையும் வரை 'ஸ்ரீபுராணம்' சிற்பத் தொகுதிகள் உள்ளன. பத்தாம் நூற்றாண்டு கங்கத் தளபதி சாமுண்டராயன் தங்கை 'புள்ளப்பை' சல்லேகனை விரதமிருந்து உயிர் நீத்த சிற்பம் ஒரு தூணில் கல்வெட்டுடன் உள்ளது. கொங்கு வேளிர் பெருங்கதையை இயற்றியதைக் குறிக்கும் நாகரிக் கல்வெட்டு சேதப்படுத்தப்பட்டு விட்டது. கருவறையில் 'சமவசரணம்' ஓவியம் உள்ளது.

## வெள்ளோடு

ஈரோடு - சென்னிமலைச் சாலையில் ஈரோட்டிலிருந்து 15ஆம் கிலோ மீட்டரில் வெள்ளோடு உள்ளது. சர்வலிங்கேசுவரர் கோயிலின்

வடக்கே 1/2 கிலோ மீட்டர் தூரத்தில் முதல் தீர்த்தங்கரர் ஆதிநாதர் கோயில் உள்ளது. 1889ல் அங்கு கல்வெட்டு இருந்ததாக 1925ல் நாகய்யர் என்ற சமண அர்ச்சகர் கோவை கிழாரிடம் கூறியுள்ளார்.

சமணக்கோயில் உள்ள இடங்களில் எல்லாம் சமண சமயம் பற்றியோ அந்தக் கோயில் பற்றியோ உள்ளூர் மக்களுக்கு எதுவும் தெரிவதில்லை. பொதுவாகக் சமணக் கோயில்களை 'அமணீசுவரர்' என்று சிவனாகவே கருதுகின்றனர்.

பரஞ்சேர்வழியில் தீர்த்தங்கரர் உருவச்சிலை சிவன்கோயில் அருகே பாதையோரம் உள்ளது. தி.அ.முத்துசாமிக்கோனார் (1934) தாராபுரத்திலும், காங்கயத்திலும் சமண தீர்த்தங்கரர் உருவம் இருந்த தாகக் கூறுகிறார்.

ஈரோடு மாவட்டத்தில் சிறப்புடன் இருந்த சமணம் 'திகம்பர சமணம்' பிரிவைச் சேர்ந்ததாகும். பழைய சமணக் குடும்பம் பூந்துறை யிலும், விசயமங்கலத்தில் மட்டும் உள்ளன.

### ஈ) இஸ்லாம்

இஸ்லாம் மார்க்கத்திற்கும் ஈரோடு மாவட்டத்திற்கும் நெருங் கிய தொடர்பு உண்டு. காங்கயம் வட்டக் காடையூர் பொருளந்தைகுலக் காங்கேயன் மனைவி சேடகுல வெள்ளையம்மாளுக்கு வாக்களிக்கப் பட்ட காணியுரிமை மறுக்கப்பட்ட போது, இஸ்லாமிய சர்தார் ஒருவர் முயற்சியால் வெள்ளையம்மாள் காணி பெற்றார். இஸ்லாமிய சர்தா ருக்கு நன்றிக்கடன் ஆற்ற வெள்ளையம்மாளின் நான்கு மக்களும் அவர்கள் வழிவந்தவர்களும் குழந்தைப்பருவத்தில் காது குத்தாமல் ''முழுக்காது குலத்தினர்'' என்று இன்றும் அழைக்கப்படுகின்றனர். சுன்னத் சடங்கிற்கு இணையாக 'காது குத்துக்கலியாணம்' நிகழ்வில் காதுகுத்துவர்.

ஈரோடு வட்டம் காகத்திலும், பெருந்துறை வட்டம் காஞ்சிக் கோயிலிலும் கொங்கு வேளாளர்களில் கண்ண குலத்தார் 'ராவுத்த சாமி' என்ற குல தெய்வத்தை வணங்கி வருகின்றனர். அவரை 'டில்லி

பட்டாணி துலுக்கர்' என்று அழைக்கின்றனர். கொங்கு வேளாளர் பலர் துலுக்கண கவுண்டர் என்று பெயர் வைத்துக் கொள்வதுடன் 'துலுக் கணசாமி' 'துலுக்கநாச்சியம்மன்' என்ற பெயரில் தெய்வத்தையும் வணங்கி வருகின்றனர். 'துலுக்கபாளையம்' என ஊரும் உள்ளது.

குன்னத்தூர் அருகேயுள்ள குறிச்சி செல்லாண்டியம்மன் கோயி லுக்குத் திப்பு சுல்தான் கொடை கொடுத்துள்ளார். ஈரோடு காவேரிக் கரையில் உள்ள 'ஹஜ்ரத் சேக் அலாவுதீன் பாதுஷா தர்கா'விற்கு 12.12.1761 அன்று பக்கிரிகளுக்கு அன்னம் அளிக்கவும் ஆடை வழங் கவும் ஈரோடு கோட்டையில் பணியாற்றிய கிருஷ்ணராச உடையாரின் அதிகாரி ரங்கையநாத திம்மரசையனும் கந்தாசாரம், அட்டவணை, சேனபாகம், சேருவைகாரர் முதலிய பணியாளர்களும் ''(காலிங்கராயன்) அணை ஓபளிக்குச் சேர்ந்த வயிராபாளையம் வதிகரையில் மறுகால் கரையில் பீளமேட்டில் தோப்படியில் நான்கு மா நன்செய் நிலம்'' கொடை யளித்துள்ளனர். இதைக் குறிக்கும் கல்வெட்டு தர்காவில் உள்ளது.

காங்கயம் அய்யாவு ராவுத்தர் வீராட்சிமங்கலம் கந்தசாமிக் கவி ராயரின் வேளாள புராணத்திற்கு 'சாற்றுக்கவி' அளித்துள்ளார். ஜம்பை காசிம்புலவர் அரங்கநாதக்கவிராயர் இயற்றிய அருச்சுணன் தீர்த்தயாத் திரை நூலுக்குச் சாற்றுக்கவி கொடுத்துள்ளார். அவர் ''அரிச்சந்திர நாடகக் கீர்த்தனை'' என்ற நூலையும் ''திருநீலகண்டர் நாடகக் கீர்த் தனை''யையும் இயற்றியுள்ளார்.

ஈரோடு பெரியார் வீதியில் உள்ள ஜாமி ஆ மசூதி பெரிய பள்ளி வாசல் என அழைக்கப்படுகிறது. இங்குள்ள மினார் (கோபுரம்), ஜன்னல், விளக்கு, சுவர் எல்லாம் அழகிய வேலைப்பாடு மிக்கவை. இங்கு காலையிலும், மாலையிலும் சிறுபிள்ளைகட்குக் 'குர்ஆன்' கற்றுக் கொடுக்கப்படுகிறது.

பிராமணப் பெரிய அக்கிரகாரத்தில் ஹஜ்ரத் மீரா உசேன் அவுலியா தர்கா உள்ளது. ஆண்டுதோறும் கந்தூரி சிறப்பாக நடைபெறுகிறது. காங்கயம் தப்லீக் மசூதிக்கு மதுரை சுல்தான் வருகை தந்து நிலக்

கொடையளித்துள்ளார். ஊத்துக்குளி வடுகபாளையம் தர்காவிற்கும் துடுப்பதி இப்ராகீம் பாதுஷா தர்காவிற்கும் திப்புசுல்தான் வருகை புரிந்து கொடையளித்துள்ளார். நம்பியூரில் அசன் அலி தர்கா உள்ளது.

ஈரோடு பழைய இரயில்வே நிலையம் பள்ளி வாசல் சுல்தான் பேட்டை மஹல்லா பள்ளிவாசல், இரயில்வே காலனி பள்ளிவாசல் பழமையானவை. நேதாஜி சாலை (முதலாளி பங்களா), பெரியார் நகர், திருநகர், அசோகபுரம், அண்ணா நகர், கண்டிராதவளத்தான் குளம், லக்காபுரம், சங்கு நகர், திண்டல் ஆகிய இடங்களில் புதிய பள்ளிவாசல்கள் ஏற்படுத்தப்பட்டுத் தொழுகை நடந்து வருகிறது.

தாளவாடியில் திப்பு சுல்தான் கட்டிய மசூதி உள்ளது. வெள்ள கோயில், தாளவாடி, கவுந்தப்பாடி, காங்கயம்பாளையம், குருமந்தூர் ஆகிய இடங்களில் பள்ளிவாசல்களும், கொடுமுடி, கள்ளக்கவுண்டன் புதூர், வள்ளியம் பாளையம், காசிபாளையம், சென்னிமலை, பெருந்துறை, பவானி, ஜம்பை, ஒலகடம், அந்தியூர், கோபி, பெருந் தலையூர் ஆகிய இடங்களில் தர்காக்களும் உள்ளன.

மேவானியில் உள்ள தர்காவிலும் கபர்ஸ்தானிலும் இந்துக் களும் வழிபடுகின்றனர். ஈரோடு காவிரிக்கரை தர்கா, பெரியபள்ளி வாசலுக்கும் இந்துக்கள் வருகின்றனர். ஈரோடு ஜன்னாத்துல் பாக்கி யாத் மதரசாவில் குழந்தைகள் சமயக்கல்வி கற்கின்றனர். ஈ.கே.எம். முகமது அப்துல் கனி மதரசா இசுலாமிய மேல்நிலைப்பள்ளி 1935ஆம் ஆண்டு சிறு பள்ளியாகத் தொடங்கப்பட்டது.

பழைய கோட்டைப் பட்டக்காரர் திப்பு சுல்தானுக்குக் குதிரை கள் அளித்துள்ளார். ஒரு பட்டக்காரர் முடிசூட்டு விழா ''போர் வீரராம் ஐதர் அலிகான் சாயபின் புலி போன்ற தாசில்தார்'' கலந்து கொள்ள நடை பெற்றுள்ளது.

பட்டக்காரர் முடிசூட்டு விழாவில் குடைபிடிக்கும் உரிமை கமால் சாயபு என்பவருக்கு அளிக்கப்பட்டது. இன்றும் பழைய கோட்டை

அரண்மனையில் நடைபெறும் விஜயதசமி விழாவன்று ''சொட்டை முனை ஆயுதம்'' ''பட்டத்துவாள்'' இவைகளை அரண்மனையிலுள்ள சண்டிகாதேவி கோயிலுக்கு வந்து எடுத்து விளையாடும் உரிமை அவ்வூர் இசுலாமியருக்கு உரியதாக உள்ளது.

ஐதர் அலி 1778ஆம் ஆண்டு பழையகோட்டை 22ஆம் பட்டக் காரர் நல்லசேனாபதிச் சர்க்கரை உத்தமக்காமிண்ட மன்றாடியாரை தாராபுரத்தில் சிறை வைத்தார். 1783ஆம் வருடம் திப்பு அவரை விடுதலை செய்து பட்டாபிஷேகம் செய்வித்தார். இதனை

''சாலிவாகன சகாப்தம் 1704 சுபகிருது வருஷம் என்னையும்
என்னைச் சேர்ந்த சனங்களையும் விடுதலை பண்ணி
காரையூருக்கு வந்து சேர்ந்திருக்கும் நாளையிலே டிபு
சுலுதான் பகதூரவர்கள் காரியத்தில் கர்த்தராகிய
கபூர் சாயபு அவர்கள் நாளையில் நாடனைவரும்
கூடிவந்து எனக்குப் பட்டாபிஷேகம் பண்ணி நல்ல
சேனாபதிச் சர்க்கரை உத்தமக்காமிண்ட மன்றாடி
என்னப்பட்ட பேரை வெளங்கப்பண்ணினார்கள்''

என சர்க்கரை மன்றாடியார் வம்சாவளி கூறுகிறது.

ஈரோடு மாவட்டத்தில் பல மசூதிகளும் (இறைஇல்லம்), பல தர்காக்களும் (ஞானாசிரியர் அடக்கத் தலம்) உள்ளன. வ.உ.சி. பூங்காவில் பசல்சா காதிரு அவுலியா தர்காவும், ஈதுகா பள்ளியும் உள்ளது. இவற்றை ஐதர் அலி பார்வையிட்டு நிலக்கொடை அளித்துள்ளார்.

அல்அமீன் சேவை மற்றும் கொடைக் கழகத்தாரால் ஒரு மெட்ரிக்குலேசன் பள்ளியும் பாலிடெக்னிக்கும் நடைபெறுகிறது. பிராமணப் பெரிய அக்கிரகாரத்தில் மதரசா தாவூதியா அரபிக்கல்லூரி வள்ளல் அல்ஹாஜ் ஏ.பி. ஷேக்தாவூது சாகிப் அவர்களால் 1952ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. இது 25.12.1951ஆம் ஆண்டு 11 மாணவர்களைக் கொண்டு அல்லாமா அமானி அச்ரத் அவர்கள் ஆலோசனைப்படி தொடங்கப்பட்டது.

வருடந்தோறும் ஒவ்வொரு வகுப்பாக உயர்வு பெற்று 1959ஆம் ஆண்டு முதல் பட்டமளிப்பு விழா நடைபெற்றது. 1963இல் அறக்கட்டளை தொடங்கப்பட்டது. அந்த ஆண்டு முதல் ''கிப்கு'' (குர்ஆன் மனனம்) ''கிரா ஆத்தும்'' (குர் ஆன் ராகத்துடன் ஓதல்) வகுப்புகளும் தொடங்கப்பட்டு நடைபெறுகிறது. ஒன்று முதல் ஏழு வகுப்பு வரை 'மௌல்வி' (மதக்கல்வி போதனை) வகுப்பும் தமிழில் நடைபெறுகிறது. வெளிமாநிலம் மற்றும் வெளிநாட்டு மாணவர்களும் உணவும், உறைவிடமும் இலவசமாகப் பெற்று பயின்று ஏமன், குவைத், இலங்கை முதலிய உலகின் பல நாடுகளில் ஆசிரியராகப் பணிபுரிந்து வருகின்றனர்.

ஈரோடு நகர, மாவட்ட வளர்ச்சியில் இஸ்லாம் மார்க்கத்தினர் பெரும்பங்கு வகித்துள்ளனர். கே.ஏ. காதர் மைதீன் (1920-21) கே.ஏ. ஷேக்தாவூது (1930-1938), ஈ.கே.எம். முகமது அப்துல் கனி (1959-1964) ஆகியோர் ஈரோடு நகராட்சி மன்றத் தலைவரர்களாக இருந் துள்ளனர். கே.ஏ. ஷேக் தாவூது அவர்கள் சென்னை மாகாண சட்டசபை உறுப்பினராகவும், ஈரோடு மாவட்டக் கழக உறுப்பின ராகவும் இருந்துள்ளார். மகாசன உயர்நிலைப்பள்ளியை (1899) நிறுவியதில் அலாவுதீன் சாகிபு முக்கிய பங்கு வகித்தார். ஈரோடு மாவட்ட விடுதலைப் போராட்ட வீரர்களில் 20 பேர் இஸ்லாமியர்கள். தேசியத் தலைவர்களான அலி சகோதரர்கள் நினைவாக ஈரோடு மணிக்கூண்டுப் பகுதிக்கு 'அலி சவுக்' என்று பெயர் சூட்டப்பட் டிருந்தது.

## உ) கிறித்துவ சமயம்

ஈரோடு மாவட்டத்தில் கத்தோலிக்கத் திருச்சபையே முதன் முதலில் மறைபரப்பும் பணியை மேற்கொண்டது.

1608ஆம் ஆண்டு தாராபுரத்தில் இயேசு சபையைச் சேர்ந்த (JESUIT MISSION) இராயந்து என்ற குருவால் ஒரு தேவாலயம் கட்டப்பட்டது. ஈரோடு மாவட்டத்தில் முதலில் கிறித்துவ சமயத்தைக்

காலூன்றச் செய்தவர் தன்னை 'மேற்கத்திய அந்தணன்' என்று அழைத்துக் கொண்டவரும் பின்னாளில் தத்துவ போதகர் என்று அழைக்கப்பட்டவருமான இராபர்ட் டி நொபிலியே யாவார். அவர் சத்தியமங்கலத்தில் ஒரு தேவாலயம் கட்டினார். சத்தியமங்கலம் பாளையக்காரர் ஆதரவு கொடுத்ததால் பின்னர் அப்பகுதியில் 15 தேவாலயங்கள் உருவாகின.

ஈரோடு, அந்தியூர் பகுதிகளிலும் இராபர்ட் டி நொபிலி பணியாற்றினார். அவருடன் இம்மானுவேல் மார்ட்டின்சு, அந்தோனியோ விக்கே என்ற குருமார்களும் இணைந்து பணியாற்றினர். இராபர்ட் டி நொபிலி தொடங்கிய பணிகளை ஈரோடு மாவட்டத்தில் பல்தாசர் த கோஸ்ட்டா அடிகளாரும். அவர் உதவியாளர் சவுரிராயன் உபதேசியாரும் தொடர்ந்து செய்தனர். 1643இல் சத்தியமங்கலம் அருகேயுள்ள அமலப்பாளையத்தில் அவரால் 150 வேளாளர் குடும்பங்கள் கிறித்துவர் ஆயினர்.

இராபர்ட் டி நொபிலியுடன் பணியாற்றிய இம்மானுவேல் மார்ட்டின்சு வானிப்புத்தூர், வாலிபாளையம் ஆகிய இடங்களில் பணி புரிந்தார். கணுவக்கரை பணிமையத்தில் ஈரோடு, தாராபுரம், கோவை, சோமனூர், கருமத்தம்பட்டி, எல்லமங்கலம் ஆகிய 130 ஊர்களும் 23 ஆலயங்களும் 6000 மக்களும் இணைக்கப்பட்டனர். மைசூர் - மதுரை நாயக்கர் போராலும் மராத்தியப் படையெடுப்பாலும் 1677-78இல் ஏற்பட்ட காவிரி, பவானி வெள்ளப் பெருக்காலும் அதைத் தொடர்ந்து ஏற்பட்ட தொற்று நோய்களாலும் கிறித்துவக் குடியிருப்புக்கள் பெரிதும் பாதிக்கப்பட்டன. அந்நிலையிலும் பெனடிக்ட் நெகோரா, அந்தோணி பெரேரா ஆகியோர் தொடர்ந்து சமயப்பணியும் சமுதாயப்பணியும் செய்தனர். இவ்விருவரும் 1685இல் மறைந்தனர்.

ஆங்கிலேயர்கள் கிறித்துவர்கள் என்பதால் திப்புவின் அதிகாரிகளால் ஈரோடு மாவட்டக் கிறித்துவர்களுக்குப் பற்பல தொல்லைகள் ஏற்பட்டன. பணிகளைச் சீரமைக்க அபே துபாய் அடிகளார் வந்து கருமத்தம்

பட்டியைத் தலைமையிடமாகக் கொண்டு ஈரோடு மாவட்டப் பணி களை மேற்கொண்டார். இவர்தான் ''இந்துக்களின் இயல்புகள், பழக்க வழக்கங்கள் மற்றும் சடங்குகள்'' என்ற முக்கியமான நூலை எழுதியவர். (1792-1826-Abbe Dubous) கத்தோலிக்க மறை மாவட்டம் 1886ல் தொடங்கப்பட்டது. பவானியாற்றின் வடகரைப் பகுதி 1940ல் மைசூருடனும், 1953ஆம் ஆண்டு நீலகிரியுடனும் இணைக்கப்பட்டது.

முதன்முதலில் ஆங்கிலேய புராட்டஸ்ட்டென்ட் குருமார்களான ஹென்றி கிரிஸ்ப் 1827இல் சேலத்துக்கும், வில்லியம் ஆடிஸ் என்பவர் 1830இல் ஈரோடு - கோவை மாவட்டத்திற்கும் இலண்டன் மிஷனரி சங்கத்தாரால் அனுப்பப்பட்டனர். புராட்டஸ்ட்டெண்ட் குருமார்கள் குடும்பத்துடன் வந்ததும் சமயப்பணிகளோடு, கல்வி சமுதாயப் பணிகளை மேற்கொண்டதும் மக்களை மிகவும் கவர்ந்தன. கோவை மாவட்ட ஆட்சியர் ஜான் சல்லிவன் ஈரோடு மாவட்டப்பகுதிப் பணி களுக்கு உதவி புரிந்தார். ஈரோடு மாவட்டத்தில் முப்பது பள்ளிகள் தொடங்கப் பட்டன. பெரும்பாலும் பள்ளி ஆசிரியர்கள் உபதேசி யாராக இருந்ததால் சமயப் பணியும் உடன் செய்யப்பட்டது.

இதற்காகக் கிராமம் கிராமமாகச் சென்று கிறித்துவை அறியச் செய்தனர். 1855இல் வெளியிடப்பட்ட கோவைப்பணித்தள அறிக்கை ''பத்து உபதேசியார்கள் இவ்வாண்டு முழுவதும் ஆறாயிரம் மைல்கள் கால்நடையாக நடந்தனர். 2375 குக்கிராமங்களையும் சிற்றூர்களையும் சந்தித்தனர். விவிலியப்பிரதிகள் கொடுத்து நற்செய்தி பரப்பினர்'' என்று கூறுகிறது.

கிறித்துவ சமயப் பரப்பாலும் தாக்கத்தாலும் தாழ்த்தப்பட்டோர் நிலை உயர்ந்தது. தாராபுரம் பகுதி 1880இல் திருச்சியில் தொடங்கப் பட்ட ''கொங்கு நாடு மிஷன்'' உடன் இணைக்கப்பட்டது. இது ஆங்கி லேய மிஷன் சங்கத்தாரின் மெத்தாடிஸ்ட் மேற்பார்வையில் இயங் கியது. ஆஸ்திரேலியாவிலிருந்து 1894இல் கோவை வந்த அந்தோணி வாட்சன் பிரப் 1897இல் ஈரோடு வந்தார். 20ஆம் நூற்றாண்டின்

தொடக்கத்தில் 1909இல் ஈரோட்டில் மருத்துவமனை அவரால் தொடங்கப்பட்டது. கொங்கு நாடு மிஷன் சார்பில் தாராபுரத்திலும் மருத்துவமனை தொடங்கப்பட்டது. ஏ.டபிள்யூ. பிரப் ஈரோடு நகர் மன்றத்தலைவராகவும் விளங்கினார். (1904-1905)

இலண்டன் மிஷன் சங்கம் தென்னிந்தியத் திருச்சபையாக மாற்றம் பெற்று மெத்தாடிஸ்ட் பணிகளும் அதனோடு இணைக்கப்பட்டன. 1947இல் தென்னிந்தியத் திருச்சபை (சி.எஸ்.ஐ) திருச்சி-தஞ்சை மண்டலத்தில் தாராபுரம் இணைக்கப்பட்டது. 1950இல் கோவை நீலகிரி மாவட்டத்தோடு சேர்ந்து தொடங்கப்பட்ட கோவைத் திரு மண்டலத்தின் கீழ் ஈரோடு வந்தது. கோவை மாவட்டத்து ஆங்கிலிக்கன் பணிகளும் தென்னிந்தியத் திருச்சபையோடு இணைக்கப் பட்டன.

தமிழ்ச் சுவிசேஷ லூத்தரன் சபை என்ற பெயரில் நடைபெற்ற பணி மூலம் 1888இல் ஈரோட்டில் தேவாலயம் ஒன்று கட்டப்பட்டது. இதனை ஜெர்மன் பணிவிடையாளர்கள் 1856இல் தொடங்கப்பட்ட 'லைஃப் சீக்' (Life Seek) அமைப்பின் மூலம் நடத்தி வந்தனர். 1919இல் சுவீடன் நாட்டுப் பணியாளர்களும் இத்துடன் இணைந்தனர். அந்தியூர், கோபிசெட்டிபாளையம், சத்தியமங்கலம், சிறுமுகை, காவேரிபுரம், சாம்பள்ளியில் நடைபெற்ற இவர்கள் பணியினை இலங்கை இந்தியா பொதுச் சங்க சபை (CIGM) மேற்பார்த்து வந்தது.

ஏ.டபிள்யு.பிரப்பை அடுத்து ஈரோட்டுக்குப் பணியாக வந்த எச்.ஏ.பாப்லி தமிழ் கற்ற புலவராக விளங்கினார். மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவராகவும் மறைமலையடிகள் தலைவராக விளங்கிய திருவள்ளுவர் நாட்கழகத் துணைத்தலைவராகவும் விளங்கினார். இவர் கல்விக்காக ஆற்றிய பணி மிகச் சிறந்தது. தொழிலோடு கூடிய பயிற்சிப் பள்ளியை இவர் நிறுவினார். மேலும் இவர் ஈரோடு இலக்கியக் கழகத்தைத் தொடங்கினார். எஸ்.மீனாட்சிசுந்தர முதலியார் துணையோடு ஈரோட்டில் உள்ள எல்லா ஆசிரியர்களையும் இணைத்து

''ஆசிரியர் ஐக்கிய சங்கம்'' தொடங்கினார். ''நவீனக்கல்வி'' என்ற முத்திங்கள் இதழ் நடத்தினார். பவானி புலவர் அ.மு. குழந்தை இவரைப்பற்றி பாப்புலி வெண்பா என்ற நூலை இயற்றியுள்ளார். எச்.ஏ.பாப்லி 1932இல் திருக்குறள் அறத்துப்பாலுக்கு ஆங்கில உரை எழுதி வெளியிட்டார்.

கல்விப்பணி, மருத்துவப்பணி, இல்லங்கள், தொழிற்கல்வி, ஊனமுற்றோர் - மனநலம் குன்றியோர் காப்பகங்கள், இலவச உணவு-உறைவிட வசதிகள் செய்தல் போன்ற சமயம் சாராத சமூக மேம்பாட்டுப்பணிகள் கத்தோலிக்க, புராட்டஸ்ட்டெண்ட் திருச்சபை மூலம் பல நடைபெறுகின்றன.

## ரோமன் கத்தோலிக்கத் திருச்சபை ஆலயங்கள்

இவை பெரும்பாலும் கோபுரங்களுடன் காணப்படும். உருவ வழிபாடு உண்டு. இந்துக்கள் கோயில் போல சில இடங்களில் தேர்த் திருவிழாக்களும் உண்டு.

## தூய அலோசியஸ் கிறித்துவ தேவாலயம், தாராபுரம்

இயேசு சங்கத்தைச் சேர்ந்த இராயந்து என்பவரால் 1608ஆம் ஆண்டு கட்டப்பட்டது. 1750இல் கட்டப்பட்ட பெரிய தேவாலயம் திப்பு - கம்பெனிப் போரில் அழிந்தது. இப்போதுள்ள ஆலயம் பெர்சிவல் என்ற குருவால் 1857இல் கட்டப்பட்டது.

## தூய இக்னேஷியஸ் ஆலயம், அக்கரைக் கொடிவேரி

பழயூர் என்ற இடத்தில் இருந்த ஆலயம் வெள்ளத்தால் அழிந்ததால் அம்புரோஸ் என்ற குருவால் 1947இல் கட்டப்பட்டது. கொடிவேரியில் மருத்துவமனையும் கட்டியுள்ளனர்.

## தூய மேரியின் ஆலயம், ஈரோடு

1867இல் கட்டப்பட்ட இவ்வாலயம் லிபான்செக் என்பவரால் விரிவுபடுத்தப்பட்டது. தந்தை சூசை என்ற குருவால் 8.9.1968இல் இப்போதைய ஆலயம் கோபுரத்துடன் கட்டப்பட்டது.

## தூய இருதய ஆலயம், ஈரோடு இரயில்வே காலனி

டி.சி. உபகாரசாமி என்ற முதல் இந்தியப் பேராயரால் 29.9.1941 இல் அடிக்கல் நாட்டப்பட்டு 11.2.1943இல் அடைக்கலம் என்ற குருவால் கட்டிமுடிக்கப்பட்டது.

## தூய தெரசாவின் ஆலயம், கொளப்பலூர்

பிரெஞ்சு திருத்தூதுவர்களால் 1909இல் சிறிய ஆலயம் கட்டப் பட்டது. பள்ளியும் நடைபெற்றது. இப்போதுள்ள ஆலயம் 1938இல் தந்தை அவுடியா என்பவரால் கட்டப்பட்டது.

## தூய பேதுரு மற்றும் பவுல் ஆலயம், வாலிபாளையம்

இவ்வூர் 1666இலேயே கிறித்துவக் கிராமம். 1837இல் பைகாப் குருவும், 1841இல் பாக்ரோ குருவும் பணியாற்றினர். பள்ளி நடை பெறும் பழைய ஆலயம் 1869இல் தந்தை ட்ரைகொட் என்பவரால் கட்டப்பட்டது. இப்போதைய ஆலயம் 1909இல் தந்தை லிபான்செக் என்பவரால் கட்டப்பட்டது.

## தூய இருதய ஆலயம், கோபிசெட்டிபாளையம்

இவ்வாலயம் 1962இல் கட்டப்பட்டது. இவை தவிர ஈரோடு மாவட்டத்தில் 20க்கும் மேற்பட்ட ஆலயங்கள் உள்ளன.

## தென்னிந்திய திருச்சபை ஆலயங்கள்

### பிரப் நினைவாலயம், ஈரோடு

ஆஸ்திரேலியாவிலிருந்து 1894ல் கோவையில் பணி செய்யத் தொடங்கிய அந்தோணி வாட்சன் பிரப் 1897இல் ஈரோடு வந்தார். 1927இல் ஈரோட்டில் ஆலயம் கட்டத் தொடங்கினார். 1930இல் முடிக் கப்பட்டு முதல் தமிழ்ப் பேராயர் அசரியா அவர்களால் அர்ப்பணிக் கப்பட்டது. சிமெண்ட் இல்லாமல் காரையுடன் முட்டை கலந்து அறைத்துக் கட்டப்பட்டது. முட்டையால் வழவழப்பு ஆக்கப்பட்டது. சுவர் எவ்வளவு உயரமோ அவ்வளவு ஆழம் பூமிக்குள் அத்திபாரம்

போடப்பட்டது. கரூர்கற்கள், பாளையங்கோட்டை தொழிற்கல்விக் கூடத்தில் செய்யப்பட்ட கதவு, சாளரங்களால் கட்டப்பட்டது. ஆலயப்பணி நடைபெறும் போது பிரப் அவர்கள் மனைவி ரோஸ்ட்டா ஜேன் பிரப் அம்மையார் 1929ஆம் ஆண்டு காலமானார். அவர் கல்லறை இங்கு உள்ளது.

இஸ்லாமியக் கட்டிடப் பாணியில் கட்டப்பட்ட இந்த ஆலயத்தில் 'கடவுள் ஒருவரே' என்று தமிழிலும், அரபு மொழியிலும் (யா குதா) எழுதப்பட்டுள்ளது.

ஈரோட்டில் தூய பேதுருவின் ஆலயம், தூய யோவான் ஆலயம் ஆகியவை உள்ளன. கொடுமுடி, பெருந்தலையூர், பவானி, சிவகிரி, பட்டக்காரன்பாளையம், காஞ்சிக்கோயில், வெள்ளோடு, பூந்துறை, கோபிசெட்டிபாளையம் முதலிய பல இடங்களில் 20க்கும் மேற்பட்ட ஆலயங்கள் உள்ளன.

## லூத்தரன் சபை ஆலயங்கள்

1888இல் தமிழ் சுவிசேச லூத்தரன் உயிர்த்தெழுந்தநாதர் ஆலயம் ஈரோட்டில் கட்டப்பட்டது. ஊத்துக்குளி, புஞ்சைப் புளியம் பட்டி போன்ற ஊர்களிலும் ஆலயங்கள் உள்ளன.

## சிலோன் இந்தியா பொதுச்சங்கசபை ஆலயங்கள்

கோபிசெட்டிபாளையத்தில் ஒரு பழமையான ஆலயம் உள்ளது. குறிச்சி, அந்தியூர், ஆப்பக்கூடல், சத்தியமங்கலம் ஆகிய ஊர்களில் கோபுரங்கள் இல்லாத ஆலயங்கள் உள்ளன. இவை அனைத்தும் சுமார் 100 ஆண்டுகளுக்கு முற்பட்டவை.

## பெந்த கொஸ்தே ஆலயங்கள்

பெந்தகொஸ்தே சபையினர் பெரிய தேவாலயங்கள் கட்டாமல் வீடுகளிலும் கொட்டகைகளிலும் சிறிய ஆலயங்களிலும் வழிபாடு நடத்துகின்றனர்.

## ஈரோடு மாவட்ட கிறித்துவ சபைகள்

ஈரோடு மாவட்டத்தில் பல்வேறு கிறித்துவ சபைகள் உள்ளன. அவை ரோமன் கத்தோலிக்கச்சபை, தென்னிந்தியத் திருச்சபை, லூத்தரன் சபை, சிலோன் இந்தியா பொதுச்சங்கச் சபை, பெந்த கொஸ்தே சபை, சீயோன் பெந்த கொஸ்தே சபை, இந்திய பெந்த கொஸ்தே சபை, பெத்தானியா சபை, கிறித்துவின் சபை, சகோதரர்கள் சபை, கிறித்துவைப் பின்பற்றுவோர் சபை, தேவ சபை, தேவசங்க சபை, சுவிசேச சபை, எழுப்புதல் சபை ஆகியவை உள்ளன.

❊❊❊

# 23. தொல் எழுத்து ஆவணங்கள்

## அ) கல்வெட்டுக்களும் செப்பேடுகளும்

ஒரு நாட்டின் வரலாற்றை எழுத மிக முக்கிய சான்றுகளாக இருப்பவை கல்வெட்டுக்களும் செப்பேடுகளுமாகும். அவை இரண்டும் ஈரோடு மாவட்டத்தில் பல கிடைத்துள்ளன.

### கல்வெட்டுக்கள்

கல்லில் வெட்டப்பட்ட எழுத்துக்களைக் கல்வெட்டுக்கள் என்று கூறுகிறோம். அவை கி.பி. 3ஆம் நூற்றாண்டு முதல் ஈரோடு மாவட்டப் பகுதியில் கிடைக்கின்றன. சுமார் 600 கல்வெட்டுக்கள் இம்மாவட்டத்தில் இதுவரை கண்டறியப்பட்டுள்ளன. மைய அரசு தொல்லியல்துறைக் கல்வெட்டுப் பிரிவினரும், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையும் ஈரோடு கொங்கு ஆய்வு மையத்தினரும், ஈரோடு அருங்காட்சியினரும் படியெடுத்துள்ளனர்.

### தமிழ்-பிராமிக் கல்வெட்டுக்கள்

ஈரோடு வட்டம் அறச்சலூர் மலையின் வட சரிவில் உள்ள பாறைத் தொடரின் மேற்புறம் ஆண்டிபாறை எனப்படும் இயற்கைக் குகைத்தளத்தில் உள்ள சமண முனிவர்களின் கற்படுக்கை அருகே தாளஇசை அடைவு எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. மணிய வண்ணக்கன் தேவன் சாத்தன் என்பவன் அந்த இசை எழுத்துக்களைச் சேர்த்ததாக அக்கல்வெட்டுக் கூறுகிறது.

'எழுத்தும் புணருத்தான் மணிய
வண்ணக்கன் தேவன் சாத்தன்

என்பது கல்வெட்டாகும். ஏகாரத்திலிருந்து எகரக்குறிலாக ஒலிக்கப் புள்ளி வைக்கப்பட்டுள்ளது. எகரம் புள்ளிபெறும் என்பதற்கு இக்கல் வெட்டு ஒன்றே சான்றாகும். இசைக்கும் தொல்காப்பிய விதிக்கும், தமிழ்பிராமியிலிருந்து வட்டெழுத்து வரிவடிவத் தோற்றத்திற்கும்

ஆதாரமாக இக்கல்வெட்டு உள்ளதால் தமிழகத்தின் மிக முக்கியமான கல்வெட்டாக இரு கருதப்படுகிறது.

பர்கூர் ஈரெட்டிமலையில் ''துறகையுள்ளாரு கல்'' என்ற கல் வெட்டுப் பொறித்த சிறு கல் கிடைத்துள்ளது. சித்தோடு அருகில் வடபுறம் உள்ள பாறை ஒன்றில் 'குட்டுவன்சேய்' என்ற தொடர் வெட்டப்பட்டுள்ளது. கொடுமணல் அகழாய்வுப் பானை ஓடுகள் பல வற்றில் தமிழ்பிராமி எழுத்துப் பொறிப்புக்கள் கிடைத்துள்ளன.

## வட்டெழுத்துக் கல்வெட்டுக்கள்

தமிழ்பிராமியிலிருந்து தோன்றி 11ஆம் நூற்றாண்டுவரை வழக்கிலிருந்த வட்டெழுத்துக் கல்வெட்டுக்கள் கன்னிவாடி, நீலம்பூர், பிரமியம், பொன்னிவாடி, மூலனூர், வள்ளியறச்சல் ஆகிய இடங் களில் கொங்குச் சோழரின் தொடக்க காலத்தில் பொறிக்கப்பட் டுள்ளன. பாண்டிய நாட்டை ஒட்டிய ஈரோடு மாவட்டத் தென்பகுதி யிலேயே இவை கிடைக்கின்றன.

## கன்னடக் கல்வெட்டுக்கள்

விசயநகர அரசர்கள் மற்றும் மைசூர் உடையார் காலத்தைச் சேர்ந்த கன்னடக் கல்வெட்டுக்கள் எறகணஹள்ளி, ஈரோடு, சத்திய மங்கலம், விண்ணப்பள்ளி, தாராபுரம், நத்தக்காரையூர், விசயமங்கலம் ஆகிய இடங்களில் கிடைத்துள்ளன.

## தமிழ்க் கல்வெட்டுக்கள்

பெரும்பான்மையான கல்வெட்டுக்கள் தமிழ்க் கல்வெட்டுக் களே. வடமொழிச் சொற்களும், வடமொழி ஒலிக்குரிய எழுத்துக்கள் கிரந்த எழுத்துக்களிலும் பொறிக்கப்பட்டிருக்கும். இவை பெரும்பாலும் கோயில்களில் பொறிக்கப் பெற்றிருக்கும். சில கல்வெட்டுக்களில் வடமொழிச் சுலோகங்கள் கிரந்த எழுத்துக்களில் பொறிக்கப்பட் டிருக்கும். பெரும்பாலும் எழுத்துக்களுக்குப் புள்ளியில்லாமலும் குறில் நெடில் (எகர ஏகாரம் ஒகர ஓகாரம்) வேறுபாடு இல்லாமலும்

வரிவடிவ மாற்றத்துடனும் சொல்லுக்குச் சொல் இடைவெளியின் றியும் முற்றுப்புள்ளி முதலிய குறியீடுகள் இல்லாமலும் வெட்டப் பெற்றிருக்கும். ஈரோடு கலைமகள் கல்வி நிலைய அருங்காட்சியத்திலும், அரசு அருங்காட்சியகத்திலும், வேளாளர் மகளிர் கல்லூரி, வாசவி கல்லூரி அருங்காட்சியகத்திலும் பல கல்வெட்டுக்கள் உள்ளன.

## படி எடுத்தல்

ஈரோடு மாவட்டத்தில் 1891 முதல் கல்வெட்டுக்கள் படி எடுக்கப்பட்டன. அவ்வாண்டு ஈரோட்டிலும், கொளிஞ்சிவாடியிலும் சில கல்வெட்டுக்கள் படி எடுக்கப்பட்டன. அடுத்து 1905ஆம் ஆண்டு தொடங்கி பல ஆண்டுகள் படி எடுக்கப்பட்டன. 1920ஆம் ஆண்டு பழைய தாராபுரம் வட்டத்தில் கிராமம் தோறும் படி எடுக்கப்பட்டன. 30 ஊர்களில் 183 கல்வெட்டுக்கள் படி எடுக்கப்பட்டன.

மெக்கன்சி என்ற நில அளவைத்தலைவர் சில ஆட்களை நியமித்து 1800ஆம் ஆண்டு வாக்கில் சுமார் 100 கல்வெட்டுக்களைப் பார்வைப்படியாக எடுக்கச் செய்தார். அண்மைக் காலத்தில் மைய அரசு தொல்லியல் துறையின் கல்வெட்டுப் பிரிவினர் சில கல்வெட் டுக்களைப் படி எடுத்துள்ளனர்.

## கல்வெட்டுக்கள் அழிவு

கோயில் திருப்பணி செய்பவர்கள் முன்பு உள்ள கல்வெட்டுக் களைப் பாதுகாப்பது இல்லை. ஈரோடு மாவட்டத்தில் அகிலாண்ட புரம், அறச்சலூர், ஆனூர், காடையூர், குண்டடம், கொடுமுடி, நத்தக்காரையூர், பவானி, பாரியூர், முத்தூர், வள்ளியறச்சல், வெள் ளோடு ஆகிய ஊர்களில் பெரும்பாலான கல்வெட்டுக்கள் இன்று உரிய இடங்களில் இல்லை. பெரும்பாலும் அப்புறப்படுத்தப்பட் டுள்ளன. ஐம்பது கல்வெட்டுக்களுக்கு மேல் அழிந்துவிட்டன.

கல்வெட்டுக்களுக்கு மேல் சுண்ணாம்பு பூசக்கூடாது என்று அறநிலையத்துறை அறிவித்திருந்தும் சுண்ணாம்பைப் பல ஆண்டுகள்

தொடர்ந்து பூசி எழுத்துக்களை மறைத்துவிடுகின்றனர். திண்டல் மலைக் கல்வெட்டு ஈரோடு யு ஆர் சி நிறுவனத்தினரால் மீண்டும் பதிக்கப்பட்டுள்ளது.

## கல்வெட்டுக்களைக் காத்தல்

பழமங்கலத்தில் 'இக்கற்பொறி காத்தான் பாதம் என் தலை மேலின' என்று எழுதப்பட்டுள்ளது. விசயமங்கலம் விக்கிரம சோழன் கல்வெட்டில் மண்டபம் புதுப்பிக்கும் போது பழைய கல்வெட்டுக் களைப் படியெடுத்து மீண்டும் வெட்டியதாகக் கூறப்படுகிறது.

''முதற் பிரகாரம் இறக்கித் திருப்பணி செய்யக் கொண்டமை யால் மண்டபஞ் செய்து முன்னாள் வைத்த சந்தியா தீபங்கள் பழங்கல் வெட்டின் படி எடுத்து இம் மண்டபத்தில் வெட்டினபடியாவது'' என்பது கல்வெட்டு வாசகம்.

## பாடல் கல்வெட்டுக்கள்

பெரும்பாலும் கல்வெட்டுக்கள் உரைநடை வடிவத்திலேயே இருக்கும். சில இடங்களில் செய்திகளை பாடல் வடிவில் வெட்டி வைப்பதும் உண்டு. ஈரோடு மாவட்டத்தில் ஆனூர், கூகலூர், பழ மங்கலம், பவானி, பிடாரியூர், மடவளாகம், வெள்ளோடு ஆகிய ஊர் களில் பாடல் வடிவில் கல்வெட்டுக்கள் உள்ளன. சர்க்கார் பெரிய பாளையத்திலும், டணாயக்கன் கோட்டையிலும் பிரமியத்திலும் கொங்குச் சோழர் மெய்க்கீர்த்தியும் பாடல் வடிவில் உள்ளன.

## ஈரோடு மாவட்டக் கல்வெட்டுக்களின் சிறப்புக்களுள் சில

1. கல்வெட்டின் தொடக்கத்தில் உள்ள 'ஸ்வஸ்திஸ்ரீ' என்ற மங்கலச் சொல்லோடு அல்லது தனியாக ''நன்மங்கலஞ்சிறக்க'' என்று பொறித்திருப்பது.
2. ஆட்சியாண்டு ''திருவெழுத்திட்டுச் செல்லாநின்ற திருநல்லி யாண்டு'' என்று குறிப்பது.

3. உரிய வரி கொடுக்காதவர்களிடம் ''மண்கலம் தகர்த்து வெண் கலம் பறிக்கும்'' செயல்களில் 'தகர்த்து' என்பதற்குப் பதிலாக ''தந்து'' என்று பொறித்திருப்பது.
4. திங்களூரில் விக்கிரமசோழன் கல்வெட்டும் அறச்சலூரில் வீர வல்லாளன் கல்வெட்டும் கீழிருந்து மேலாக எழுதப்பட்டிருப்பது.
5. சிவப்பிராமணர் வடபரிசார நாட்டிலும் குறுப்பு நாட்டிலும் தங்கள் காணியுரிமைகளில் நாலில் ஒன்று உவச்சர்களுக்குக் கொடுக்க ஆணையிட்டிருப்பது.
6. கி.பி. இரண்டாம் நூற்றாண்டு தமிழ்-பிராமிக் கல்வெட்டில் இசை எழுத்தடைவுகள் பொறித்திருப்பது.
7. திங்களூரில் வீரபாண்டியன் கல்வெட்டில் 'அஃகம்' என்ற சொல் லில் ஆய்த எழுத்துப் பொறித்திருப்பது.
8. சாத்தம்பூரில் குலோத்துங்க சோழன் கல்வெட்டில் தூக்குத் தண் டனை (தலைவிலை) கூடாது என்று பூந்துறை நாட்டார் தீர்மானம் செய்திருப்பது.
9. நடுகல் கல்வெட்டில் பெருமையும் பெயரும் பாடல் வடிவில் பொறித்திருப்பது தென்னிந்தியாவிலேயே ஈரோடு வட்டம் பழமங்கலத்தில்தான்.

'வாய்த்தபுகழ் மங்கலத்து வந்தெதிர்த்த மாற்றலரை
சாய்த்தமருள் வென்ற சயம்பெருக - சீர்த்தபுகழ்
நிக்குவணம் கற்பொறிக்கப் பட்டான் கரையகுலச்
சொக்கனேந்த லேவுலகில் தான்''

என்பது அப்பாடல்.

## செப்பேடுகள்

கொடை அல்லது ஆணைகளைச் செம்புத் தகட்டில் பொறிக்கப் பட்டால் அதைச் செப்பேடு என்பர். ஈரோடு மாவட்டத்தில் ஈங்கூர்,

ஈரோடு, ஊசிப்பாளையம், கத்தாங்கண்ணி, காடையூர், கூனம்பட்டி, கொளப்பலூர், கோசணம், சென்னிமலை, தாராபுரம், திருவாச்சி, அந்தியூர், தூக்கநாயக்கன்பாளையம், நீலம்பூர், பாசூர், பெருந்துறை, பேரோடு ஆகிய ஊர்களில் செப்பேடுகள் பல கிடைத்துள்ளன.

அவை புலவர் நியமனம், குருக்கள், மடம், காணி பெறுதல், வழக்குகளைத் தீர்த்தல், வெற்றியாளர்களுக்கு விருதுகள், கோயில் நிர்வாகம், வழிபாடு, சமூக ஒற்றுமை, ஊராட்சி முறை, பாளையக்காரர் ஆட்சிமுறை, எல்லைத் தகராறுகள் தீர்ப்பு முதலிய பல்வேறு சமூகச் செய்திகளை விரிவாகக் கூறுகின்றன. செப்பேடுகளை ஒத்த ஓலைப் பட்டயங்கள் மிகுதியாகக் கிடைப்பது ஈரோடு மாவட்டத்தின் சிறப் பாகும். ஓலைப்பட்டயங்கள் ஈரோடு மாவட்டத்தில் அனுமன்பள்ளி, கன்னிவாடி, கூனம்பட்டி, கொடுமணல், சிவகிரி, சின்னியம்பாளையம், தம்மரெட்டிபாளையம், பழையகோட்டை, புதுப்பை முதலிய பல இடங்களில் கிடைத்துள்ளன.

## ஆ) ஓலைச்சுவடிகள்

ஈரோடு மாவட்டத்தில் பனைமரங்கள் மிகுதியாக உள்ளன. பனைஓலை எளிமையாக கிடைக்கின்ற காரணத்தால் இங்கு ஓலைச் சுவடிகள் மிகுதி. பரம்பரைப் புலவர்கள் இங்கு மிகுதியாக இருந்த காரணத்தால் அவர்கள் எழுதி வைத்த சுவடிகள் பல அவர்களின் வழியினரால் பாதுகாக்கப்பட்டு வந்தன. உ.வே. சாமிநாதய்யர் இங் கிருந்து பல சுவடிகளைப் பெற்றுக் கொண்டு சென்றுள்ளார். அவை திருவான்மியூர் உ.வே. சாமிநாதய்யர் நூலகத்தில் உள்ளன. தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையும், தமிழ்ப்பல்கலைக்கழக ஓலைச் சுவடித்துறையும் பற்பல சுவடிகளைத் தொகுத்துள்ளன.

ஈரோடு மாவட்டத்தில் கொடுமுடி, பவானி, சென்னிமலை, சிவன்மலை, பூந்துறை போன்ற ஊர்களுக்குத் தல புராணங்கள் ஓலைச் சுவடியிலிருந்து அச்சாகியுள்ளன. வீராச்சிமங்கலம் கந்தசாமிப்

புலவர் இயற்றிய வேளாளபுராண ஏட்டுச்சுவடியை கொங்காருபாளையம் முத்துசாமிப்புலவர் விலைக்கு வாங்கி ஈரோடு நித்திய கல்யாண சுந்தரம் அச்சுக்கூடத்தில் 1907ல் அச்சிட்டார். உரிச்சொல் நிகண்டு, ஆசிரிய நிகண்டு போன்றவை சென்ற நூற்றாண்டிலேயே அச்சிட்டனர்.

பிள்ளைத்தமிழ், காதல், குறவஞ்சி, சதகம், தூது போன்ற பல சிற்றிலக்கியங்கள் ஓலையிலிருந்து பெயர்த்தெழுதப்பட்டு அச்சாகி யுள்ளன. கொடுமணல், வீரசோழபுரம், புதுப்பை போன்ற பல ஊர்கள் புலவர் பரம்பரையினர் வாழ்ந்த ஊர்கள். அங்கு பல சுவடிகள் கிடைத் தன. ஈரோடு மாவட்டத்தில் சுவடிகளைத் தேடித் தொகுத்துப் பாது காத்து, பெயர்த்தெழுதி அச்சிட்டவர்களில் பெரும் புலவர் வே.ரா. தெய்வசிகாமணிக்கவுண்டர் முதன்மையானவர். ஈரோடு கலைமகள் கல்வி நிலையம், அரசு அருங்காட்சியகம் ஆகிய இடங்களில் நூற்றுக்கு மேற்பட்ட ஓலைச்சுவடிகள் உள்ளன. கூனம்பட்டி மாணிக்கவாசகர் மடத்தில் பல சுவடிகள் உள்ளன.

பல தனியார்களிடமும் ஓலைச்சுவடிகள் உள்ளன. சிக்கய்ய நாயக்கர் கல்லூரி தமிழ்த்துறைப் பேராசிரியர் கமலக்கண்ணன் தம் மாணவர்களோடு மாவட்ட ஓலைச்சுவடிகளைப் பட்டியலிடுவது பாராட்டுவதற்குரியது.

இச்சுவடிகளில் பல இன்னும் பதிப்பிக்கப் பெறாதவை. திண் ணைப் பள்ளியில் பாடம் படித்தவர்கள் கல்வி ஒழுக்கம், நீதி ஒழுக்கம் போன்ற நூல்களை ஓலையில் எழுதிப்படித்தனர். ஒவ்வொன்றிலும் பல சுவடிகள் கிடைத்துள்ளன.

''நூற்றாண்டாயினும் நூல் பலகல்'' - கல்வி ஒழுக்கம்

''ஏழை என்பவன் எழுத்தறியாதான்'' - கல்வி ஒழுக்கம்

''நடக்கும் தடத்தை முடக்காதே'' - நீதி ஒழுக்கம்

''அடைத்த குளத்தை முறிக்காதே'' - நீதி ஒழுக்கம்

என்பன அவற்றுள் சில அடிகளாகும்.

''தக்கை ராமாயணம்'' என்ற காப்பியத்தை பங்களாப்புதூர் பேராசிரியர் கு. அருணாசலக்கவுண்டர் பதிப்பித்தார். சங்க கால இசை நூல் ''பஞ்சமரபு'' அழிந்துவிட்டதாகக் கூறப்பட்டது. காங்கயம் வட்டம் மடவளாகம் சிவாலயத்தில் நடராசர் சன்னதியில் ஏட்டுச்சுவடி கிடைத்து வே.ரா. தெய்வசிகாமணிக்கவுண்டர் வெளியிட்டார்.

## (இ) நாணயங்கள்

ஈரோடு மாவட்டத்தில் ரோமானியர் காலத்திலிருந்து பல்வேறு அரசமரபினர் வெளியிட்ட பல நாணயங்கள் கிடைத்துள்ளன. கலை மகள் கல்வி நிலைய அருங்காட்சியகத்திலும், பேராசிரியர் கே.ஏ. திரு ஞான சம்பந்தம் அவர்கள் தொகுப்பிலும் பல கொங்கு நாட்டு நாண யங்கள் உள்ளன. அவற்றில் பலவற்றில் எழுத்துப் பொறிப்புக்கள் உள்ளன.

❊❊❊

# 24. நினைவுக்கற்கள்

## (அ) வீரர் நடுகற்கள்

தங்கள் கால்நடைகளைக் காப்பதிலும் பகைவர் கவர்ந்த கால் நடைகளை மீட்பதிலும் ஊரைக்காப்பதிலும் மக்களுக்குத் துன்பம் விளைவித்த கொடிய விலங்குகளைக் கொல்லுவதிலும் கணவனோடு உடன் இறப்பதிலும் செயற்கரிய செயல்புரிவதிலும் உயிர் நீத்தவர் கட்கு நினைவுக்கல் நாட்டுவது பண்டைய வழக்கம். சில நினைவு நடுகற்களில் பெயரும் பெருமையும் பொறிக்கப்பட்டிருக்கும்.

### ஈரோடு மாவட்டத்தில்

ஈரோடு வட்டத்தில் அறச்சலூர், சிவகிரி, துக்காச்சி, பழமங்கலம், புறாப்பாளிக்காட்டு வலசு, பெரிய சேமூர், விளக்கேத்தி, குலவிளக்கு ஆகிய ஊர்களிலும், பெருந்துறை வட்டத்தில் ஈங்கூர், காஞ்சிக் கோயில், சென்னிமலை, திங்களூர், பிடாரியூர், வாய்ப்பாடி விசய மங்கலம், வெள்ளோடு ஆகிய ஊர்களிலும், காங்கயம் வட்டத்தில் ஆனூர், காங்கயம், நத்தக்காரையூர் ஆகிய ஊர்களிலும், தாராபுரம் வட்டத்தில் கன்னிவாடி, சங்கரண்டாம்பாளையம் ஆகிய ஊர்களிலும், பவானி வட்டத்தில் அந்தியூர், ஆப்பக்கூடல், ஒலகடம், ஊசிமலை, ஊராட்சிக்கோட்டை, ஒந்தனை, கடை ஈரெட்டி, சம்பை, சாணார் பாளையம், பட்டிலூர், பவானி, பெரியபுலியூர், மயிலம்பாடி, தட்டக் கரை, தாமரைக்கரை, பர்கூர், பெஜ்ஜில்பாளையம், நெல்லூர், வேம் பத்தி ஆகிய ஊர்களிலும், கோபிசெட்டிபாளையம் வட்டத்தில் பொல வக்காளிபாளையம், பெருந்தலையூர், தூக்கநாயக்கன்பாளையம், கணக்கம்பாளையம் ஆகிய ஊர்களிலும், சத்தியமங்கலம் வட்டத்தில் அத்தியூர், அரியப்பம்பாளையம், கடம்பூர், காடன அள்ளி, சின்ன குள்ளபாளையம், சோதனாபுரம், பெரிய குள்ளபாளையம், பெரு முகை, பசவணாபுரம் ஆகிய ஊர்களிலும் நடுகற்கள் கண்டறியப் பட்டுள்ளன. அண்மையில் ஈரோடு மாவட்ட ஆட்சியர் நம்பியூர் அருகே மலையப்பாளையத்தில் ஒரு நடுகல் கண்டறிந்துள்ளார். ஈரோடு கலைமகள் கல்விநிலைய அருங்காட்சியகத்திலும் அரசு

அருங்காட்சியத்திலும் கோபி கலைக்கல்லூரியிலும் சில நடுகற்கள் கொண்டு வரப்பட்டு காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

### (ஆ) தலைப்பலி நடுகற்கள்

கொற்றவைக்குத் தங்களைத் தாங்களே தலையை அரிந்து தலைப்பலி கொடுக்கும் நினைவுக்கற்கள் சென்னிமலை, விசயமங்கலம், திங்களூர், பவானி, அந்தியூர் ஆகிய ஊர்களில் உள்ளன. இதற்கு நவ கண்டம் கொடுத்தல் என்று பெயர். சென்னிமலை மலைப்படி அருகில் ''சாவான் கோயில்'' உள்ளது. அதனைச் சோழன் பூர்வபட்டயம் சாவாரப் பலிக்கல் என்று கூறும்.

### (இ) புலிப்போர் நடுகற்கள்

சிவகிரி, புறாப்பாளிக்காட்டு வலசு, காஞ்சிக்கோயில், வாய்ப் பாடி, வெள்ளோடு, ஊராட்சிக் கோட்டை, தாமரைக்கரை, ஒந்தனை, பெருந்தலையூர், கன்னிவாடி, மயிலம்பாடி, சோதனாபுரம் ஆகிய ஊர்களில் புலியுடன் போர் செய்து வீரமரணம் அடைந்தவர்கட்கு எடுக்கப்பட்ட நடுகற்கள் கண்டறியப்பட்டுள்ளன.

### (ஈ) கற்புடை மகளிர் நடுகற்கள்

இறந்த கணவனோடு உடன் உயிர் துறந்து வீர சுவர்க்கம் புகும் பெண்களுக்குக் கணவனுடன் மூன்று நிலைக்கற்கள் எடுப்பது உண்டு. இக்கற்களை மாசதிக்கல், மாஸ்திக்கல் என்றும், அப்பெண் களை வீரமாத்தி, தீப்பாய்ஞ்சாள், புடவைக்காரி என்றும் கூறுவர். இத்தகைய கற்கள் ஈரெட்டி, பெரிய புலியூர், அத்தியூர், காடன அள்ளி, சின்ன குள்ள பாளையம், தாமரைக்கரை, சோதனாபுரம், ஒந்தனை ஆகிய இடங்களில் உள்ளன. கன்னிவாடி மணலூரில் தீப்பாய்ந்து இறந்த ஏழு பெண்கள் பற்றி கன்னிவாடிப் பட்டயம் விளக்குகிறது.

### பிறநடுகற்கள்

பர்கூர் ஈரெட்டிமலையில் ஒரு முனிவருக்கும், விசய மங்கலத்தில் உண்ணா நோன்பிருந்து உயிர்நீத்த புள்ளப்பை என்று பெண்ணுக்கும், கால்வாய் வெட்டிய காலிங்கராயனுக்கும் நடுகற்கள் உள்ளன.

❊❊❊

# 25. வரி - அளவு - நாணயங்கள்

**வரிகள்**

ஒரு நாட்டின் வருவாய் அங்கு வசூலிக்கப்படும் பல்வேறு வரிகள் மூலமே கிடைக்கின்றன.

ஈரோடு மாவட்டக் கல்வெட்டுக்களில் இங்கு வழங்கப்பெற்ற பல்வேறு வரிகள் குறிக்கப் பெறுகின்றன.

| | | |
|---|---|---|
| அந்தராயம் | - | நிலவரி நீங்கிய சிறு வரி |
| ஆராய்ச்சி | - | கோயிற்பணிகளை மேற்பார்வைக்காகச் செலுத்தும் வரி |
| இறைக்கண்பு | - | கம்பு தானியமாகக் கோயிலுக்குக் கொடுக்கும் வரி |
| இறைபுரவு | - | அரசுக்குத் தரும் நிலவரி |
| ஈழம் புஞ்சை | - | உலோகம் உள்ள நிலத்து வரி, ஈழவர் வரி என்றும் கூறுவர். |
| உகவை | - | மகிழ்வான காரியங்களுக்குச் செலுத்தும் வரி |
| உப்பாயம் | - | உப்புவரி (அரசுக்குத் தரும் வரி) |
| ஊர் வினியோகம் | - | ஊர்ப்பொதுக்காரியங்களுக்குச் செலுத்தும் வரி |
| எலவை | - | அமங்கலகாரியத்துக்குச் செலுத்தும் வரி |
| ஒட்டச்சு | - | அரசுக்குச் செலுத்த உடைமையாளரும் உழுபவரும் ஒப்புக்கொண்ட வரி |
| ஓலைச் சம்படம் | - | ஓலை எழுதக் கூலி |
| கடமை | - | செலுத்த வேண்டிய நிலவரி |
| காணிக்கை | - | கோயில் காணி உரிமைக்காகச் செலுத்தும் வரி |
| கார்த்திகைப்பச்சை | - | கார்த்திகை விளக்குக்குக் கொடுக்கும் வரி |
| காவல் கூலி | - | காவல் காக்க கொடுக்கும் வரி (பாடி காவல்) |
| கீழிறை | - | சிறுவரி |

| | | |
|---|---|---|
| குடிப்பணம் | - | குடியுரிமைக்குச் செலுத்தும் வரி |
| கூற்றிலக்கை | - | அளவையிடுவோர்க்குக் கொடுக்கும் வரி |
| சந்தி விக்கிரகப் பேறு | - | கோயில் பூசைக்கான வரி |
| சித்தாயம் | - | முக்கிய வரியைக் குறிக்கும் சொல் |
| சுங்கம் | - | விற்பனைப் பொருள் கொண்டு செல்ல வரி |
| செக்கிறை | - | செக்கு வரி |
| தட்டார்பாட்டம் | - | பொற்கொல்லர் வரி |
| தட்டொலிப்பட்டம் | - | இசைக்கருவிகள் பயன்படுத்த வரி |
| தண்ணீர்க் காணம் | - | நீர்ப்பாசன வரி |
| தறிஇறை | - | தறிக்கு வரி |
| தறிப்புடவை | - | நெய்யும் சேலைக்கு வரி |
| திரிசூலவரி | - | எல்லைக்கல் நாட்ட வரி |
| தோலொட்டு | - | தோல் தொழில் வரி |
| நத்தவரி | - | குடியிருப்பு மீதான வரி |
| நல்லெருது | - | கால்நடை வரி (எருது) |
| நற்பசு | - | கால்நடை வரி (பசு) |
| நாட்டு வினியோகம் | - | நாட்டுச் சபைக்குச் செலுத்தும் வரி |
| பலபட்டடை வரி | - | வணிகர்கள் கொடுக்கும் வரி |
| பாசிப்பாட்டம் | - | மீன் பிடிக்க வரி |
| பாறைக்காணம் | - | வண்ணார் வரி |
| மகமை | - | விற்பனையில் கொடைக்குக் கொடுக்கும் பங்கு |
| வாசல் வினியோகம் | - | தெருவில் வாசல் வைக்கச் செலுத்தும் வரி |
| வால் வரி | - | கால்நடைகளுக்கு உரிய வரி |
| வேண்டுகோள் வரி | - | விண்ணப்பம் மீதான வரி |

ஈரோடு மாவட்டப் பிற்கால ஆவணங்கள் சில குறவர், கூத்தாடி, சக்கிலியர், தொட்டியர், தொம்பர், பட்டர், பறையர், புலவர், மறவர், மாணிக்கி (தேவரடியார்) வலையர், வேட்கோவர், ஆண்டிகள் ஆகியோருக்கு வரியில்லை என்று கூறுகின்றன.

## அளவுகள்

எண்ணி அளத்தல், நிறுத்து அளத்தல், நீட்டி அளத்தல், முகந்து அளத்தல் என அளவுகள் நான்கு வகைப்படும். இந்நான்கு வகையான அளவுகளுமே ஈரோடு மாவட்டத்தில் வழக்கில் இருந்துள்ளன என்பதை கல்வெட்டுக்களும் செப்பேடுகளும் அறிவிக்கின்றன.

## எண்ணியளத்தல்

''நூறு வெற்றிலை இருபத்தஞ்சு பாக்கு'', ''இருபத்தி நாலாயிரம் பொன்'', ''இருநூறு ஆயிரத்து ஐம்பதாயிரம் பொன்'' என்று பல ஆவணங்களில் எண்ணல் அளவு கூறப்படுகிறது.

## நிறுத்து அளத்தல்

நிறுத்து அளப்பதில் பொன், வெள்ளி போன்ற உலோகங்களுக்கு ஒரு மாதிரியும் மற்ற பொருட்களுக்கு ஒரு மாதிரியாகவும் அளவு இருந்தது. பொன்னை அளக்க குன்றிமணி, மஞ்சாடி, கழஞ்சு, காணம், பணம், மாடை போன்ற அளவுகள் இருந்தது. அச்சுவயல் காணம், மயிற் காணக் கழஞ்சு, அமுதன் அச்சு, சுரிகுழுந்தன் அச்சு என்ற பெயர்களில் அளவுகள் இருந்தன. கழஞ்சு அச்சு என்றும் கூறப்பட்டது. 'பொன்' என்ற அளவு தங்கமும் இருந்துள்ளது. கற்றுளைக் கழஞ்சு, தீப் போக்குச் செம்பொன், ஊராணியோடு ஒக்கும் பொன் என்பன உயர்ந்த வகைப் பொன்னாகும்.

'தேவன் கூத்தப் பெருமாள் 1 அச்சு 4 பணம்; வியாபாரி நம்பி 1 அச்சு 4 பணம்; நம்பியம்மை 1 அச்சு 4 பணம் ஆக 4¼ அச்சு'' என்று கூறுவதால் 10 பணம் 1 அச்சு என்று அறிகின்றோம். காணமும் பணமும் சமமானவை. 'காணம்' என்பது கொள்ளு அளவுள்ள பொன்னாக இருக்கலாம். பலம், துலாம், தூக்கு என்பன பிற நிறுத்தல் அளவுகள் ஆகும். 'கோல்', 'நிறைகோல்' என்று தராசு கூறப்பட்டது.

## நீட்டியளத்தல்

கோல், கயிறு என்பன நீட்டியளக்கப்பயன்படுத்தப்பட்டன. கோல் 18 அடி, 12 அடி என்று பலவாறாக இருந்தது. 'அடி' என்பதை

'ஸ்ரீபாதம்' என்று ஓர் ஆவணம் கூறுகிறது. அடியை 'தேவர்தம் செருப்புக் காலால் ஒரு அடியாக' 'நம் பாட்டனார் கால் ஒரு அடி' என்று வருவதால் அரசனது கால் (பாதம்) அளவே அடி எனப்பட்டது என்பதை அறியலாம். 'நாழிகை' தூரம் என்பது 1 நாழிகை (24 நிமிடம்) நேரம் ஒருவன் சராசரியாக நடக்கும் தூரம் ஆகும். 'காதம்' என்பது பல காலங்களில் பலவாறான தூரமாகக் கணக்கிடப்பட்டுள்ளது. கிராமத்தில் 'கூப்பிடு தூரம்' என்றும் 'காடு' என்பதை அடிப்படை அலகாக வைத்து 3 காட்டுத்தூரம், 4 காட்டுத் தூரம் என்றும் வழங்கினர். அளந்த நிலம் 'புள்ளி புக்க நிலம்' எனப்பட்டது.

கிழக்கிந்திக் கம்பெனி வந்தவுடன் அது 'கும்பினியடி' என்றும் பழைய அடி 'சாதியடி' என்றும் கூறப்பட்டது. 'விரற்கிடை' (விரல் அளவு) சாண், முழம், மார் எனவும் அளவு இருந்தன. மார் என்பது இரண்டு கைகளையும் பக்கவாட்டில் நேராக நீட்டினால் உள்ள அளவாகும். அளக்கப்பயன்பட்ட கயிறு பிற்காலத்தில் சங்கிலியாக மாறி விட்டது.

'தாராபுரம் சீமைக்கு அமுலாக வந்த ராசமானியராசஸ்ரீ ஆர்டீசு துரையவர்கள் சீமையை 25 பாகம் சங்கிலியால் மலை கரடு பாதை, அனாதி தரிசு, ஓடை, நிலம் சகலமானதும் அளந்து'' என்பது ஈரோடு மாவட்ட மெக்கன்சி ஆவணம் ஆகும்.

## முகந்தளத்தல்

இராசகேசரிக்கால், பரகேசரிக்கால், ஆனந்தக்கூத்தன், வீரநாராயணன், சோழியநாழி, கொங்கு நாழி, குறுப்பு நாழி, பொன்னாடு நாழி எனப் பலவகையான முகத்தல் அளவைகள் கல்வெட்டில் காணப்படுகின்றன. எண்ணெய் காணம், குடம் எனவும் அளவில் குறிக்கப்பட்டது. செவிடு, ஆழாக்கு, உழக்கு, பதக்கு, உரி,நாழி, குறுணி, கலம் என்றும் படி, வள்ளம், மரக்கால், மொடா, சலகை, பொதி என்றும் முகத்தல் அளவுகள் இருந்தன. இரண்டு படி கொண்ட அளவு பின்னாளில் 'பட்டணம்படி' எனப்பட்டது.

எல்லா அளவைகட்கும் சிறிய அலகின் கீழ் முக்கால், அரை, கால், அரைக்கால் முதலிய கீழ் அளவுகளும் இருந்தன. விசயமங்கலம்

கல்வெட்டில் பண்டாரத்தில் ''நிறைச்ச அளவாக அளக்க'' என்று கல் வெட்டு வெட்டியிருந்தது கூறப்படுகிறது. கோயில் பண்டாரங்களுக்குத் தனி அளவு கருவிகள் இருந்தன. முகத்தல் அளவுகளில் அளவு கருவி யைச் சோதித்து முத்திரையிடப்பட்டது.

எண்ணெய் அளக்கும் போது அளந்தபின் படியை உயர்த்திச் சற்று நேரம் பிடித்துப் பின் கையைப் படியினுள் துழாவி உள்ளே ஒட்டி யிருக்கும் எண்ணெயையும் அளிக்க வேண்டும். கல்வெட்டில் ''எண் ணெய் அளக்கும் போது இழுத்துப் பறித்து அளப்பாராக'' என்று கூறப் பட்டுள்ளது.

குறைவாக அளந்து கொடுப்பது பெரிய பாவமாகக் கருதப்பட் டுள்ளது. 'குறையளவு அளந்தேனோ? அதனால்தான் எனக்கு மகப் பேறு வாய்க்கவில்லையோ'' என்று பெண்ணொருத்தி கூறுவதாகக் கொங்கு நாட்டு நாட்டுப்புற இலக்கியம் கூறுகிறது.

**நாணயம்**

முன்பு பெரும்பாலும் பண்டமாற்று முறையில் வணிகம் நடை பெற்றது. அதனால் பல குழப்பம் ஏற்படவே நாணயம் புழக்கத்திற்கு வந்தது என்பர். ஈரோடு மாவட்டத்தில் கொடுமணல், கத்தாங்கண்ணி படியூர்க்கு வண்ணக்கல் மணிகளை வாங்க வந்த ரோமானியர் காசுகள் மேற்கண்ட ஊர்களில் கிடைத்துள்ளன.

சங்க காலத்திலிருந்து கொங்கு நாட்டை ஆட்சி செய்த அரசர் களின் பல காசுகள் இங்கு கிடைத்துள்ளன. ஈரோடு மாவட்டக் கல் வெட்டுக்களில் கீழக்கண்ட காசுகளின் பெயர்கள் கிடைத்துள்ளன. அவை

| | |
|---|---|
| அச்சு (பொற்காசு) | பாலயன் புள்ளிப்பணம் |
| புள்ளிக் குளிகை | பொன் (பொற்காசு) |
| ஆனை அச்சு | பெஞ்சை நகர்ப்பணம் |
| கண்டி | பொன்னாகரம் |
| கண்டிராயன் | மயிலிப்பணம் |
| கலிபணம் | மதுரைச்சக்கரம் |
| கம்பெனி அரும்பு | மதுரைச் சுழிமின்னல் பணம் |

உளுந்தூர்ப்பணம்
குளிகைப்பணம்
கோபாலிகை
திருவையாற்று நாகரம்
சுல்தானி
நாகரம்
பூநாகரம்
பகோடா
வராகன்
வீரராயன்பணம்
வெங்கட்ராயன் வராகன்
ராஜகோபாலிகை
ஓட்டை
ஸ்ரீயக்கி பழஞ்சலாகை, இடைச்சலாகை, புதுச்சலாகை என்பன.

வரியை நாணயமாச் செலுத்துவோர் ஆட்சி மாற்றம் ஏற்பட்டு நாணயம் மாறினாலும் 'அப்போது வழங்கும் நாணயம்' மூலம் வரியைச் செலுத்த வேண்டும். இதை ''அன்றாடு வழங்கும் காசு'' என்று கல்வெட்டு கூறும். சில பொற்காசுகளில், வெள்ளிக்காசுகளில் குறைகள் (வாசி) இருக்கும். எனவே வரி கொடுக்கும் போது 'வாசிபடா நற்காசு' கொடுக்க வேண்டும்.

### இலக்கியங்களில்

கொங்கு வேளாளர் திருமணங்களில் கம்பர் இயற்றியதாகக் கருதப்படும் மங்கல வாழ்த்தை மங்கலன் என்றும் குடிமகன் என்றும் அழைக்கப்பெறும் நாவிதர் மணமேடையில் பாடுவார். நீண்ட அந்த மங்கல வாழ்த்தில் திருமண மொய் வாங்கியதைக்கூறும் இடத்தில் காசுகளை மொய்யாக வாங்கும் போது தட்டாரை அழைத்து 'நோட்டம்' பார்க்குமாறு கூறுவார்கள். இந்நிகழ்ச்சி

''கண்ணாளர் தமைஅழைத்து பொன்நோட்டம் பாரும்என்றார்.
அப்போது கண்ணாளர் அவ்விடமே தானிருந்து
பணமது பார்த்துக் குணமது கழித்து
கல்லு வராகன் கருவூர்ப் பணமும்
வெள்ளைப் புள்ளடி வேற்றூர் நாணயம்
உரிக்காசுப் பணம் உயர்ந்த தேவராயர்
ஆண்மாடை பெண்மாடை அரியதோர் பொற்காசு

ஒருகுழி முழிக்க ஒருமுழி பிதுங்க
பலவகை நாணயம் பாங்காகத் தெரிந்து''

என்று கூறப்படுகிறது.

'அருள்மலை திங்களூர் நொண்டி நாடகம்' என்ற நூலை திங்களூர் அவிநாசிப்புலவர் பாடியுள்ளார். அதில்வரும் நொண்டி திருடிய நாணயப்பட்டியலில்

உளுந்தூர்ப் பேட்டைப் பணம்
காசிப்பணம்
சுல்தானிப்பணம்
மயிலிப்பணம்

ஆகியவைகள் கூறப்படுகின்றன. கொங்கு நாட்டில் நாணயம் அச்சடிக்கும் ''கம்பட்டம்'', ''அக்கசாலை'' ஆகியன இருந்துள்ளன.

***

# 26. கனிம வளம்

நீரையும், பயிர்விளைச்சலையும் நிலம் தருதல் அன்றிப் பல் வேறு கனிமச் செல்வங்களையும் தன்னுள் அடக்கி வைத்திருக்கிறது. அவற்றை உலோகம், உலோகம் அல்லாதவை என இரு வகைகளாகப் பிரிப்பர்.

## *உலோகங்கள்*

### பொன்

உலோகங்கள் பல வகையாக இருப்பினும் அதிகப் பயன்பாட் டுக்கு உரியவைகளாகத் திகழ்வன தங்கமும் இரும்பும் செம்பும் ஆகும்.

ஈரோடு மாவட்டப் பகுதியில் தங்கம் மிகச் சிறிதளவு கிடைக் கிறது. காவிரிக்கும் அதன் துணையாறு ஒன்றுக்கும் 'பொன்னி' என்று பெயர் வழங்கியதற்கு அதன் மணலில் சிறிய அளவாவது பொன்துகள் இருப்பதே காரணம் ஆகும். 'பொன்படு குட்டம்' என்ற பெயரால் குட்டைகள் இம்மாவட்டத்தில் அழைக்கப்பட்டது அவற்றில் பொன் எடுத்ததால் தான். ஏழு மாற்றுடைய (தரம் குறைந்த) பொன் கிடைக் கின்ற காரணத்தால்தான் 'எழுமாத்தூர்' எனப் பெயர் வந்தது என்பர். கொங்கு நாட்டுப் பொன்னைக் கொண்டே கி.பி. 9ஆம் நூற்றாண்டில் ஆதித்தசோழன் சிதம்பரத்திற்குப் பொன்வேய்ந்தான் என்று இலக் கியம் கூறுகிறது. பொன்+கல்+ஊர் = ''பொங்கலூர்'' ஆயிற்று என்பர்.

கோபிசெட்டிபாளையம், பென்சிமலை, ஊதியூர், எக்காத்தூர் ஆகிய இடங்களில் சிறிதளவு பொன் கிடைத்தாலும் அவை வணிக நோக்கிற்குப் பயன்படுவதில்லை. பிற உலோகங்களைப் பச்சிலை சேர்த்து உலையில் ஊதிக் கொங்கணச்சித்தர் பொன் உருவாக்கிய காரணத்தால்தான் ஊதியூர் மலைக்குப் ''பொன்னூதியூர்'' என்று பெயர் வந்து என்பர்.

### இரும்பு

பொன்னை விட மதிப்புக் குறைவானதாக இரும்பு இருந்தாலும் பயன்பாட்டில் சிறப்பு மிக்கதாகத் திகழ்கிறது. அதனால் இரும்பைக் 'கரும்பொன்' என்பர். ''எகிப்திய பிரமிட்டுகளில் உள்ள இரும்புப்

பொருட்கள் கொங்கு நாட்டு இரும்பு என்றும், இரும்பை உருக்காக மாற்றும் கலையைக் கொங்கு நாட்டவரே தெரிந்திருந்தனர்'' என்றும் சர் ஜே.ஜி.வில்கின்சன், ஜே.எம்.ஹீத் முதலிய உலோகவியல் அறிஞர்கள் எழுதியுள்ளனர். அலெக்சாந்தருக்குப் புருஷோத்தமன் (போரஸ்) காணிக் கையாகக் கொடுத்த இரும்பு கொங்கு நாட்டு இரும்பு என்றும் கூறுவர்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட பெருங்கற்படைச் சின்னங்களில் வீட்டுப் பயன்பாட்டுப் பொருள்களாகவும் வேட்டைக் கருவிகளாகவும் வேளாண் கருவிகளாகவும் இரும்பினால் செய்யப் பட்ட பல கருவிகள் கிடைத்துள்ளன. 1800ஆம் ஆண்டு சென்னி மலையில் எவ்வாறு இரும்பு காய்ச்சி எடுத்தனர் என்பதை புக்கானன் தம் நூலில் படத்துடன் விளக்கியுள்ளார். இம்மாவட்டச் சந்தைகளில் முன்பு 'இருப்புக்கட்டி' விற்பனை செய்யப்பட்டுள்ளது என்பதைக் கல்வெட்டுக்கள் மூலம் அறிகின்றோம்.

நொய்யல் கரையில் பல ஊர்களில் இரும்பு காய்ச்சும் போது கசடோடு எடுக்கப்பட்ட துண்டுக்கற்கள் ஏராளமாகக் கிடைத்துள்ளன. கொடுமணல் அகழாய்வில் இரும்பை உருக்காக மாற்றும் கொதி கலனும், ஊதுலைகளும் கிடைத்துள்ளன. சென்னிமலை, கீழ்பவானி, தொப்பம்பாளையம், கரிதொட்டம்பாளையம், தொட்டக்கோம்பை, ஊதியூர், பங்களாப்புதூரின் வடக்கே மலைப்பகுதி ஆகிய இடங்களில் இரும்புத்தாது கிடைக்கிறது.

### செம்பு

'சோழன் பூர்வ பட்டயம்' என்ற வரலாற்று நூல் பவானியாற்றங் கரையில் 'செப்புப்படிமங்கள்' செய்யப்பட்ட விதத்தைக் கூறுகிறது. கோயிலில் உள்ளவை 'செப்புப்படிமங்கள்' என்று கூறினாலும் அது கலப்பு உலோகத்தால் (பஞ்சலோகம்) ஆனவை. செம்பினால் செப் பேடுகள் பல உருவாக்கப்பட்டன.

## *உலோகம் அல்லாதவை*

### வண்ணக்கற்கள்

கல் மணிகள், பாசிகள் செய்யப் பயன்படும் பல்வேறு வண்ணக் கற்கள் இம்மாவட்டத்தில் கிடைக்கின்றன. சங்க இலக்கியங்களில்

ஒன்றான பதிற்றுப்பத்தில் உழுகின்ற கலப்பையின் கொழு சென்ற வழியிலும், மழை பெய்த மண் அரிப்பிலும், மேய்கின்ற கால்நடைகளின் குளம்புகள் படும் இடத்திலும் கிழங்குகள் தோண்டும் பொழுதும் மணிக்கற்கள் கொங்கு நாட்டில் கிடைக்கின்றன என்று கூறும்.

''நாஞ்சில் ஆடிய கொழுவழி மருங்கில்
இலங்கு கதிர்த் திருமணி பெறும் நாடு''

என்பது அவற்றுள் ஒரு தொடர்.

தாராபுரம், காங்கயம், பெருந்துறை வட்டங்களில் கிடைக்கும் மணிக் கற்களை மதிப்புயர் கற்கள் (Precious Stones), ஓரளவு மதிப்புடைய கற்கள் (Semi-Precious Stones) என இருவகைகளாகப் பிரிக்கலாம்.

## வைரக்கற்கள்

இதனை பெரில் (Beryl) என்று அழைப்பர். இவை பச்சை, நீலம், பசு மஞ்சள் என்ற மூன்று நிறங்களில் கிடைக்கின்றன. பச்சைக் கற் களை மரகதம் (Emerald) என்றும் நீலக்கற்களை கடல் நீலக்கல் (Auqa-marine) என்றும், பசு மஞ்சள் கற்களை சந்திர காந்தக் கற்கள் (Moon Stone) என்றும் அழைப்பர். இவை ஒளி ஊடுருவக்கூடிய தன்மையுடை யவை. இவை காங்கயம் வட்டம் படியூரில் கிடைக்கின்றன. நொய்யல், கரைப் பகுதிகளிலும் ஓரளவு கிடைக்கின்றன.

சந்திரகாந்தக் கற்களும் ஒளி ஊடுருவும் வெண்படிகக் கற் களும் (Crystals) எளிய நகைகள் செய்யப்பயன்படுகின்றன.

## மணிக்கற்கள் (Feldspar)

வெள்ளை, இளஞ்சிவப்பு (Pink) நிறத்தில் பொதுவாக இவை கிடைக்கின்றன. இவ்வகை கற்களை 'அமேசான்கல்' என்றும் கூறுவர்.

## பளிங்குக்கல் (Quarts)

ஈரோடு மாவட்டத்தில் அதிகமாகக் கிடைக்கக் கூடியதும் ஏற்றுமதி செய்யப்படுவதுமாகிய பளிங்குக்கற்கள் ஃபெல்ஸ்பருடன் இலக்குமிநாயக்கன்பட்டி, பாப்பினி, உத்தமபாளையம், பச்சாபாளையம், வெள்ளகோயில், சேனாதிபாளையம் (காங்கயம் வட்டம்) முளையாம் பூண்டி, கம்புளியம்பட்டி, புங்கத்துரை, சூரியநல்லூர் (தாராபுரம்) ஆகிய இடங்களில் கிடைக்கின்றன.

## கல்வகைகள்

ஈரோடு மாவட்டம் பாறைகளும் கற்களும் நிறைந்த பகுதி, மேல் பரப்பிலும், நிலத்தின் அடியிலும் பல்வேறு வகையான கற்கள் கிடைக்கின்றன. கல்வெட்டுக்களிலும் செப்பேடுகளிலும் நிலத்தைப் பிறருக்கு விற்பனைக்கோ தானமாகவோ அளிக்கும் போது நிலத்தில் கிடைக்கும் எட்டுவகைப் பயன்களையும் சேர்த்து அளிப்பது வழக்கம். ''சல, தரு, பாசாண, நிதி,நிட்சேப, அட்சிணி, ஆகாம்ய, சித்த, சாத்தியம்'' எனக்குறிப்பர். அதில் 'பாஷாணம்' என்பது கல் வகைகளைக் குறிக்கும்.

## கருங்கற்கள்

கருங்கற்களில் இருவகை உள்ளன. பளபளப்பாக இழைக்கப் பயன்படும் உயர்ரகக்கற்கள், சாதாரணக் கருங்கற்கள் என இருவகை. ஈரோடு மாவட்டத்தில் நினைவுச் சின்னங்கள், மாளிகைகள் கட்டப் பயன்படும் உயர்ரகக் கற்களை மெருகூட்டி வெளிநாடுகளுக்கு அனுப்பும் பணியைப் பலர் செய்து வருகின்றனர். சாதாரணக் கற்கள் கட்டிடம் கட்டவும் சிறு கற்களாக்கி (ஜல்லி) பயன்படுத்தவும் அரவை இயந்திரங்களில் பொருத்தவும், அம்மி, செக்குகள் செய்யவும் பயன் படுத்தப்படுகின்றன.

## இரத்தினக்கற்கள் (Gemstones)

பழைய கோட்டை, முள்ளிப்புரம், பாப்பினி, சிவமலை, காங்கயம், சென்னிமலை சூழ்ந்த பகுதிகளில் இரத்தினக்கற்கள் கிடைக்கின்றன.

## பீங்கான் (Syenite)

பாத்திரங்கள், சுவரில் பதிக்கும் கற்கள், கழிவறைக் கழிப்புப் பொருள்கள், கழுவும் தொட்டிகள் (Wash Basin) செய்யப் பீங்கான் பயன்படுகிறது. பசுமை நிறம் கலந்த பீங்கான் வீட்டு அலங்காரப் பொருள், நினைவுச் சின்னம் செய்யப் பயன்படுகிறது. பெருமாள் மலையின் மேல்புறமும், சிவமலைப் பகுதியிலும் பீங்கான் கிடைக்கிறது.

## பிறகற்கள்

சிமெண்ட் தொழிற்சாலைக்கு ஜிப்சம் பயன்படுகிறது. தாசரிப் பட்டி சுற்றுவட்டாரத்தில் ஜிப்சம் கிடைக்கிறது. ஓடக்கல் (Concur)

தாராபுரம், காங்கயம் வட்டத்தில் கிடைக்கிறது. அவை சுண்ணாம்பு தயாரிக்கப்பயன்படுகிறது. (ஆற்றுப்படுகைகளில் கிடைக்கும் கிளிஞ்சல் மூலமாகவும் சுண்ணாம்பு தயாரிக்கப்படுகிறது). கருநீலம், இளம் பச்சை, ஆகிய இரு நிறங்களில் 'காக்காப்பொன்' (Mica) கிடைக்கிறது.

பவானி வட்டம் வைர மங்கலம், ஏற்றப்ப நாயக்கன் பாளையத்தில் பெரிய அளவிலும் மற்ற இடங்களில் சிறு அளவிலும் காக்கர்ப்பொன் கிடைக்கிறது.

பவானி, பெருந்துறை வட்டங்களில் கல்நார் கிடைக்கிறது. ஈரோடு, பவானி, கோபிசெட்டிபாளையம் ஆகிய வட்டங்களில் வெங் கச்சங்கல் என்னும் வெண்கல் (Quarts) கிடைக்கிறது.

## மெருகூட்டுதல்

வண்ணக்கற்களை மெருகூட்டி (பட்டை தீட்டுதல்) மணிகள் செய்வதில் காங்கயம் பகுதியில் சுமார் 150 பேர் ஈடுபட்டுள்ளனர். வணிகர்கள் அவற்றை வாங்கி ஜெய்ப்பூருக்கு அனுப்புகின்றனர். அங்கிருந்து இந்தியாவின் பல பகுதிகளுக்கும் வெளிநாடுகளுக்கும் அனுப்பப்படுகிறது. வடிவம், வண்ணம், நேர்த்தியைப் பொறுத்து ஒரு கேரட் 100 ரூ முதல் 1000 ரூ வரையில் விற்கப்படுகிறது. ஈரோடு மாவட்ட ஆட்சியர் முயற்சியால் 'இந்திய சிறுதொழில் வளர்ச்சி வங்கி' உதவியுடன் ''ஆலோசனை மற்றும் பணிகள் மையம்'' மூன்று சுய உதவிக்குழுக்களை அமைத்துத் தொழிலாளர்களே ஏற்றுமதியாளர் களாக இன்று மாறியுள்ளனர்.

***

# 27. நீர்ப்பாசனத் திட்டங்கள்

காவிரியாறும் 'வானி' ஆகிய பவானியாறும் 'காஞ்சி' ஆகிய நொய்யலாறும் 'ஆன்பொருநை' ஆகிய 'அமராவதியும்' எண்ணற்ற ஓடைகளும் செயற்கையான கிணறுகளும் ஏரிகளும் குளங்களும் ஈரோடு மாவட்ட நீர்ப்பாசன ஆதாரங்களாகத் திகழ்கின்றன.

வேளாண்மை என்பது நிலத்தொடு நீரைச் சேர்ப்பதால் வருகிறது. சங்ககாலக் குடபுலவியனார் என்ற புலவர் நிலத்தொடு நீரைச் சேர்ப்பவர் புகழே உண்மையான புகழ் என்று கூறுகிறார். ஈரோடு மாவட்டத்தில் நீர்ப்பாசனத் திட்டங்கள் மிகச் சிறப்பாக உள்ளன. இதில் பொதுப் பணித்துறையினர் பணி பாராட்டுதற்கு உரியது. ஒரு நாட்டின் ஒட்டு மொத்த வளர்ச்சிக்கு நீர்ப்பாசனமே இன்றியமையாததாகும்.

**பழைய திட்டங்கள்**

வெள்ளோடு - கனகபுரத்தில் வாழ்ந்த கொங்கு வேளாளரில் சாந்தந்தை குல நஞ்சையகவுண்டர் மகன் லிங்கையன் தன் வீரத் திறனால் வீரபாண்டியனின் அமைச்சரும் தளபதியும் ஆனார். பூந்துறைநாடு வாழ பவானியாறு காவிரியோடு கலக்கும் இடத்தின் அருகில் ஒரு அணைகட்டி 56½ மைல் நீளம் கால்வாய் வெட்டி அதை நாட்டுடமையாக்கினார். தன் வழியினர் அதைப் பயன்படுத்தக் கூடாது என்றும் ஆணையிட்டார். 12 ஆண்டுகள் முயன்று கட்டிய அணையும் கால்வாயும் கி.பி. 1282ஆம் ஆண்டு தை 5ஆம் நாள் முடிக்கப்பட்டது. இப்பணியை பல இலக்கியங்களும் தனிப்பாடல்களும் பாராட்டுகின்றன. இதனால், சுமார் 15743 ஏக்கர் நிலப்பரப்பு 'பாசனம்' பெறுகிறது. காலிங்கராயன் டணாயக்கன் கோட்டைப் பகுதியிலும் பவானியாற்றில் ஒரு அணை கட்டினார். அது லிங்கய்யன் அணை எனப்பட்டது. அந்த அணை இப்போது பவானிசாகர் அணையில் மூழ்கி விட்டது.

கோபி வட்டத்தில் உள்ள கொடிவேரியில் பவானியாற்றைத் தடுத்து ஒரு அணையைக்கட்டிய உம்மத்தூர்த் தலைவன் நஞ்சராசன்,

(1489-1500) வலப்பக்கம் தடப்பள்ளி, இடப்பக்கம் அரக்கன்கோட்டைக் கால்வாய்களையும் வெட்டினார். இவற்றால் முறையே 17654 ஏக்கரும், 6850 ஏக்கரும் பாசனவசதி பெறுகின்றன.

அமராவதியாற்றில் தடுப்பணைகள் கட்டி அலங்கியம், கொளிஞ்சிவாடி, சுண்டக்காம்பாளையம், தளவாய்ப்பட்டணம், தாராபுரம், நஞ்சைக் கல்குறிச்சி, நஞ்சைத் தலையூர் ஆகிய ஊர்களில் கால்வாய் வெட்டிப் பாசனத்தைப் பல ஆண்டுகளுக்கு முன்பே செய்துள்ளனர். இவற்றின் மூலம் 6812 ஏக்கர் வேளாண் நிலங்களுக்கு நீர்பாய்கிறது.

ஈரோடு மாவட்டத்தில் பொதுப்பணித்துறை மூலம் அந்தியூர், ஆப்பக்கூடல், எண்ணமங்கலம், ஓடத்துறை, கத்தாங்கண்ணி, காடம் பாறைப்பள்ளம், கெட்டி சமுத்திரம், செம்மண்பதி, தண்ணீர்ப்பள்ளம், பிரமதேசம், முரளி, வேம்பத்தி ஆகிய இடங்களில் பெரிய ஏரிகள் பராமரிக்கப்படுகின்றன. இவையன்றிச் சிறுசிறு ஏரிகளும் குளங்களும் பல உள்ளன. அவைகளை ஊராட்சிகள் பராமரிக்கின்றன.

## புதிய திட்டங்கள்

விடுதலைக்குப்பின் தமிழகத்தில் கட்டப்பட்ட மிகப்பெரிய நீர்ப்பாசன அணை கீழ்பவானி அணையாகும். சத்தியமங்கலத்தின் மேற்கே 25 கிலோ மீட்டர் தொலைவில் பவானியுடன் மோயாறு கலக்குமிடத்தில் உள்ள இந்த அணை உலகில் மிகப்பெரிய மண் அணையாகும். மையப்பகுதி 1523 அடிக்கு வலப்புறம் 4 கி.மீ. தூரமும் இடப்புறம் 5 கிலோ மீட்டர் தூரமும் மண் அணை உள்ளது. 1947இல் தொடங்கி 1954ஆம் ஆண்டு இது முழுமையாக முற்றுப் பெற்றது. இதனால், சத்தியமங்கலம், கோபி செட்டிபாளையம், பவானி, பெருந் துறை, ஈரோடு, காங்கயம், தாராபுரம் வட்டங்களிலும் கரூர் மாவட்டத் தில் சிறு பகுதியுமாக 207000 ஏக்கர் வேளாண் நிலப்பரப்பு பாசனம் பெறுகிறது.

பொதுப்பணித் துறையினரால் இம்மாவட்டத்தில் தொடங்கி முடிக்கப்பட்டுப் பாசனம் பெறும் திட்டங்கள் உப்பாறு அணை, ஒரத் துப்பாளையம் அணை, குண்டேரிப்பள்ளம் அணை, சின்ன முத்தூர்

தடுப்பணை, பெரும்பள்ளம் அணை, மேட்டூர் - காவிரி மேற்குக் கரை வாய்க்கால், வட்டமலைக்கரை அணை, வரட்டுப்பள்ளம் அணை ஆகியவையாகும். முத்தூர்த் தடுப்பணையும் ஒரத்துப்பாளையம் அணையும் பெரும்பகுதி கரூர் மாவட்டத்திற்கே பயன்படுகிறது. ஒரத்துப்பாளையம் அணை சாயக்கழிவு நீரால் மாசுபட்டு பயனற்று விட்டது. அதைத் திருத்தும் முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது.

பரம்பிகுளம் ஆளியாறு அணையும் அமராவதி அணையும் கோயமுத்தூர் மாவட்டத்தில் இருந்தாலும் ஈரோடு மாவட்டத்தில் பாசனத்திற்குப் பயன்படுத்தப்படுகிறது. இத் திட்டங்களால் சுமார் 2½ லட்சம் ஏக்கர் நிலம் பாசனம் பெறுகிறது. பருவமழை அடிக்கடி பொய்ப்பதன் காரணமாக முழு அளவு பாசனம் பெரும்பாலும் நடைபெறுவதில்லை.

***

# 28. வேளாண்மை

## பண்டைய வேளாண்மை

தொழில்களில் இன்றியமையாதது உழவுத் தொழிலேயாகும். வேட்டைக்கு அடுத்து தோன்றிய தொன்மையான தொழிலும் உழவு தான். ஈரோடு மாவட்டத்தில் உழவுத் தொழில் வரலாற்றுத் தொடக்க காலத்திலேயே சிறந்து விளங்கியதைப் பெருந்துறை வட்டக் கொடு மணல் அகழ்வாராய்ச்சியில் அரிசியும் பிற தானியங்களும் கிடைத் துள்ளதிலிருந்தும் வேளாண்மை இரும்புக் கருவிகள் கிடைத்ததி லிருந்தும் தெரிந்து கொள்ளலாம்.

காங்கய நாட்டுப் பகுதியில் ஏர் உழும்போது கொழுமுனையில் மணிகள் கிடைப்பதாகப் பதிற்றுப்பத்துக் கூறுகிறது.

மேலும் 'ஆகெழு' கொங்கு என்று வருணிக்கப்படுவதால் பசுக்களும் காளைகளும் ஏர் உழப் பயன்பட்டிருக்கும் என்பது உறுதி. சங்க காலத்தை அடுத்த இரட்டர், கங்கர் ஆட்சிக்காலத்தில் ''கண்டக விதைப்பாடு நிலம்'' என்று கூறப்படுவதால் உழுது, விதைத்துச் சாகுபடி செய்தது புலனாகிறது.

பவானி வட்டம் பிரமதேசத்தில் கி.பி. 9ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியில் ''ஸ்ரீ செருக்கழி நாட்டாரால் பணிக்கப்பட்டது. நட்டன் ஏரியும் நட்டன் சிறையும் நட்டன் வாயும் நட்டன் காலும் இவை மக்கள் பேர் அல்லாதார் நச்சுவார் வழி அறுவார் காத்தான் அடி என் தலை மேலது'' என்ற கல்வெட்டு முனியப்பன் கோயில் பாறையில் எழுதப்பட்டுள்ளது. ஈரோடு மாவட்டத்தில் பாசன வசதியைக் குறிக் கும் முதல் கல்வெட்டு இதுவேயாகும்.

பல அணைகள், ஏரிகள், குளங்கள், குட்டைகள் அமைக்கப்பட்டன. ஆற்றைத்தடுத்துக் கட்டப்படுவது அணை, ஏரி (கரை) அமைத்து உருவாக்கப்படுவது ஏரி. குழித்து (பள்ளம், குழி ஆக்கி) செய்யப் படுவது குளம். தடுத்துக் கட்டப்பட்ட அணை மூலம் கால்வெட்டி

(வாய்க்கால்) குளத்திலும் ஏரியிலும் நீர் நிரப்பப்படும். சர்க்கார் பெரிய பாளையம் கல்வெட்டு

''இவ்வூர் அணையும் காலும் பாத்து அணையிலுள்ள நீர்
கீழையில் விழாமல் பாத்து குளத்தில் ஒதுக்கி''

என்றும்,

பரஞ்சேர்வழிக் கல்வெட்டு

''இக்குளத்திற்கு வீரசோழ வளநாட்டு உத்தம சோழச்
சதுர்வேதி மங்கலத்தின் வாய்க்கால் நீர் பாய்வதாகவும்''

என்றும், அணை, கால், குளம் மூன்றும் உருவாக்கியதை சர்க்கார் பெரியபாளையம் கல்வெட்டு

"நொய்யலாற்றில் இந்த வரி அணையும் அடைத்துக் காலும் கண்டு குளமும் அடைத்துப் பயிர் செய்து அனுபவிக்க''

என்றும் கூறுகின்றது.

கொங்கு நாட்டில் சோழர் வருகைக்குப் பின்னர் பாசன வசதிகள் தோற்றுவிக்கப்பட்டன என்று பேராசிரியர் வி. மாணிக்கம் கூறுகிறார். ஆனால் சோழர் காலத்தில் நெடுநாள் பாழ்பட்டுக் கிடந்த குளங்கள் பழுது பார்க்கப்பட்டதாகப் பல கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

''வாகைப்புத்தூரில் வடக்கு வாசல் வாகைக்குளம்
நெடுநாள் பாழ்பட்டுக் கிடக்கிறதாகக் கேட்டோம்''

''வலிப்புறக்கா நாட்டு அநாதி பாழ்கிடந்த குளம் பெரும்புழைக் கரை''

என்ற கல்வெட்டுக்கள் சோழர்க்கு முன்பே கொங்கு நாடு பாசன வசதிகள் பெற்றிருந்ததைக் காட்டுகிறது.

ஏற்கனவே பாழ்பட்டுக் கிடந்த குளத்தை குடிமக்கள் பயன்பாட்டுக்கு அரசு அதிகாரிகள் அடைத்துத் திருத்தித் தந்தனர். அங்கு புன்செய் பயிர் செய்த மக்களே குளத்து நீரைப் பயன்படுத்தி நன்செய் பயிர் செய்து மூன்றில் ஒரு பங்கு அரசுக்குச் செலுத்த வேண்டும் என்று கூறப்பட்டது.

> ''கோயிலுக்கு வடக்கில் தாமரைக்குளம், இக்குளத்தின் கீழ் புன்செய் விளைத்த குடிமக்களே இக்குளத்தால் நீர் பாயும் இடமெல்லாம் விளைத்து குடிநீங்காத் தேவதானமாக உழுது விளைந்த நிலத்துக்கு மூன்றத்தொன்று வாரம் களத்திலே கண்காணித்துக் குடுப்பாராக''

என்று திங்களூர்க் கல்வெட்டுக் கூறுகிறது.

குடிமக்களே குளம் வெட்டி காடாய்க் கிடந்த நிலத்தை உழுது பயன்படுத்தினால் வாரம் கொடுக்க வேண்டியதில்லை என்றும், சில இடங்களில் சில ஆண்டுகளுக்கு வாரம் கொடுக்க வேண்டாம் என்றும் பின் கொஞ்சம் கொஞ்சமாக வாரத்தைப் பல ஆண்டுகள் படிப்படியாக ஏற்றி உரிய வாரம் கொடுக்க வேண்டும் என்றும் கூறப்பட்டது.

கொங்கு நாட்டில் மண்டல சதகங்கள் தொகுத்துக் கூறும் பன்னிரு ஆறுகளில் 8 ஆறுகளில் 90 அணைகள் இருந்ததாக இராமபத்திரன் பட்டயமும், தென்கரை நாட்டுப் பட்டயமும் கூறுகின்றன. நொய்யல் (32), அமராவதி (20), மீன்கொல்லியாறு (18), நல்லமங்கையாறு (6), பவானியாறு (4), உப்பாறு (4), நன்காஞ்சி (4), குடவனாறு (2) என்பன அணைகள் உள்ள ஆறுகளாகும். இவற்றில் பாதி அணைகளுக்கு மேல் ஈரோடு மாவட்டத்தில் உள்ளன.

நிலம் நன்செய், புன்செய், கருஞ்செய், தோட்டம், தடி, தாறு, செய், காடு, வயக்கல், கவர், செம்மண்குழி, செவ்வரி நிலம் எனப் பலவாறு அழைக்கப்பட்டது. வயக்கல் என்பது பலமுறை உழுது 'வசக்கி' பண்படுத்தப்பட்ட நிலமாகும். நிலங்களுக்குப் பெயர்களும் வைக்கப்பட்டிருந்தன. ''பூலாஞ்செய் என்று பெயர் கூவப்பட்ட நிலம்'' என்பது போல் அவை குறிக்கப்படும்.

குழி, மா, வேலி, காணி என்று பல அளவுகள் நிலங்களுக்குக் கூறப்பட்டன. நிலங்கள் அளக்கப்பட்டன. ''24 அடிக்கோலால் 256 குழி கொண்டது ஒரு மாவாக'' என்பது ஒரு கல்வெட்டு. அரசனுடைய கால் (பாதம்) அளவே அடி எனப்பட்டது. ''தேவர் தம் செருப்புக் காலாலே'' ''நம் பாட்டனார் பெரிய தேவர் காலாலே'' யுள்ள அளவு

அடி எனப்பட்டது. பல இடங்களில் அளவு முறைகள் மாறுபட்டுள்ளன. கொடை கொடுக்கும் போது ஏற்கனவேயுள்ளவர்கள் சொந்த நிலம், மானிய நிலம் இவை நீக்கி மிகத் துல்லியமாக அளந்து எல்லைக்கல் நாட்டிக் கொடுக்கப்பட்டது.

ஏற்கனவேயுள்ள பாசனத்திட்டங்கள் சரியாக நடக்காவிட்டால் புது முறைகள் புகுத்தப்பட்டன. காங்கயம் அகிலாண்டபுரம் கல்வெட்டில்

''செங்குளம் வண்ணான் வாவி ஆண்டிச்சிகுட்டை இந்த மூன்று குளத்தில் தண்ணீரும் கொண்டு வந்து பெரிய வாவியிலே விழுவிடுவித்து பெரிய வாவியில் தண்ணீர் பரந்த நீரோடு நிலம்'' என்று கூறப்படுகிறது.

அணை, ஏரி, குளத்தின் மதகுகள் 'வாய்' எனப்பட்டது. வாயிலிருந்து கால்வழியாக நீர் வருவதால் அது 'வாய்க்கால்' எனப்பட்டது. வாய்க்கால் நீர் திருப்பும் மடை 'கண்ணாறு' எனவும் அழைக்கப்பட்டது. குறுவாய்க்கால்கள் வதி எனப்பட்டன.

காடு அழித்து நாடாக்கிய நிலங்கள் 'மண்ணறை' எனப்பட்டன. கார், பசானம் என இரு விளைவு காலங்கள் (போகம்) கூறப்பட்டுள்ளன.

ஒரு போகம் விளையும் நிலம் 'ஒருபூ நிலம்' என்றும், இரு போகம் விளையும் நிலம் 'இருபூ நிலம்' என்றும் கூறப்பட்டது. சில இடத்தில் மூன்றால் போகம் விளைந்தால் அது 'கடைப்பூ' என்று கூறப்பட்டது.

பயிர் ஏறின (விளைந்த) நிலத்திலேதான் வரி வாங்கப்பட்டது. 'வெள்ளச்சாவி', 'வறச்சாவி', 'நாற்றுப்பாழ்', 'நட்டுப்பாழ்', ஆன நிலத்திற்கு வரி நீக்கப்பட்டது. அல்லது குறைக்கப்பட்டது. புவனேசுவரி என்னும் ஆய்வாளர் '' கொங்கு நாட்டில் தனியாக எவருக்கும் சொந்தமாக நிலம் இல்லை, எல்லா நிலங்களும் அரசனுக்கே சொந்தமாக இருந்தது'' என்று கூறியுள்ளார். ஆனால் கொடை நிலங்களின் எல்லை கூறும் போது, பலருக்கு உரிமையான நிலம் கூறப்பட்டுள்ளது. அவை விற்கவும் தானங்கொடுக்கவும் ஒற்றிவைக்கவும் சீதனம் கொடுக்கவும் உரிமையுடைய நிலங்கள் என்று கூறப்பட்டுள்ளன.

கிணறு அல்லது கூவல் செல்வாக்குடைய தனியார் வெட்டிய தால் அவை பெரும்பாலும் கல்வெட்டுக்களில் அதிகமாகப் பயின்று வரவில்லை. கூவலூர், காஞ்சிக்கூவல், கொல்லன் கூவல் என்ற ஊர்ப்பெயர்களில் கிணறு (கூவல்) கூறப்படுகிறது.

விளைவிக்கின்ற பயிர்கள் வான்பயிர், புன்பயிர் என இரு பெயரால் அழைக்கப்பட்டன. வான்பயிர் நன்செய் பயிர்கள், புன்பயிர் புன்செய் பயிர்கள். கரும்பு, தெங்கு, வாழை, பலா, மா, என்பவை வான்பயிராகவும் கம்பு, சோளம், ராகி, வரகு, சாமை, பயிறு வகைகள் பருத்தி, எள் புன்பயிர் என்றும் கூறப்பட்டன. நெல் மிகவும் குறை வாகவே பயிரிடப்பட்டது. ஈரோடு மாவட்டப் பகுதியில் கம்பு விளைச் சலே மிக அதிகமாக இருந்தது. கோயில் கொடையாகவும், தேசாந்திரி பிராமணர் உண்ணும் சத்திரங்கட்குக் கொடுக்கும் பொருளாகவும் அரசுக்கு இறையாகவும் கம்பு அளிக்கப்பட்டதாக பல கல் வெட் டுக்கள் கூறுகின்றன. நெல் கொடுப்பதாக ஒப்புக் கொண்ட வர்கள் குளத்தில் போதுமான நீர் இல்லாத காலங்களில் நெல்லுக்குப் பதி லாகக் கம்பு கொடுத்தனர். ''குளம் எத்தாத நாள் நெல்லுக்குப் பதி லாகக் கம்பு கொடுப்போம்'' என்று முருங்கத்தொழுவுக் கல்வெட்டுக் கூறுகிறது.

அரசிறையாகவோ, கோயிலுக்கோ, கொடுக்கும் நெல்லை 'கல், பதர், செத்தை, மடி, முளை, ஈரவாசி நீக்கி' தூய நெல்லாகக் கொடுத் தனர். விளையிலும் விளையாது ஒழியிலும் காஞ்சாலும் பேஞ்சாலும் ஊர்கேடு போனாலும் கொடுப்போம் எனக் கோயில் நிலத்தை உழுபவர்கள் கூறியுள்ளார்கள்.

## இக்கால வேளாண்மை

### வேளாண்மை வளர்ச்சி முயற்சிகள்

கூட்டுறவு இயக்கத்தின் மூலம் இன்றைய விவசாயம் பெரும் பயனடைகின்றது. ஐரோப்பாக் கண்டத்தில் கூட்டுறவு இயக்கம் பரவலாக நடைமுறையில் இருந்தது. 1892ஆம் ஆண்டு சர் பிராடரிக் நிக்கல்சன் கூட்டுறவுத் தனி அலுவலராக நியமிக்கப்பட்டார். அவர்

ஐரோப்பாத் திட்டங்களை ஆய்வு செய்து ஜெர்மன் நாட்டினுடைய 'ரூரல் கோவாபரேடிவ் சொசைட்டி' மாதிரி அமைக்கப் பரிந்துரை செய்தார். அதற்கேற்ப 1895ஆம் ஆண்டு வேளாண்மை உதவிக்காக "லேண்ட் அண்ட் அக்ரிகல்ச்சரல் பேங்க்" தொடங்கப்பட்டது. 1917இல் அது சென்னை மாநில கூட்டுறவு வங்கியாக மாற்றப்பட்டது. வேளாண்மையோடு பிறவகைப் பயன்பாட்டையும் இவை அளித்தன.

1908ஆம் ஆண்டு கல்கத்தாவில் தொழில் இயக்குநரும் தொழில் பொறியாளரும் நியமிக்கப்பட்டனர். அவர்கள் உதக மண்டலத்தில் தொழில் வளர்ச்சி தொடர்பாக ஒரு கருத்தரங்கினை 1908ஆம் ஆண்டு நடத்தினர். 1914ஆம் ஆண்டு சென்னை மாநில தொழில்துறை தொடங்கப்பட்டது. 1922ஆம் ஆண்டு தொழில் உதவிக் கழகம் தொடங்கினர். 1951ஆம் ஆண்டு மாவட்டத் தொழில் அலுவலர்கள் மாவட்டம் தோறும் நியமிக்கப்பட்டனர்.

விவசாயத்துக்கு உதவ 1882ஆம் ஆண்டு "நில அபிவிருத்திச் சட்டம்" கொண்டு வரப்பட்டது. கிணறு, ஏரி, குளம், வாய்க்கால் அமைக்க பாசன வசதிக்காக நீண்டகாலக் கடன் கொடுக்கப்பட்டது. 1884ஆம் ஆண்டு 'விவசாயக் கடன் சட்டம்' கொண்டு வரப்பட்டு கால்நடை, விதை, உரம் முதலியவை வாங்கக் கடன் அளிக்கப்பட்டது. விவசாயிகள் கடன் சுமையால் அவதிப்படவே, அடைமான நிலச் சட்டம் கொண்டு வரப்பட்டுப் பின் 1935ல் விவசாயிகளுக்காகக் "கடன் வாங்கியோர் பாதுகாப்புச் சட்டம்" கொண்டு வரப்பட்டது.

தொடக்க வேளாண்மை ஊரக வளர்ச்சி வங்கிகள் 12. தொடக்க வேளாண்மை கூட்டுறவு வங்கிகள் 227 உள்ளன. அவை பல வழிகளில் உழவர்களுக்கு பயன்படுகிறது.

## சந்தைப்படுத்துதல் - விற்பனைக்குழு

விவசாய விளைபொருட்களைச் சந்தைப்படுத்துதல் மிக அவசியம் ஆகும். அவ்வகையில் "ஒழுங்குமுறை விற்பனைக் கூடங்கள்" மிக முக்கிய இடத்தை வகிக்கின்றன. 1933இல் "சென்னை விளைபொருட்கள் விற்பனைச்சட்டம்" கொண்டு வரப்பட்டது. அதன்படி 1936இல்

முதல் முறையாக திருப்பூரில் 'விற்பனைக்குழு' தொடங்கப்பட்டது. முதலில் பருத்தி மட்டுமே கொள்முதல் செய்ய ஏற்பாடு செய்யப் பட்டது. 1950இல் கோபி, ஈரோடு ஆகிய இடங்களில் ''விற்பனைக் குழு'' தொடங்கப்பட்டு நிலக்கடலையும் புகையிலையும் விற்பனைக்கு ஏற்பாடு செய்யப்பட்டன.

சென்னையில் ''தமிழ்நாடு வேளாண்மை விளைபொருள்கள் விற்பனை வாரியம்'', ஏற்பட்டு மாவட்டம் தோறும் ''ஒழுங்குமுறை விற்பனைக் கூடங்கள்''தொடங்கப்பட்டன. கோவை மாவட்ட விற் பனைக் குழுவிலிருந்து 1986ஆம் ஆண்டு ''ஈரோடு மாவட்ட விற் பனைக் குழு'' பிரிந்தது. மாவட்டம் முழுவதும் 25 ஊர்களில் ''விற் பனைக் கூடங் கள்'' தொடங்கப்பட்டன.

பருத்தி, நிலக்கடலை, புகையிலை, மஞ்சள், மக்காச்சோளம், கம்பு, ராகி, நெல், மிளகாய், கரும்புச் சர்க்கரை, வெல்லம், எள், ஆமணக்கு, தேங்காய், சூரியகாந்தி ஆகியவை விற்பனைக்காக ஏற்றுக் கொள்ளப் படுகின்றன. ஈரோடு, தாளவாடி ஆகிய இடங்களில் பட்டுக் கூடுகளும் விற்பனைக்கு வருகின்றன. விவசாயிகளுக்குப் பல நன்மைகளை ஒழுங்குமுறை விற்பனைக் கூடங்கள் செய்கின்றன. மறைமுக, நேரடி விற்பனை மூலம் விவசாயிகளுக்கு உடனடியாக உரிய விலை கிடைக்கிறது.

பல ஊர்களில் வாரம் ஒரு முறை வாரச் சந்தைகள் கூடுகின்றன. அவைகள் சிலவற்றில் கால்நடைகளும் விற்பனைக்கு வருகின்றன. தாராபுரம், ஈரோடு, கோபி, சத்தியமங்கலம் ஆகிய ஊர்களில் நாள் தோறும் உழவர் சந்தைகள் கூடுகின்றன.

பருவமழை தவறுதல், பெருமழை, ஆள் பற்றாக்குறை, கட்டுப் படியாகாத விலை ஆகியவற்றால் விவசாய நிலத்தின் பரப்பு கடந்த 10 ஆண்டுகளில் 10 சதவிகிதம் குறைந்துள்ளது. தரிசுநிலம் அதிகமாகிக் கொண்டு வருகிறது. வேளாண்மையில்லாத உபயோகத்துக்குப் பயன் படும் நிலத்தின் பரப்பு அதிகமாகிக் கொண்டே போகிறது.

## விவசாயத்தில் நவீன உத்திகள்

பழைய சாகுபடி முறையிலேயே பலர் விவசாயம் செய்தாலும் உழவர்கள் சிலர் நவீன உத்திகள் பலவற்றைக் கடைப்பிடிக்கின்றனர். கோவை வேளாண்மைப் பல்கலைக் கழகத்தின் ஆய்வுகளும் ''புதிய வீரிய விதைகளும்'' பயிற்சி வகுப்புகளும் ஈரோடு மாவட்ட விவசாயிகள் நன்கு வேளாண்மையில் முன்னேற்றம் காண உதவுகின்றன. ''தோட்டக் கலைச் சாகுபடியாளர்கள் சங்கம்'' அமைத்துக் கடந்த பதினைந்து ஆண்டுகளாக பிற மாவட்டங்களிலும், பிற மாநிலங்களிலும் இயங்கி வரும் சிறந்த பண்ணைகளைப் பார்வையிட்டு ஏற்றவற்றை தாங்களும் பின்பற்றுகின்றனர்.

அரசு வேளாண்மைத் துறையின் மூலம் செயல்படுத்தப்படும் தீவிரத்திட்டம், அபிவிருத்தித் திட்டம், பலபயிர்த் திட்டம் மூலமும் நல்ல பலன்கள் ஏற்பட்டு வருகின்றன. மண் பரிசோதனை, சொட்டு நீர்ப் பாசனம், தெளிப்புநீர்ப் பாசனம், திசு வளர்ப்பு போன்றவைகளையும் பயன்படுத்துகின்றனர். உழவு, நடவு, அறுவடை, போர் அடித்தல் போன்றவற்றிற்கு இயந்திரங்களும் பயன்படுத்தப்படுகின்றன. மண் புழு வளர்ப்பு, இயற்கை முறை வேளாண்மை ஆகியவற்றில் மாநிலத்திலேயே ஈரோடு மாவட்டம் முதலிடம் பெறுகிறது. வேளாண்மை பற்றிய விழிப்புணர்வை பல இதழ்களும் ஏற்படுத்தியுள்ளன. ஈரோடு மாவட்ட விவசாயிகள் உற்பத்திகளில் பல பரிசுகளைப் பெற்றிருக்கின்றனர். வழக்கமான பயிர்களையே பயிரிடாமல் சிலர் புதிய பயிர்கள் வளர்த்துப் பயன்பெறுகின்றனர். ஏக்கருக்கு 28 டன் கரும்பு உற்பத்தி செய்த சக்தி சர்க்கரை ஆலைப்பகுதி விவசாயிகள் ஏக்கருக்கு 42 டன் கரும்புவரை இன்று உற்பத்தி செய்வது விவசாய முன்னேற்றத்துக்கு ஒரு சீரிய எடுத்துக்காட்டு.

## விளைபொருட்கள்

ஈரோடு மாவட்டத்தில் நெல், கம்பு, சோளம், ராகி, மக்காச் சோளம் முதலிய தானிய வகைகளும் பருப்பு வகைகளும் மஞ்சள், கரும்பு, மரவள்ளிக்கிழங்கு போன்ற பணப்பயிர்களும் நிலக்கடலை, எள்,

ஆமணக்கு, சூரியகாந்தி, தேங்காய் போன்ற எண்ணெய் வித்துக் களும் வாழையில் பூவன், ரஸ்தாளி, மொந்தன், நேந்திரம், தேன் வாழை, செவ்வாழை, கதலி, ஜி9, பச்சை நாடன், பச்சைப்பழம், ரொபஸ்டா போன்றவை பயிரிடப்படுகின்றன. கொய்யா, மா, மாதுளை, திராட்சை, சப்போட்டா, எலுமிச்சை, சீதா, பப்பாளி போன்ற பழவகைகளும், புளி, வெங்காயம், நெல்லி, காய்கறிகள், மூலிகை வகைகள், மலர் வகைகள், பட்டுக்கூடு தயாரிக்க மல்பெரி ஆகியனவும் பயிரிடப்படுகின்றன. ஈரோடு மாவட்டத்தில் சுமார் 3 லட்சம் எக் டேரில் விவசாயம் நடைபெறுகிறது.

❊❊❊

# 29. தொழில்கள்

## பண்டைய தொழில்

ஈரோடு மாவட்டப் பகுதியில் பண்டைக்காலம் முதல் நடந்து வந்த உழவுத்தொழில் மூலம் விளைந்த பருத்தியைக் கொண்டு நூல் தயாரித்து ஆடை நெய்துள்ளனர். பஞ்ச கம்மாளர் என்னும் ஐவகை ஆசாரிமார்கள் பொன்வேலை, உலோக வேலை, கல் வேலை, மர வேலை, சிற்ப வேலை ஆகியவற்றைச் செய்தனர். இவற்றைத் தவிர வேறு தொழில்கள் அதிகமாகத் தோன்றவில்லை. அதற்கான தேவை யும் அக்காலத்தில் இல்லை. உற்பத்தியான பொருட்களை கொண்டு செல்லவும் வாழ்க்கைக்குத் தேவையான பொருட்களைக் கொண்டு வரவும் வணிகர்கள் இருந்தனர்.

ஈரோடு மாவட்டத்தில் நொய்யல் ஆற்றங்கரையில் கிடைக்கும் பல்வேறு கற்களைக் கொண்டு வண்ணக் கல் மணிகளைச் செய்தனர். இரும்பு எடுத்து உருக்காக மாற்றினர். அவற்றை வெளிநாடுகளுக்கும் அனுப்பினர். கிராமத்தில் வைவினைஞர்கள் இருந்தனர்.

## கிழக்கிந்திய கம்பெனிகள்

கிழக்கிந்தியக் கம்பெனியினர் ஐரோப்பாவில் ஏற்பட்ட தொழிற் புரட்சியின் காரணமாக உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களுக்குத் தகுந்த சந்தை தேடும் போது அவர்களுக்கு அதிக மக்கள்தொகையும் வாங்கும் சக்தியும் உடைய இந்தியா தென்பட்டது. இங்கு தங்கள் தொழிலைத் தொடங்கினர். டச்சுக்காரர், போர்ச்சுக்கீசியர், ஆங்கிலேயர் அம்முயற்சியை மேற்கொண்டனர். அத்தொழில் போட்டியில் ஆங்கி லேயர் இறுதியில் வென்றனர். இங்குள்ள நிலையைப் பயன்படுத்தி நாடாளும் உரிமையும் பெற்றனர்.

ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனியினர் தங்கள் நாட்டில் உற் பத்தியான பொருள்களையே இங்கு விற்றனர். இங்கு ஏற்படுத்தப்பட்ட பெருந்தொழில்களையும் தாங்களே தொடங்கினர். அல்லது தங்கள்

நாட்டுக்காரர்களுக்கு வாய்ப்பளித்தனர். இதற்கு பக்கிங்ஹாம் கர்னாடிக் மில், ஹார்வி மில், கோவையில் ஸ்டேன்ஸ் மில் ஆகியவைகளை எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம்.

## இங்கிலாந்து மன்னராட்சி

கிழக்கிந்தியக் கம்பெனியினர் இந்திய ஆட்சியை இங்கிலாந்து அரசுக்கு ஒப்படைத்துப் பல ஆண்டுகள் ஆகியும் பழைய நிலைமையே நீடித்தது. இந்தியர்களும் தொழில் தொடங்கப் படிபடியாக அனுமதிக்கப்பட்டனர். 1906ஆம் ஆண்டு கோயமுத்தூரில் முதன் முதலில் 'சோமசுந்தரா' மில் தொடங்கப்பட்டது.

1934ஆம் ஆண்டு 'பிரிட்டிஷ் பிராட்காஸ்டிங் கார்ப்பரேஷன்' என்ற இங்கிலாந்து கம்பெனிதான் முதலில் வானொலி ஒலிபரப்பைத் தொடங்கியது. சென்னை, திருச்சியிலுள்ள அக்கம்பெனிகளை 1938ல் தான் அரசு ஏற்றது. இவற்றில் முதன்மைப் பதவிகள் மழுவதும் ஆங்கிலேயருக்கே அன்று வழங்கப்பட்டன.

இந்தியாவின் இறக்குமதி, ஏற்றுமதி வணிகம் முழுவதையும் ஆங்கிலேயக் கம்பெனிகளே நடத்தின. அதை எதிர்த்தே வ.உ. சிதம்பரனார் ''சுதேசி கப்பல் கம்பெனியைத்'' தொடங்கி ''கப்பலோட்டிய தமிழன்'' என்ற பெயரைப் பெற்றார்.

## அரசு நிறுவனங்கள்

கல்கத்தாவே இந்தியாவின் முக்கிய நகராக விளங்கியது. துறைமுக நகராகக் கல்கத்தா இருந்ததே அதற்குக் காரணம். 1908ஆம் ஆண்டு ''தொழில் இயக்குநர் மற்றும் தொழில் நுட்ப விசாரணை'' அலுவலர் (Industrial Director and Technical Enquires) நியமிக்கப் பட்டார். எல்லா மாநிலப் பிரதிநிதிகளையும் அழைத்து அதே ஆண்டு ஒரு விரிவான ஆய்வு மாநாட்டை அவர் உதகமண்டலத்தில் நடத்தினார். எல்லா மாநிலங்களும் தொழில் தொடங்கத் தக்க அறிவுரைகளைக் கூறினார். 1914ஆம் ஆண்டு சென்னை மாநிலத்தில் அரசின் சார்பில் தொழில்துறை (Department of Industry) ஏற்படுத்தப்பட்டது. தொழில் ஆணையர் ஒருவர் நியமிக்கப்பட்டார்.

மாநிலத்தின் பல இடங்களில் தொழில்களை விளக்கும் கண் காட்சிகள் நடத்தப்பட்டன. நெசவுத் தொழில், கிராமத் தொழில்கள் பற்றி அறிவுரை வழங்கப்பட்டது. 1922ஆம் ஆண்டு 'தொழில் உதவிச் சட்டம்' (State Aid to Industrial Act) இயற்றப்பட்டது. முதல் ஐந் தாண்டுத் திட்டத்தில் விவசாயம் போல தொழிலுக்கும் முக்கியத்துவம் தரப் பட்டது. 1951ஆம் ஆண்டு மாவட்டங்கள் தோறும் 'மாவட்டத் தொழில் அலுவலர்' (District Industrial Officer) நியமிக்கப்பட்டார். தொழில் வளரப் படிப்படியாகப் பல்வேறு அரசு நிறுவனங்கள் தொடங் கப்பட்டன. இன்று அவற்றின் பயன்பாடு பல்வேறு வகைகளாகப் பரந்து விரிந்துள்ளது.

### 1. சிட்கோ தொழில்பேட்டைகள் (SIDCO - Small Industries corporation)

தொழில் தொடங்குவோர் இடம் வாங்க, கட்டிடம் கட்ட, தண்ணீர் மின்சார இணைப்புகள் பெற ஏற்படும் பொருள் செலவையும் சிரமத் தையும் குறைக்க எல்லா வசதிகளுடன் கூடிய ஒரே குடையின் கீழ் எல்லாம் கிடைக்கக் கூடிய தொழில்பேட்டை 1956ல் தொடங்கப் பட்டது. ஈரோட்டில் 25.13 ஏக்கரில் 15 தொழில் கூடங்கள் உள்ளன. சிறிய தொழிற் கூடங்கள் 8 உள்ளன.

இங்கு நெல் அறைக்கும் ஜல்லடை, மேசை நாற்காலிகள், அலு மினிய வீட்டுப்பயன்பாட்டுப் பொருட்கள், காகிதப் பொருட்கள், பிளாஸ்டிக் வீட்டுச் சாமான்கள், வெல்டிங் மற்றும் கிரில் செய்தல், இரசாயனப் பொருட்கள், மின்சார சாதனங்கள், மின்னியல் பொருட் கள், கணிப்பொறிப் பாகங்கள், இயந்திரங்கள், இயந்திர பாகங்கள் ஆகியவை செய்யப்படுகின்றன.

30 தொழிற் கூடங்களுடன் தாராபுரத்திலும், 9 தொழிற் கூடங்கள் 5 சிறு தொழிற்கூடங்களுடன் நஞ்சை ஊத்துக்குளியிலும், பெருந் துறையில் 'தாட்கோ' (THADCO) தொழில் பேட்டையும் உள்ளன. இவற்றால் பல தொழில் முனைவோர் பயன்பெறுகின்றனர்.

## 2. தமிழ்நாடு தொழில் வளர்ச்சிக்கழகம் (TIIC - Tamilnadu Industrial Investment Corporation)

தமிழ்நாடு, பாண்டிச்சேரி மாநிலங்களுக்கான தொழில் வளர்ச்சிக்காகச் சென்னையில் 1949ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட இக்கழகம் 1982இல் ஈரோட்டில் தன் கிளை அலுவலகத்தைத் தொடங்கியது. தொழில்களுக்குத் தேவையான கருவிகள் வாங்கக் கடன் உதவியை அளிக்கிறது. தேவையான மானியங்களையும் இக்கழகம் அளிக்கிறது. தொழில்முனைவோர் குறைந்த வட்டி விகிதத்தில் தவணை முறையில் கடனைச் செலுத்தலாம்.

## 3. தமிழ்நாடு சிறுதொழில் மேம்பாட்டுக்கழகத் தொழில் பூங்கா (SIPCOT - State Industrial Promotion Corporation of Tamilnadu)

பெருந்துறை அருகில் 2800 ஏக்கர் பரப்பளவில் 2000 ஜூலை முதல் இப்பூங்கா இயங்கிவருகிறது. ஜவுளி தொடர்பான பல தொழில்கள், தோல், கெமிக்கல், இந்தியன் ஆயில் கம்பெனியின் துணைப் பொருட்கள், பாரிவேரின் வீட்டுப் பயன்பாட்டுப் பொருட்கள், பி.வி.சி.பைப், இரும்பு உருக்காலை தொடர்பான பல தொழிற்கூடங்கள் இயங்கி வருகின்றன. இவை அரசு மானியம் பெற்றவை.

## 4. உயர் தொழில்நுட்ப நெசவுப் பூங்கா (High Tech Weaving Park)

ஈரோடு வட்டம், சித்தோட்டை அடுத்துள்ள பேரோடு கிராமத்தில் மத்திய, மாநில அரசுகளின் ஜவுளித்துறையின் உதவியுடன் 128 கோடி ரூபாய் செலவில் ஈரோடு உயர் தொழில்நுட்ப நெசவுப் பூங்கா அமைக்கப்படுகிறது.

உலக ஜவுளிச் சந்தையில் இந்தியாவின் பங்கு 3 சதவீதம் தான். இதை அதிகப்படுத்தவும் இத்துறையில் சீனா மற்றும் கிழக்காசிய நாடுகளின் கடுமையான போட்டியைச் சமாளிக்கவும் ஜவுளித்தொழிலில் புதுமையும் நவீன உத்திகளும் தேவைப்படுகின்றன. இதைக் கருத்தில்

கொண்டு மத்திய அரசு ஜூலை முதல் தேதி இதற்கு அனுமதி வழங்கியது.

ஐரோப்பிய நாடுகளிலும் சீனாவிலும் கண்டுபிடிக்கப்பட்டுப் பயன்படுத்தப்பட்டு வரும் நாடா இல்லாத விசைத்தறிகளைப் பயன்படுத்தும் கூடங்கள் இங்கு அமைக்கப்படும். நெசவுடன், ஆயத்த ஆடை தயாரிப்பு, சைசிங், வார்ப்பிங் போன்ற ஜவுளித்துணைத் தொழில்களும் இங்கு தொடங்கப்படும். கட்டமைப்பு வசதிகளுக்கும் தொழில் கூடங்களுக்கும் 40 சதவீதம் மைய அரசும் மாநில அரசும் மானியம் வழங்குகின்றன. இதன் மூலம் நேரடியாகவும் மறைமுகமாகவும் 7500 பேர் வேலைவாய்ப்புப் பெறுவர்.

### 5. மாவட்டத் தொழில் மையம் (District Industrial Centre)

சிறு தொழில் வளர்ச்சியை விரைவுபடுத்தவும் தொழில் முனைவோர்க்கு வேண்டிய தகவல்கள், ஆலோசனை, நிதிஉதவி, தொழில் நுட்ப உதவி, மூலப்பொருள் கிடைக்குமிடம், சந்தைப்படுத்துதல் ஆகிய வழிவகைகளை ஒரே இடத்தில் வழங்க ஈரோடு மாவட்டத்தில் 17.9.1979 அன்று மாவட்டத் தொழில் மையம் தொடங்கப்பட்டது. இம்மையத்தின் சான்றிதழ்களே வரைபட அனுமதி, மின் இணைப்பு, வங்கிக்கடன் முதலியவை பெற உதவுகின்றன. 31.3.2003 முதல் ஏற்றுமதி வழிகாட்டு மையமும் இயங்கி வருகிறது.

### 6. ஈரோடு மாவட்டச் சிறுதொழில்கள் சங்கம்

கோவை மாவட்ட சிறுதொழில் சங்கத்திலிருந்து (Coimbatore District Small Industries Association - CODISIA) பிரிந்து ஈரோடு மாவட்டச் சிறு தொழில் சங்கம் (Erode District Small Industrial Association - EDISIA) அமைக்கப்பட்டுத் தொழில் முனைவோர் நலன் காத்து வருகிறது.

### 7. பெடக்சில் (Powerloom Development & Export Promotion Council)

விசைத்தறி வளர்ச்சி மற்றும் ஏற்றுமதி அபிவிருத்திக்கழகம் பம்பாயில் 1995ல் தொடங்கப்பட்டது. ஈரோட்டிலும் அடுத்ததாக அமைந்து அரும்பணியாற்றுகிறது.

## ஈரோடு வளர்ச்சி மாவட்டம்

ஈரோடு வளர்ச்சி மாவட்டம், கோவை வளர்ச்சி மாவட்டம் என கோவை மாவட்டம் இரண்டாகப் பிரிக்கப்பட்டது. அதனால் ஈரோடு மாவட்டம் பல்வேறு தொழில் வளர்ச்சிகளைப் பெற்றது.

1946ஆம் ஆண்டு கொண்டுவரப்பட்ட பிர்க்கா வளர்ச்சித் திட்டத்தில் வெள்ளகோயிலும் காங்கயமும் 1.10.1952இல் தொடங்கி 31.9.1956இல் முடிக்கப்பட்ட கீழ்பவானி திட்ட வளர்ச்சிப் பணிகள் மூலம் கோபி, ஈரோடு, பவானி, தாராபுரம் ஆகிய வட்டங்களும் 1953ல் கொண்டு வரப்பட்ட வட்டார சமுதாய வளர்ச்சித் திட்டத்தாலும் 1956ல் கொண்டு வரப்பட்ட தேசிய விரிவாக்க செயல் திட்டத்தாலும் குண்டடம், கொழுமண்குழி, தாராபுரம் மூலனூர்ப் பகுதிகளும் பயன் பெற்றுப் பல்வேறு சிறு தொழில்கள் தொடங்க வாய்ப்பேற்பட்டது.

இந்தியக் கிராமக் கைத்தொழில் குழு கைக்குத்தலரிசி தயாரிக்கவும் வார்தா செக்கு அமைக்கவும் கைக்காகிதம் - அட்டை செய்யவும் தேனீ வளர்க்கவும் பயிற்சி அளித்தது.

தேசிய சிறு கைத்தொழில் குழு கொல்லர் பயிற்சி, லாட ஆணி செய்தல், தச்சுப்பயிற்சி, தோல் பொருள் செய்தல் பயிற்சி ஆகியவற்றை அளித்தது. இந்தியக் கைத்தொழில் குழு தையல் வேலை, பின்னல் வேலை, பூவேலை, செங்கல் தயாரித்தல், கயிறு திரித்தல், மரப் பொம்மை செய்தல் ஆகியவற்றில் பயிற்சி அளித்தது. இதனால் கிராமத்தொழிலாளர்களும் பெண்களும் பெரிதும் பயனடைந்தனர்.

### கூட்டுறவு இயக்கங்கள்

அநேகமாக இன்று எல்லாவிதமான சிறு தொழில்களுக்கும் கூட்டுறவுச் சங்கம் அமைக்கப்பட்டுள்ளது. குறைந்த வட்டிக்குத் தவணை முறையில் திருப்பிச் செலுத்தக்கடன் கொடுக்கப்படுகிறது. ஈரோடு மாவட்டத்திலும் 70000 கைத்தறிகளும் 50000 விசைத்தறிகளும் உள்ளன. 197 கூட்டுறவு நெசவாளர் உற்பத்தி மற்றும் விற்பனைச் சங்கங்கள் உள்ளன. சில பெரிய கூட்டுறவு நெசவாளர் சங்கங்கள் தமிழ்

நாட்டில் பல இடங்களிலும் வட நாட்டிலும் பிற மாநிலங்களிலும் விற்பனை நிலையங்களை அமைத்துள்ளன.

பவானி ஜமுக்காளமும், சென்னிமலைப் படுக்கை விரிப்பு வகைகளும் உலகப்புகழ் பெற்றவைகளாக விளங்குகின்றன. கூட்டுறவு இயக்கம் மூலம் இத்தொழில்கள் பெரும்பயன் அடைகின்றன.

## தொழில் வளர்ச்சி

தமிழ்நாட்டில் தொழில்வளம் மிக்க ஐந்து மாவட்டங்களுள் ஈரோடு மாவட்டம் ஒன்று. மொத்தச் சிறு தொழில் நிறுவனங்கள் ஏறத்தாழ 30000 பதிவு செய்யப்பட்டுள்ளன. அவற்றால் 1½ இலட்சம் பேர் வேலைவாய்ப்புப் பெறுகின்றனர்.

ஈரோடு மாவட்டத்தில் முதலிடம் (20.2%) பெறுவது பருத்தித் துணிகள் உற்பத்தியாகும். (கைத்தறி, விசைத்தறி, ஆலை) இரண்டாவது இடம் உள்ளாடை - ஆயத்த ஆடை உற்பத்தியாகும் (18.7); மூன்றாம் இடம் உணவுப் பொருள் உற்பத்தியாகும் (11.4%); குடிநீர், சுவைநீர் உற்பத்தித் தொழில் மற்றும் கயிறு, நார்,சணல் உற்பத்தியில் ஈரோடு மாவட்டம் மாநிலத்தில் முதலிடம் பெறுகிறது.

## பிரிவுகள்

தொழில்களை பெருந்தொழில், சிறுதொழில், குறுந்தொழில், கைவினைப்பொருள் உற்பத்தி எனப் பிரித்து அதற்கேற்ப அரசு உதவிகள் வழங்கப்படுகிறது. நூற்பாலைகள் (57), பொறியியல் கருவிகள் (3), சர்க்கரை ஆலை (3), எண்ணெய் பிழியும் ஆலை(1) உணவுப் பொருள் தயாரித்தல் (2), இரசாயனப் பொருள் தயாரித்தல் (3) ஆகியவை பெரிய தொழில்கள் ஆகும்.

ஆயத்த ஆடை, பருத்தி நூல்-கம்பளி-சணல்-பட்டு நெசவு, தோல் பொருள், கயிறு - கயிற்றுப்பொருள், இரத்தினக்கற்கள், ஊறுகாய் - மசாலா, தென்னை ஓலைத் தட்டிகள், பொரி, மரச்சாமான், பாத்திரம் மூங்கில் கூடைத் தொழில் சிறு தொழில்கள் ஆகும்.

ஆயத்த ஆடை, கைத்தறித்துணி, தோல் பொருள், ஊதுபத்தி, ஜமுக்காளம், பனைஓலைப் பொருள், சாம்பிராணி, அச்சு, நகை, மூங்கில்

-பிறம்பு வேலை, கையச்சு, மரப்பொருள், பின்னல் ஆகிய தொழில்கள் கைவினைத் தொழில்களாக அறிவிக்கப்பட்டிருக்கின்றன.

## அரிசி ஆலைகள்

ஈரோடு மாவட்டத்தில் 400 அரிசி ஆலைகள் உள்ளன. அவற்றுள் 150 நவீனப்படுத்தப்பட்ட அரிசி ஆலைகள் ஆகும். தஞ்சாவூர் மாவட்டத்திலிருந்தும் ஆந்திரா, கர்நாடகா, மத்தியபிரதேசம் போன்ற பிற மாநிலங்களிலிருந்தும் நெல் இம் மாவட்ட அரிசி ஆலைகளுக்கு வருவது குறிப்பிடத்தக்கது. தமிழ்நாட்டின் எல்லாப் பகுதிகளுக்கும் அரிசி அனுப்பப்படுகிறது. அரிசி ஆலைகள் நெல் அறவையின்போது கிடைக்கும் உமி, தவிடு போன்றவைகளையும் பெரும் அளவில் தயாரிக்கிறது. அரிசி விற்பனைக்கென்றே பல அரிசி மண்டிகள் உள்ளன.

கிராமக் கைத்தொழில் மூலம் கைக்குத்தலரிசியும் கிராமப்புறங்களில் தயாராகிறது.

## ஜவுளியின் துணைத்தொழில்கள்

பருத்தித்துணி, ஆயத்த ஆடை உற்பத்தித் தொழிலில் பல்வேறு துணைத்தொழில்கள் நடைபெறுகின்றன. அவை பஞ்சு அறைத்தல், நூற்றல், பாவேற்றுதல், பதப்படுத்துதல், முருக்கேற்றுதல், சலவைத் தண்ணீர் தயார் செய்தல், சலவை செய்தல், சாயமிடுமிடம், பிசிர் எடுத்தல், கஞ்சி போடுதல், தையல், பூவேலைப்பாடு, பின்னல், தேய்த்தல், மடித்தல், வடிவமைத்தல், கணிப்பொறியாளர், பேல் போடுதல், வண்டிகள் பாரமேற்றுதல், முகவர், தரகர் போன்ற பல்வேறு பணிகளைச் செய்பவர்கள் உள்ளனர். இவைகளிலும் கைத்தறியிலும் விசைத்தறியிலும் பணிபுரிவோர் உட்பட மொத்தம் சுமார் 5 இலட்சம் பேர் ஜவுளித் தொழிலில் ஈடுபட்டுள்ளனர்.

## பிறதொழில்கள்

பனை, தென்னை மட்டைகளிலிருந்து நார் தயார் செய்தல், கயிறு திரித்தல், பாத்திரங்கள் செய்தல் போன்ற தொழில்களும் மாவட்டத்தில் விரிவாக நடைபெறுகின்றன.

பல்பொருள் அங்காடிகள், வாகனங்கள், வாகன பாகங்கள், கட்டு மானப் பொருள்கள், மருந்து வகைகள், வீட்டுப் பயன்பாட்டுப் பொருட் கள், உணவுக்கடைகள், தங்கும் இடங்கள், சிற்றுண்டிச் சாலைகள், இறக்குமதி ஜவுளி ரகங்கள், ஒளிப்படம் எடுத்தல், அச்சகங்கள் முதலிய வாழ்வின் எல்லாக்கூறுகளுக்கும் உரிய தொழில்கள் நடைபெறுகின்றன. தினசரி மார்க்கெட்டும் உழவர் சந்தையும் சிறப்பாக இயங்குகின்றன.

## மீன் பிடி தொழில்

உள்நாட்டு மீன்பிடி தொழில் ஈரோடு மாவட்டத்தில் நடைபெறு கிறது. பவானிசாகர், கொடிவேரி, உப்பாறு அணைகளிலும் அமராவதி, பவானி, காவிரி ஆறுகளிலும் குளங்கள், ஏரிகளிலும் மீன்பிடி தொழில் நடைபெறுகிறது. 9000 எக்டேர் பரப்பளவில் சுமார் 4000 பேர் மீன்பிடி தொழிலில் ஈடுபட்டுள்ளனர். ஆண்டுக்கு 2250டன் மீன் பிடிக்கப்படுகிறது.

தாலக்குளத்தில் மீன் குஞ்சு உற்பத்தி செய்யப்படுகிறது. தாலக் குளத்திலும் ஓடத்துறையிலும் எரால் மீன் பிடிக்கப்பட்டு ஏற்றுமதி செய்யப்படுகிறது. செம்படவம்பாளையத்தில் மீன் பிடி வலை செய் யப்படுகிறது. மீன் பிடிப்போர் கூட்டுறவு சங்கம் அமைத்துள்ளனர். பவானி சாகரில் மீன் துறை உதவி இயக்குநர் அலுவலகம் உள்ளது. மீன் பண்ணை, மீன் காட்சிக்கூடம், மீன் ஆராய்ச்சி நிலையம் ஆகியன வும் உள்ளன. இந்நிலையங்கள் சென்னை சேத்துப்பட்டிலிருந்து 1955 ஆம் ஆண்டு பவானிசாகருக்கு மாற்றப்பட்டன.

## கட்டுமானத் தொழில்

தென்னகத்தில் அரசு, பொதுமக்களின் நன்மதிப்பையும், நம்பிக் கையைப் பெற்ற மிகச்சிறந்த கட்டிட ஒப்பந்தக்காரர்கள் இம்மாவட்டத்தில் பலர் இருப்பது இம்மாவட்டத்தின் சிறப்பாகும். அவர்கள் கடந்த 50 ஆண்டுகளில் போற்றத்தக்க முறையில் கட்டுமானத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்றனர். கட்டுமானத் தொழிலுக்குத் தேவையான கம்பி கள் தயாரித்தல், கல், மணல், செங்கல் தொழில் ஆகியவற்றில் பலர் ஈடுபட்டுள்ளனர்.

❊❊❊

# 30. வாணிகம்

ஈரோடு மாவட்டப் பகுதியில் தொன்றுதொட்டுச் சிறப்பான முறையில் வாணிகம் நடைபெற்றுள்ளது.

## வணிகர் ஊர்கள்

வாணிகத்தில் ஈடுபட்ட பண்டைய வணிகர்கள் தங்கிய இடம் நகரம் எனப்பட்டது. அவர்கள் நகரத்தார் எனப்பட்டனர். 'நிகம' என்பது கொடுமணல் அகழாய்வுப் பானையோட்டில் கிடைத்த ஒரு சொல்; நிகம-நிகமம்-நகரம் ஆயிற்று என்பர். சோழநாட்டில் நியமம் என்ற பெயரிலும், பொள்ளாச்சி அருகில் நெகமம் என்ற பெயரிலும் ஊர்கள் உள்ளன.

வணிகர்கள் ஊர் 'புரம்' என்றும் அழைக்கப்பட்டது. ஈரோடு மாவட்டத்தில் தாளுன்றியான விக்கிரமசோழபுரம், தனிச்சயமான இராசவிச்சாதிரபுரம், அடிக்கீழ்த் தளமான இராசராசபுரம், வில்லவன் மாதேவியான விக்கிரம சோழபுரம், கண்ணபுரமான அபிமான சோழ புரம், காரையூரான திரிபுவனமாதேவிபுரம் என்பன போன்ற பல வணிக நகரங்கள் இருந்தன. முத்தூர் நகரத்தார், குன்றத்தூர் நகரத்தார் எனவும் குறிக்கப் பெற்றனர். புரம்-பட்டினம் என்றும் குறிக்கப்பட்டுள்ளது.

சாலிய நகரத்தார், வாணிய நகரத்தார் ஆகியோர் முறையே துணி, எண்ணெய் வணிகர்கள் ஆவர்.

## வணிக இடங்கள்

பொருள் விற்கும் இடங்கள் கடை, அங்காடி, மடிகை, தளம், தாவளம், பெருந்தெரு எனப்பலவாறு அழைக்கப்பட்டன. டணாயக்கன் கோட்டைக் கல்வெட்டில் கடையில் விற்கும் புடவை என்ற தொடர் காணப்படுகிறது. ஈரோட்டு ஆவணம் ஒன்றில் அங்காடி என்னும் பெயர் வருகிறது. மடிகை என்பது நகரத்தின் அங்கமாகும். தளம், அடிக்கீழ்த்தளம், வீரதளம் எனவும் கரையான அடிக்கீழ்த்தளம் எனவும்

குறிக்கப்பெறும். தாராபுரம் வட்டக் கொற்றனூர் கொற்றமங்கலமான மஞ்சிப்புளித்தாவளம் என அழைக்கப்பட்டது. ஈரோட்டில் இராசராசப் பெருந்தெரு, இரட்டருமொழிப் பெருந்தெரு என இரு வணிக மையங்கள் 13ஆம் நூற்றாண்டில் இருந்துள்ளன.

சர்க்கார் பெரியபாளையம் கல்வெட்டில் 18 பட்டினம், 32 வளர்புரம் 64 கடிகைத்தாவளம் என்று கூறப்படுகிறது. பெரிய நகரம் 'மாநகரம்' எனப்பட்டது. சர்க்கார் பெரியபாளையம் கல்வெட்டு கொங்கின் ஒன்பது மாநகரங்கள் என்று கூறுகிறது.

## செட்டி

வணிகர்கள் செட்டி எனவும் அழைக்கப்பட்டனர். இச்சொல் 'சிரேஷ்டி' என்ற வடசொல்லின் திரிபு என்பர். அது தவறு. மணிமேகலையில் 'செட்டு' என்ற சொல் வணிகத்தைக் குறிக்கிறது. செட்டு செய்பவன் 'செட்டி' ஆனார். செட்டிகள் சிலர் உயர்பதவியிலும் இருந்துள்ளனர். பிரமியம் கல்வெட்டில் கோக்கலிமூர்க்க விக்கிரமசோழனின் உயர் அலுவலனாக

''வடகரைத் திருக்கழுமல வளநாட்டு நந்திய நல்லூருடையான் வீரசங்காதச் சுற்றிய தேவன் வானவன் உத்தரமந்திரியான நானா தேசிய நாட்டுச் செட்டி'' என்பவன் குறிக்கப்பட்டுள்ளான்.

திங்களூர்க் கல்வெட்டில் ''அறத்துளான் தேவன் பொன்னனான கணித மாணிக்கச் செட்டி'' என்பவன் குறிக்கப் பெறுகின்றான். காவேரிபுரம் கல்வெட்டில் 'கன்னரதேவ மாயிலட்டி' என்ற வணிகர் 'மாசெட்டி' எனக் குறிக்கப் பெறுகிறான்.

## வணிகக் குழுக்கள்

நானாதேசி, தேசி, திசையாயிரத்து ஐநூற்றுவர், பதினெண் விஷயத்தார்,பெருநிரவியார், அய்யபொழில் எனப் பல்வேறு வகை வணிகரும் ஈரோடு மாவட்டப் பகுதியில் வாணிகம் செய்துள்ளனர். 'தேசி' உள்நாட்டு வணிகர். 'நானாதேசி' வெளிநாடுகளிலும் வாணிகம் செய்வோர் ஆவர். நானாதேசி திசையாயிரத்து ஐநூற்றுவர் குழுக் கல்வெட்டு ஈரோடு மாவட்டம் பழமங்கலத்தில் உள்ளது. சர்க்கார்

பெரியபாளையம் கல்வெட்டில் பதினெண் விஷயத்தார் குறிக்கப்பெறு கின்றனர். வேம்பத்திக் கல்வெட்டில் பல பகுதி பெருநிரவியார் கூடி யுள்ளதாகக் கூறப்படுகிறது. கர்னாடக மாநிலம் 'அய்ஹோளே' என்ற இடத்தில் கூடிய வணிகக் குழுவின் பெயர் தமிழில் ஐம்பொழில், அய்ய பொழில் எனப்படும். மேல்கரை அரைய நாட்டின் கொடுமுடியை அடுத்துள்ள திருக்காடுதுறை ஒரு அய்யபொழில் நகரம் ஆகும்.

வணிகப் பொருட்கள் குழுவினரால் தலைச்சுமையிலும் வண்டி, எருது, கழுதை, குதிரை, யானை இவற்றிலும் கொண்டுவரப்பட்டன. கீரனூர்க் கல்வெட்டில் 'சுங்கம்' குறிக்கப்படுகிறது.

## பலவகை வணிகர்கள்

பிற்கால ஈரோடு மாவட்ட ஆவணங்களில் இருபத்திநான்கு மனைத் தெலுங்கச் செட்டி, எட்டு வகைப் பலர், ஆயிரவர், ஐநூற்றுவர், பன்னிரண்டார், கவறைச் செட்டி, கன்னடச் செட்டி, தெலுங்கச் செட்டி, கொங்கச் செட்டி, கோமுட்டி, சாலியசெட்டி, ஐம்பத்தாறு தேசத்துப் பலர், பட்டு நூல் செட்டி, மூத்தாஞ்செட்டி, ராவுத்தமார், வெள்ளாஞ் செட்டி, வைசியாள் எனப் பலர் குறிக்கப்பெறுகின்றனர். பிற்கால வணிக மையங்கள் 'பேட்டை' என அழைக்கப்பட்டன.

வணிகக் குழுவினரின் அடையாளச் சின்னங்கள் பொறிக்கப் பட்ட சிற்பக்கற்கள் தாராபுரம், எல்காம் வலசு, பழமங்கலம், நல்லூர் போன்ற ஊர்களில் கிடைத்துள்ளன.

## பாதுகாப்பு வீரர்கள்

வணிகர்கள் தங்கள் பாதுகாப்பிற்கு வீரர்களையும் வீரர் குழுக் களையும் வைத்துக் கொண்டிருந்தனர். அவர்கள் எறிவீரர், முனை வீரர், வீரக்கொடியார், கொங்கவாளார், அத்திகோசத்தார் எனப் பல வகைப் பட்டனர். யானைப் படையினரான அத்திகோசத்தார் நல்லூர்க் கல் வெட்டில் குறிக்கப்படுகின்றனர். எறிவீரர் பாதுகாப்பில் உள்ள நகரம் எறிவீரபட்டினம் எனப்பட்டது. பவானி வட்ட வேம்பத்தி,

தாராபுரம் வட்டம் எல்காம் வலசுக் கல்வெட்டுகளில் எறிவீர பட்டினம் குறிக்கப்படுகிறது.

## உள்ளூர் வணிகர்கள்

ஈரோடு மாவட்டப் பகுதி வணிகர்கள் வெளிநாடுகட்கும் சென் றுள்ளனர். கி.பி. 13ஆம் நூற்றாண்டில் சிவகங்கை மாவட்டம் பிரான் மலையில் கூடிய வணிகக் குழுவில் ஈரோடு மாவட்ட கண்ணபுரம், பட்டாலி, கீரனூர், இராசராசபுரம், தலையூர் ஆகிய ஊர்களின் வணிகர் கள் இடம் பெற்றிருந்தனர்.

வெள்ளக்கல் வியாபாரி புண்ணிய தேவன்
கண்ணபுரம் வியாபாரி இலத்தூருடையான் நமசிவாயன்
காங்கயம் வியாபாரி திருநாகீசுவரமுடையான்
பட்டாலி வியாபாரி பெரியான் ஆண்டையான்
கீரனூர் உடையான் கொங்குமண்டல சீலைசெட்டி
கொற்றனூர் உடையான் மண்டல சுவாமி
தலையூர் நன்முத்து வாணிகன்

போன்ற பலர் ஆலயங்களுக்குக் கொடையளித்துள்ளனர். காங்கயம், தாராபுரம் வட்ட வியாபாரிகளே அதிகமாக இருந்துள்ளனர்.

## வெளியூர் வணிகர்கள்

ஈரோடு மாவட்ட பகுதிகளுக்கு வந்த வணிகக் குழுவினர் அல் லாத பிற வெளிநாட்டு வணிகர்களும் ஆலயப்பணிகளில் ஈடுபட் டுள்ளனர்.

''பாண்டி மண்டலத்துக் கல்வாவி நாட்டு அரசநாராயணப் பெருந்தெருவான சுந்தரபாண்டியபுரத்து வியாபாரி நல்லூருடையான் அம்பலத்தேவன் பெருமாள் ஆன குமரபாலன்''

''ஆமூர் நாட்டு வெள்ளூரான கோதண்ட ராமபுரத்து வியாபாரி மிலட்டூருடையான் பெரிய நாயன இனியான்''

''நித்தவிநோத வளநாட்டு கிழார்க் கூற்றத்து மாத்தூரில் இருக்கும் வியாபாரிகளில் மலரியூருடையான் அறிவுடையான் தில்லை நாயகன்''

போன்ற பல வணிகர் பெயர்களை ஈரோட்டு மாவட்டக் கல்வெட்டு களில் காணுகின்றோம்.

டணாயக்கன் கோட்டை, காவேரிபுரம், சர்க்கார் பெரியபாளையம், குண்டடம் போன்ற பல ஊர்க் கோயில்கட்கு வணிகர்கள் தாங்கள் விற்கும் பொருள்களுக்கேற்ப மகமை வரி கொடுத்து வழிபாடும் விழாவும் நடத்த ஏற்பாடு செய்துள்ளனர்.

தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் சர்க்கார் பெரிய பாளையம் வந்த வணிகக் குழுவினர் அவ்வூர்க் கல்வெட்டில் குறிக்கப் பெறுகின்றனர். அவர்கள் தங்கள் விற்பனையில்

மிளகு பொதி 1க்கு பணம் 1 மா
புடவைக்கட்டு 1க்கு பணம் 2 மா
நூல் பொதி 1க்கு பணம் 2 மா
பாக்கு பொதி 1க்கு பணம் ½ மா
பசும்பை 1க்கு பணம் ½ மா
கழுதைமேல் வரும் பண்டங்களுக்கு பணம் ½ மா
அளக்கும் சரக்குகளுக்கு பணம் ½ மா
தானியம் பணம் காணி
நிறுக்கும் பண்டங்களுக்கு பணம் 1 மா
யானை ஒன்றுக்கு பணம் 1 மா
குதிரை ஒன்றுக்கு பணம் ½ மா
சந்தனக்கட்டு 1க்கு பணம் ¼ மா
சே, கிடாக்களுக்கு பணம் 1 மா

குரக்குத்தளி ஆளுடையார் பூசைக்கு கொடையாக அளித்துள்ளனர்.

விற்கும் பொருள்கள் 'ஏறுசாத்து', 'இறங்கு சாத்து' என இரு வகைப் படும். அவை முறையே வெளியூருக்குக் கொண்டு செல்லும் பொருள், வெளியூரிலிருந்து இறக்குமதி செய்யும் பொருள்களைக் குறிக்கும்.

### வணிகர்களும் கோயிலும்

வணிகர்கள் தாங்கள் கொண்டு வந்த பொருள்களில் விற்பனை யானவற்றுக்கே மகமை வரி கொடுத்துள்ளனர். இதை ''சிலவான

பொதிக்கு'' ''சுங்கம் தீரும் பண்டங்களுக்கு'' என்ற தொடர்களால் அறிகின்றோம். குழுக்களில் உள்ள வணிகரிடம் கோயிலைச் சேர்ந் தவர்கள் சென்று அவர்கள் அளிக்க ஒப்புக்கொண்ட மகமை வரியை வசூல் செய்துள்ளனர். இதை

''எல்லா வட்டைகளிலும் வைராகிகளும் சமயக்
கணக்கனும் தண்டிப் புகுந்த முதல்''

என்ற தொடர் விளக்குகிறது.

சில வணிகர்கள் கோயில் திருமடை வளாகத்தில் குடியிருந்துள்ளனர். ''திருமடை வளாகத்தில் தெற்கில் தெருவிலிருக்கும் தோயா வஸ்திரச் செட்டிகளில் பாளைநல்லூர் உடையான் வேதநாயகன் செட்டியாழ் வானான சேரமான் தோழன்'' என்பது சர்க்கார் பெரியபாளையம் கல்வெட்டு.

## பிற்கால வணிகம்

17, 18ஆம் நூற்றாண்டுகளில் ஈரோடு மாவட்டம் பவானி வட்டம் காவேரிபுரம் வழியாகவும் கண்டஹள்ளி வழியாகவும் கர்நாடகப் பகுதிகளுக்குப் பல பொருள்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன. 1800ஆம் ஆண்டு காவேரிபுரத்திலிருந்து இரு மாதங்களில் கொண்டு செல்லப் பட்ட பொருள்களின் மதிப்பை புக்கானன் சுங்கச் சாவடிக் குறிப்பில் பார்த்து எழுதியுள்ளார். அவை

| | | |
|---|---|---|
| புகையிலை | 300 | எருத்துப் பொதி |
| நெய் | 70 | எருத்துப் பொதி |
| துணி | 50 | எருத்துப் பொதி |
| பனைவெல்லம் | 50 | எருத்துப் பொதி |
| விளக்கெண்ணெய் | 10 | எருத்துப் பொதி |
| கசகச | 5 | எருத்துப் பொதி |
| கோணி | 5 | எருத்துப் பொதி |
| பாத்திரங்கள் | 5 | எருத்துப் பொதி ஆகும். |

ஐதர்அலி காலத்தில் (1770) இதைவிட 10 மடங்கு சென்றது என்று அவர் கூறுகிறார். தினமும் 40 முதல் 50 எருத்துப் பொதிகள் சென்றதைத்

தாமே கண்டதாகக் கூறுகிறார் கண்டஹள்ளியிலும் இவையன்றி அரிசியும் உப்பும் சென்றதாகக் கூறுகிறார்.

## இன்றைய வணிகம்

ஈரோடு மாவட்ட வாணிகத்தில் இன்று மிகச் சிறந்து விளங்குகிறது. சென்னைக்கு அடுத்தபடியாக ஏற்றுமதியில் தமிழகத்தில் இரண்டாவது நகரமாக விளங்குகிறது. ஆண்டுதோறும் ஈரோட்டிலிருந்து 10 ஆயிரம் கோடி ரூபாய்க்கு மேல் மதிப்புடைய பல பொருட்கள் ஏற்றுமதியாவதாக அரசு அறிக்கை கூறுகிறது.

## ஜவுளி

கைத்தறி, விசைத்தறியில் உற்பத்தியாகும் பல்வேறுபட்ட துணி வகைகள், உள்ளாடை, ஆயத்த ஆடை, நூல், படுக்கை விரிப்பு, ஜமுக்காளம், கால்மிதிகள், லுங்கி, துண்டுகள் ஏற்றுமதியாகின்றன. திருப்பூரில் தயாராகும் சிறப்புமிக்க பல்வேறு வகையான உள்ளாடை வகைகள் அங்கிருந்து வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டாலும் உள்நாட்டுத் தேவைகளுக்கு ஈரோடு வழியாகவே ஏற்றுமதியாகிறது. ஈரோடு மாவட்டத்தில் உற்பத்தியாகும் ஜவுளி வகைகள் மட்டும் அல்ல. அண்டை மாவட்டங்கள், அண்டை மாநில ரகங்களுக்கும் ஈரோடே விற்பனைச் சந்தையாக விளங்குகிறது. கதர், கதர்பட்டு, கம்பளி, நெசவுப் பொருட்களும் உற்பத்தி செய்யப்பட்டு ஏற்றுமதி செய்யப் படுகின்றன.

## எண்ணெய்

எண்ணெய் வகைகள் ஏற்றுமதியில் ஈரோடு முக்கிய இடத்தைப் பெற்றுள்ளது. எண்ணெய் வித்துக்களும் நேரடியாக ஏற்றுமதி செய்யப்படுகின்றன. தேங்காயெண்ணெய், கடலெண்ணெய், நல்லெண்ணெய் முக்கிய ஏற்றுமதி எண்ணெய்களாகும். பல நிறுவனங்கள் இவைகளைச் சில்லறை விற்பனைக்கும் பல அளவுகளில் பைகளில் அடைத்து அனுப்புகின்றன. காங்கயம், வெள்ளகோயிலிலும் பிற இடங்களிலும் ஏறக்குறைய 100 எண்ணெய் ஆலைகள்

உள்ளன. எஸ்கேஎம் நிறுவனத்தினர் அரிசித் தவிட்டிலிருந்து சமையல் எண்ணெய் (பூர்ணா) தயார் செய்கின்றனர்.

**மஞ்சள்**

தமிழகத்திலேயே மிகப் பெரிய அளவில் மஞ்சள் ஏற்றுமதி ஈரோடு மாவட்டத்திலேயே நடைபெறுகிறது. டிசம்பரில் மஞ்சள் வரத்துத் தொடங்கும். முதலில் மைசூர், கொள்ளேகால், சாம்ராஜ் நகர் உள்ளிட்ட இடங்களிலிருந்து மஞ்சள் வரத் தொடங்கும். ஈரோடு மாவட்ட மஞ்சளோடு நாமக்கல், சேலம், தருமபுரி, திருவண்ணாமலை மஞ்சளும் ஈரோடு வழியாகவே ஏற்றுமதியாகிறது. ஒழுங்குமுறை விற்பனைக்கூடம், ஈரோடு கூட்டுறவு விற்பனை மையம், வெளி மார்க் கெட் மூலம் மஞ்சள் விற்பனையாகிறது. நூற்றுக்கணக்கான தரகு மண்டிகளும் தனிப்பட்டவர் குடோன்களும் உள்ளன. பல இலட்சக் கணக்கான மூட்டைகள் இருப்பு வைக்கப்பட்டு விலையேற்றத்தின் போது விற்கப்படுகின்றன. சிலர் மஞ்சள் தூளையும் பல அளவுள்ள பைகளில் அடைத்து விற்பனைக்கு அனுப்புகின்றனர்.

**பால்**

ஈரோடு மாவட்டத்தில் 755 கூட்டுறவுப் பால் உற்பத்தியாளர் சங்கங்கள் இணைந்து ஒன்றியம் ஒன்றை 7.2.1975 அன்று தொடங் கினர். 1.7.1976இல் பால் உற்பத்தியும் விற்பனையும் தொடங்கியது. 722 சங்கங்கள் மூலம் நாள் ஒன்றுக்கு 210000 லிட்டர் பால் கொள் முதல் செய்யப்படுகிறது. உள்ளூர் விற்பனைக்கு 56000 லிட்டர், சென்னைக்கு 45000 லிட்டர் (கொழுப்புச் சத்துள்ள எருமைப்பால், கொழுப்பு நீங்கிய பால்), பதப்படுத்தப்பட்ட எருமைப்பால் 15000 லிட்டர் நாள்தோறும் அனுப்பப்படுகிறது.

டில்லியில் உள்ள மதர் டைரிக்கு திடப்படுத்தப்பட்ட பால் டேங்கர் வழியாக வாரம் நான்கு முறை 42000 லிட்டர் அனுப்பப்படுகிறது. ஒன்றியத்தில் குச்சி வடிவிலும், தூள்வடிவிலும் கால்நடைத் தீவனம் நாள் ஒன்றுக்கு 35 மெட்ரிக் டன் உற்பத்தி செய்யப்பட்டு விற் பனைக்கு அனுப்பப்படுகிறது. வெண்ணெய், நெய், மோர், கொழுப்பு

நீக்கிய பால்பவுடர், நறுமணப்பால், பால்கோவா, ஐஸ்கிரீம், பேரீச்சம் பழம் கோவாவும் தயாரித்து விற்கப்படுகிறது.

நீலகிரீஸ் நிறுவனத்தினரும் பிற நிறுவனத்தினரும் தனியார் பலரும் பால், தயிர், வெண்ணெய், நெய், மோர் தயாரித்து உள்ளூரிலும் வெளியூரிலும் விற்கின்றனர். ஊத்துக்குளி பால் பொருள்கள் மிகப்புகழ் வாய்ந்தவை.

## முட்டை

நாமக்கல் மாவட்டத்திற்கு அடுத்தபடியாக முட்டைக்கோழி மற்றும் கறிக்கோழி வளர்ப்பில் ஈரோடு மாவட்டம் சிறந்து விளங்குகிறது. ஏறத்தாழ 45 இலட்சம் கோழிகள் வளர்க்கப்படுகின்றன. முட்டைகளும் கறிக்கோழிகளும் வெளியூருக்கும் வெளி மாநிலங்களுக்கும் அனுப்பப்படுகின்றன. எஸ்கேஎம் முட்டைப்பவுடர் நிறுவனம் ஒரு நாளைக்கு 12 லட்சம் முட்டைகளை உடைத்து மஞ்சள் கருப்பவுடர், வெள்ளைக்கருப்பவுடர் மற்றும் இரண்டும் கலந்த பவுடர் ஆகியவற்றை உற்பத்தி செய்து வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிறது. எஸ்.எல்.டி; பி&சி; சௌத் இந்தியா போன்ற பல கோழிப் பண்ணை நிறுவனங்களும் முட்டை மற்றும் கோழி வணிகத்தில் ஈடுபட்டுள்ளன.

சிலர் வாத்து, ஈமுகோழி ஆகியவைகளையும் வளர்த்து முட்டை வணிகத்திலும் ஈடுபட்டுள்ளனர்.

## உணவுசார் பொருட்கள்

சக்தி மசாலா நிறுவனம் 50க்கும் மேற்பட்ட மசாலா பொடிகளையும் 12 வகையான ஊறுகாய்களையும் தேன், மாவு வகைகள் அப்பளம், வற்றல் முதலியவற்றைத் தயாரித்து உலகம் முழுவதும் அனுப்புகிறது. மில்கா, நீலகிரீஸ், அமுதம், கண்ணன், எஸ்ஸார் போன்ற பல நிறுவனங்கள் பிஸ்கட், ரொட்டி வகைகள் பலவற்றை உற்பத்தி செய்து விற்பனையில் ஈடுபட்டுள்ளது. லாலா மசாலா நிறுவனத்தினர் சென்னையிலிருந்து தங்கள் தொழிற்சாலையை ஈரோடு மாவட்டத்திற்கு மாற்றியுள்ளனர்.

## தோல்

உள்ளூர்ச்சந்தைகள் மூலமாகவும் வெளி மாவட்டங்கள் மற்றும் பிற மாநிலங்களிலிருந்தும் உப்புத் தோல்கள் எனப்படும் கச்சாத் தோல்களைக் கொள்முதல் செய்து, கலர் தோலாகவும் குரோம் தோலாக வும் பதப்படுத்தி தோல் பொருள் செய்ய சென்னை, ஆம்பூர், வாணி யம்பாடி ஆகிய இடங்களுக்கும் வடமாநிலங்களுக்கும் பிறமாநிலங்களுக் கும் அனுப்புகின்றனர். 40 தோல் பதனிடும் தொழிற்சாலைகள் அக்கிர காரம் பகுதியில் உள்ளன. ஆண்டுக்கு 700 கோடி ரூபாய்க்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது. தோல் பொருட்களும் தயார் செய்யப்பட்டு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இவை ரஷ்யா, ஆஸ்திரேலியா, இங்கிலாந்து, சீனா, கொரியா, இத்தாலி, ஜெர்மனி ஆகிய நாடுகளுக்கு அனுப்பப்படுகின்றன.

## சர்க்கரை

1964இல் தொடங்கப்பட்ட ஆப்பக்கூடல் சக்தி சர்க்கரை ஆலையும் 1986இல் தொடங்கப்பட்ட பண்ணாரியம்மன் சர்க்கரை ஆலையும் முறையே 7500 டன், 2500 டன் கரும்பை நாள்தோறும் அறவை செய் கிறது. இங்கு எரிசாராயம், மின்சாரம், எத்தனால் ஆகியவை உற்பத்தி செய்யப்படுகின்றன. இரு ஆலைகளும் தங்கள் பயன்பாட்டிற்குப் போக மீதி மின்சாரத்தை தமிழக மின் வாரியத்திற்கு அளிக்கின்றன. மொடக்குறிச்சி அருகே 120 கோடியில் இரண்டாவது சக்தி சர்க்கரை ஆலை ஒன்று உருவாகி வருகிறது. பண்ணாரி சர்க்கரை ஆலை ஆமணக்கு மூலம் பயோடீசல் உற்பத்தியை அண்மையில் தொடங்கியுள்ளது.

பல விவசாயிகள், பிறர் தனிப்பட்ட முறையில் கரும்புச் சர்க்கரை, வெல்லம், அச்சு வெல்லம், உருண்டை வெல்லம், வெல்லத்தூள் ஆகியவைகளை உற்பத்தி செய்கின்றனர். ஒழுங்கு முறை விற்பனைக் கூடங்களிலும் கவுந்தப்பாடியில் பல குடோன் வசதியோடு இயங்கும் சர்க்கரைச் சந்தையிலும் இவைகளை விற்கின்றனர்.

குன்னத்தூரிலும் பெருந்துறையிலும் பதனீர் மூலம் கருப்பட்டி உற்பத்தி செய்யப்படுகிறது. ஏற்றுமதி செய்யப்படும் கருப்பட்டி

ஸ்பிரிட் செய்ய, சாக்லெட் தயாரிக்க மற்றும் உணவுப்பொருளாகப் பயன்படுகிறது. புகழ்பெற்ற பாரி கம்பெனி கூட குன்னத்தூர் கருப் பட்டியை கொள்முதல் செய்கிறது.

## கல் விற்பனை

உயர்ந்த கருங்கற்களையும், பசுமை நிறம் படர்ந்த கற்களையும் மெருகூட்டி வெளிநாடுகட்குப் (ஐரோப்பாகண்டம், அமெரிக்கா, ஜப்பான்) கட்டிடங்களுக்கும் நினைவுச்சின்னங்களுக்கும் பயன்படுத்தும் அழகுக்கல் உற்பத்தியிலும் ஏற்றுமதியிலும் 20 தொழிற்சாலைகள் ஈரோடு மாவட்டத்தில் இயங்கி வருகின்றன. தமிழ்நாட்டில் திண்டி வனம் பகுதிகளிலிருந்தும் கர்னாடகா, ஒரிசா, ஆந்திரா, மத்தியப் பிரதேசம் போன்ற பகுதிகளிலிருந்து இங்கு கற்கள் வரவழைக்கப் பட்டு மெருகூட்டி அனுப்பப் பெறுகின்றன.

கட்டிடங்களுக்குத் தேவையான கற்களையும் ஜல்லி வகை களையும் உள்ளூர்க் கற்களைக் கொண்டு தயார் செய்கின்றனர். ஊத்துக்குளி வட்டாரக் கற்கள் மிகவும் சிறந்தவை.

கருங்கற்களையும், வெண்மை படர்ந்த கருங்கற்களையும் மாவு அரைக்கும் இயந்திரங்களுக்குப் பொருத்தி இயந்திரம் தயாரிக்கும் தொழிற்சாலைகள் 20 உள்ளன. சௌபாக்யா, அமிர்தா, சுகுணா போன்றவை நாடு தழுவிய விற்பனையைப் பெற்றுள்ளது. பழைய முறையில் கையால் இயக்கும் அம்மி, ஆட்டுக்கற்களும் சிறுபான்மை செய்யப்படுகின்றன.

அழகான கட்டிடங்களுக்கும் தொழிற்சாலைகட்கும் பயன்படுத்தும் சலவைக் கற்களை (Marble) மத்தியப் பிரதேசம், உதய்ப்பூர், ராஜஸ் தான், பரோடா, ராஜ்நகர், மகரானா போன்ற பிற மாநிலங்களிலிருந்தும் இத்தாலியிலிருந்தும் வரவழைத்து விற்பனை செய்யும் நிறுவனங்கள் 20 இம்மாவட்டத்தில் உள்ளன. பயிருக்கு உரமும், கால்நடைகட்குத் தீவனமும் பலரால் தயாரிக்கப்படுகிறது.

❊❊❊

# 31. கல்வி நிலை

பிரிட்டிஷ் பாராளுமன்றம் 1813ஆம் ஆண்டு இந்தியாவிற்குக் கல்வி ஊக்குவிப்புத் தொகையாக 1 இலட்சம் ரூபாய் அளித்தது. அதன் விளைவாக 1822ஆம் ஆண்டு சர் தாமஸ் மன்றோ மாநில அளவில் கல்வி பற்றிய கணக்கெடுப்பு நடத்தினார். அன்று கொள்ளேகால், கரூர் உள்ளிட்ட ஒருங்கிணைந்த கோவை மாவட்ட மக்கள் தொகை 6,38,199 ஆகும்.

மாவட்டம் முழுவதும் உள்ள 936 கிராமப் பள்ளிகளில் 8930 மாணவ, மாணவிகள் கல்வி கற்றனர். மக்கள் தொகையில் 1.39% பேரே கல்வி கற்றனர். 8930 பேரில் 1642 பேர் பிராமண மாணவர்கள், 6976 பேர் பிராமணர் அல்லாதவர்கள் 312 பேர் முஸ்லிம்கள். பள்ளிக்குச் சென்ற மாணவிகள் மாவட்டம் முழுவதும் 82 பேரேயாவர். அவர்களில் பெரும்பாலோர் கைக்கோளர் இனத்தைச் சேர்ந்தவர்கள். கணக்கும், எழுதப்படிக்க மொழியும் மட்டுமே கற்பிக்கப்பட்டன (எண்ணும், எழுத்தும்).

ஐந்து வயது முதல் 13 அல்லது 14 வயது வரை மாணவர்கள் கற்றனர். பெரும்பாலும் இராமாயணம், பாரதம், புராணங்கள், சமய நூல்கள், பஞ்ச தந்திரக் கதைகள் கற்பிக்கப்பட்டன. காலை 6 மணி முதல் 10 மணி வரையும் பிற்பகல் 2 மணி முதல் 8 மணி வரையும வகுப்புகள் நடைபெற்றன. ஆசிரியர்களுக்கு வருடம் 3 ரூபாய் முதல் 14 ரூபாய் வரை இடத்திற்கு ஏற்றவாறு கட்டணம் வசூலிக்கப்பட்டது. அக்கிரகாரங்களை அடுத்து வேதபாடசாலை இருந்தது. 15 வயது தொடங்கி அங்கு பிராமண மாணவர்கள் தத்துவம், சட்டம், வேதம், வானவியல், வடமொழி கற்றனர்.

முக்கியப் பண்டிகை நாட்களும், பவுர்ணமி, அமாவாசையும் அதற்கு அடுத்த நாளும் விடுமுறை நாட்கள். தசராவின் போதும் பிற பண்டிகை நாட்களிலும் ஆசிரியர் பெற்றோரிடமிருந்து அன்பளிப்புகள் பெறுவர். 1822இல் மன்றோ கணக்கெடுப்பிற்குப் பின் கோவை மாவட்டத்தில் ஒரு கலெக்டர் பள்ளியும் இரு தாசில்தார் பள்ளிகளும்

ஏற்பட்டன. கலெக்டர் பள்ளியில் பயிற்சி பெற்ற ஆசிரியர் மாதம் 15ரூ சம்பளத்தில் பணியாற்றினார். ஆங்கிலமும் வட்டார மொழியும் கற்பிக் கப்பட்டன. தாசில்தார் பள்ளியில் மாதம் 9ரூ சம்பளத்தில் பயிற்சி பெறாத உள்ளூர் ஆசிரியர் பணியாற்றினர். அவர்கள் 'டியூசன்' எடுத்து வருமானம் பெறலாம். கலெக்டர் பள்ளி கோயமுத்தூரிலும் தாசில்தார் பள்ளி கோயமுத்தூரிலும் சத்தியமங்கலத்திலும் ஏற்பட்டது. கோவை மாவட்டம் தவிர பிற மாவட்டங்களில் இத்திட்டம் தோல்வியடைந்தது.

நிர்வாகப் பணிக்கு ஆட்களின் தேவை கருதியும் ஆங்கிலம், ஆங்கில இலக்கியம் அறிவியல் ஆகியவைகளைப் பரப்ப வேண்டியும் கிழக்கிந்தியக் கும்பினி இயக்குநர்கள் 1830ஆம் ஆண்டு பொது மக்களுக்கு விரிவாகக் கல்வி தரத் தீர்மானித்தனர். மெக்காலே பிரபு வகுத்த கல்வித்திட்டம் வில்லியம் பெண்டிங் பிரபுவால் 7.3.1835இல் ஏற்றுக் கொள்ளப்பட்டது. கலெக்டர், தாசில்தார் பள்ளிகள் நிறுத்தப் பட்டன.

சென்னைப் பல்கலைக்கழகம் "உள்நாட்டுக் கல்விக் குழுவை" 1840ல் எல்பின்ஸ்டன் பிரபு தலைமையில் அமைத்தது. இக் குழுவின் அறிவுரைப்படி, 1841ல் இ.பி.பவல் என்பவரைத் தலைவராகக் கொண்டு முதல் பள்ளி தொடங்கப்பட்டது. 1854இல் வெகு ஜனக் கல்வியளிக்க கம்பெனி முடிவு செய்தது. 1855ஆம் ஆண்டு மாநிலக் கல்லூரியில் கல்வித்துறை ஏற்படுத்தப்பட்டு ஒரு கல்வி இயக்குநர் 4 கல்வி ஆய்வாளர்கள், 20 உதவி ஆய்வாளர்கள், 20 துணை உதவி ஆய்வாளர் அல்லது தாலுக்கா மேற்பார்வையாளர் நியமிக்கப்பட்டனர்.

இதற்கு முன்பே கோவை கலெக்டர் இ.பி.தாமஸ், ஐரோப்பியர், இந்தியர் உதவியோடு கோவையில் ஒரு பள்ளி தொடங்கியிருந்தார். 1858இல் சேயூரிலும் 1859 ஏப்ரலில் பொதுமக்கள் அளித்த 1050 ரூபாய் நன்கொடையைக் கொண்டு பொள்ளாச்சியிலும் 1859 ஆகஸ்டு மாதம் உடுமலைப்பேட்டையிலும் தாராபுரத்திலும் 1860இல் ஈரோடு, ஆனைமலை சத்தியமங்கலத்திலும் தாலுக்கா பள்ளிகள் தொடங்கப் பட்டன. 1861இல் சேயூர் பள்ளி மூடப்பட்டது. மாணவர் வருகைக் குறைவால் 1864இல் ஆனைமலைப் பள்ளியும் மூடப்பட்டது. கிறித் துவ மிஷனரிகளும் மாவட்டத்தில் பல பள்ளிகளைத் தொடங்கினர்.

1871ஆம் அண்டு செப்டம்பர் மாதம் 16ஆம் தேதி ஈரோடு நகராட்சி தொடங்கப்பட்டது. 1876இல் முதன்முதலில் டவுன் ஆரம்பப் பள்ளியை நகராட்சி தொடங்கியது. சில தனியார் பள்ளிகளையும் நகராட்சி ஏற்றது. 1887இல் தாசப்பையர், அண்ணாசாமி அய்யங்கார் இருவரும் ''டவுன் உயர்நிலைப்பள்ளியைத்'' தொடங்கினர். பின்னர் நடத்த முடியாமல் இலண்டன் மிஷனுக்கு விற்றுவிட்டனர். தந்தை பெரியாரின் தந்தை ஈ.த. வெங்கிடநாயக்கரும், கே.ஏ.ஷேக் தாவூத் அவர்களின் தந்தை அலாவுதீன் சாகிப்பும் பள்ளியை மீட்டுப் பொது மக்கள் உதவியுடன் ''மகாஜன பள்ளிக்குழு''வின் மூலம் ''மகாசன உயர்நிலைப்பள்ளி'' என்ற பெயரில் 1899இல் பள்ளியை நிறுவினர். இதே கல்விக்குழு 12.7.1954இல் மகாசனக்கல்லூரியை 12 ஏக்கர் பரப்பளவில் தொடங்கியது. இதுவே மாவட்டத்தின் முதல் கலைக் கல்லூரியாகும். பின் இக்கல்லூரி ''சிக்கய்ய நாயக்கர் மகாசனக் கல்லூரி' என்றும், பின்னர் 'சிக்கய்ய நாயக்கர் கல்லூரி' என்றும் பெயர் மாற்றம் பெற்றது.

1898இல் விக்டோரியா மகாராணியின் வைரவிழா நினைவாக கோபிசெட்டிபாளையம் வைரவிழா பள்ளி தொடங்கப்பட்டது. 1899 இல் பவானியில் பள்ளியை சி.சி.பிளாகைன் என்ற ஆங்கிலேயர் தொடங்கினார். பெண்களுக்காக முதன் முதலில் மாவட்டத்தில் ஏற்பட்ட உயர் நிலைப்பள்ளி ஈரோடு கலைமகள் கல்வி நிலையம் ஆகும்.

கோயமுத்தூரில் ஜி.டி.நாயுடு தன் போக்குவரத்து நிறுவனத்தில் பல மாணவர்கட்கு முழுநேரப் பயிற்சி கொடுத்தார். இரவில் கூடப் பயிற்சி தரப்பட்டது. அதே போல 1920 பி.எஸ்.ஜி நிறுவனம் மாணவர் கட்குத் தம் தொழிற்சாலையில் பயிற்சி அளித்தது. அந்நிறுவனம் 9.11.1927இல் தச்சு, இயந்திர வேலை, மின்சார வேலை, அச்சுப் பயிற்சிப் பள்ளியைத் தொடங்கியது. 1939இல் LEE, LME, LPT பட்டயப்படிப்புத் தொடங்கப்பட்டது. 1944ல் நெசவுத்தொழில் பயிற்சி யில் LTM பட்டயப்படிப்புத் தொடங்கப்பட்டது.

பி.எஸ்.ஜி. நிறுவனத்தில் ஜி.டி.நாயுடு விரும்பிய சில பயிற்சி வகுப்புகள் தொடங்கப்பெறவில்லை. அவர் பரிந்துரைத்த சில மாணவர்கட்கும் இடம் கிடைக்கவில்லை. தொழில் பயிற்சிக் கல்லூரி

தொடங்க இரண்டு லட்சம் ரூபாயும் (1945ல்) இடமும் கொடுக்க முன்வந்தார். "காலேஜ் ஆஃப் டெக்னாலஜி" என்று பெயர் வைக்கப்பட்டது. ஜி.டி. நாயுடு பெயர் வைக்கப் பலரும் விரும்பினர். ஆனால் கல்லூரி தொடங்குவதற்கு உதவிய மாவட்ட ஆட்சியர் 'ஆர்தர் ஹோப்' என்பவர் பெயரால் 'ஆர்தர் ஹோப் காலேஜ் ஆஃப் டெக்னாலஜி" என்று பெயர் வைக்கப்பட்டது. மக்கள் "ஹோப் காலேஜ்" என்றே அழைத்தனர்.

1951ல் பி.எஸ்.ஜி நிறுவனம் பொறியியல் கல்லூரியைத் தொடங்கியது. 1956ல் சி.ஐ.டி தொடங்கப்பட்டது. 1961ஆம் ஆண்டு பவானி சாகரில் சேலம், கோயமுத்தூர் (ஈரோடு உட்பட) நீலகிரி மாவட்ட மாணவர்கட்காக வேளாண்மைப் பயிற்சிப்பள்ளி தொடங்கப் பட்டது.

கடந்த 25 ஆண்டுகளில் ஈரோடு மாவட்டத்தில் எல்லாத்துறைக் கல்வியும் கற்பிக்கப் பல்வேறு உயர்கல்வி நிறுவனங்கள் தொடங்கப் பட்டுள்ளன. பல பொறியியல் கல்லூரிகளும், கலைக்கல்லூரிகளும் தொடங்கப்பட்டுள்ளன.

### ஈரோடு மாவட்டத்தில் உள்ள பொறியியற் கல்லூரிகள்

1) ஈரோடு செங்குந்தர் பொறியியற் கல்லூரி, துடுப்பதி
2) ஐ.ஆர்.டி.டி. (Institute of Road and Transport Technology) பொறியியற் கல்லூரி, சித்தோடு.
3) கொங்கு பொறியியற் கல்லூரி, பெருந்துறை.
4) சசூரி பொறியியற் கல்லூரி, விசயமங்கலம்.
5) எம்.பி. நாச்சிமுத்து - எம்.ஜெகநாதன் பொறியியற் கல்லூரி, சென்னிமலை.
6) நந்தா பொறியியற் கல்லூரி, பெருந்துறை.
7) பண்ணாரியம்மன் பொறியியற் கல்லூரி, சத்தியமங்கலம்.
8) வேளாளர் பொறியியற் கல்லூரி, திண்டல்.

### ஈரோடு மாவட்டத்தில் உள்ள கலை, அறிவியல் கல்லூரிகள்

1) அம்மன் கலை அறிவியல் கல்லூரி, சித்தோடு
2) அய்யன் திருவள்ளுவர் கலை அறிவியல் கல்லூரி, பு. புளியம்பட்டி

3) ஆர்ஏஎன்எம். கலை அறிவியல் கல்லூரி, ரங்கம்பாளையம்
4) ஈரோடு கலைக்கல்லூரி, ரங்கம்பாளையம்
5) கருப்பண்ணன் - மாரியப்பன் கல்லூரி, முத்தூர்
6) காமதேனு கலை அறிவியல் கல்லூரி, சத்தியமங்கலம்
7) கொங்கு கலை அறிவியல் கல்லூரி, நஞ்சணாபுரம்
8) கோபி கலை அறிவியல் கல்லூரி, கோபிசெட்டிபாளையம்
9) சிக்கய்ய நாயக்கர் கல்லூரி, வீரப்பன் சத்திரம், ஈரோடு
10) சி.எஸ்.ஐ. கலைக் கல்லூரி, ஈரோடு
11) சேரன் கலை அறிவியல் கல்லூரி, திட்டுப்பாறை
12) சேரன் மகளிர் கல்லூரி, காங்கயம்
13) நந்தா கலை அறிவியல் கல்லூரி, பெருந்துறை
14) நவரசம் கலை அறிவியல் மகளிர் கல்லூரி, அறச்சலூர்
15) பாரதிதாசன் கலை அறிவியல் கல்லூரி, சித்தோடு
16) பி.கே.ஆர். மகளிர் கல்லூரி, கோபிசெட்டிபாளையம்
17) பிஷப் தார்ப் கல்லூரி, தாராபுரம்
18) மகாராஜா மகளிர் கல்லூரி, பெருந்துறை
19) மகாராணி கலை அறிவியல் கல்லூரி, தாராபுரம்
20) வாசவி கல்லூரி, பவானி
21) வெள்ளகோயில் கலை அறிவியல் கல்லூரி, வெள்ளகோயில்
22) வேளாளர் மகளிர் கல்லூரி, திண்டல்.

பெருந்துறையில் ஐ.ஆர்.டி.டி. மருத்துவக்கல்லூரி உள்ளது.

ஈரோடு மாவட்டத்தில் மேல்நிலைப்பள்ளிகள், உயர்நிலைப் பள்ளிகள், மெட்ரிக் பள்ளிகள் 350க்கும் மேல் உள்ளன. தொழிற் பயிற்சிக் கல்லூரிகள், தொழிற்பயிற்சி பள்ளிகள், செவிலியர் பயிற்சிக் கல்லூரி, மருந்தாளுநர் கல்லூரி, பல்துறை மருத்துவக்கல்லூரி, ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி என எல்லாத்துறைக் கல்லூரிகளும் குறை வற நிறைய உள்ளன. அவை பாரதியார் கூறுவது போல ''பயிற்றிப் பல கல்வி'' தருகின்றன.

❊❊❊

# 32. தமிழ் வளர்ச்சி

சங்ககாலம் முதல் இருபதாம் நூற்றாண்டு வரை தமிழ் வளர்ச்சியில் ஈரோடு மாவட்டம் தன் மிகச் சிறந்த பங்கைச் செலுத்தியுள்ளது.

## சங்க காலம்

பெருந்தலைச் சாத்தனார், அந்தியிளங்கீரனார், பொன்முடியார், காக்கைப்பாடினியார், ஓரோடகத்துக் கந்தரத்தனார் போன்ற சங்கப் புலவர்கள் ஈரோடு மாவட்டத்துப் பெருந்தலையூர், அந்தியூர், பொம் முடி, காகம், உலகடம் ஆகிய ஊரைச் சேர்ந்தவர்கள் என ஆய்வாளர் கூறுவர்.

## தேவாரம்

வெஞ்சமாங்கூடல், பாண்டிக்கொடுமுடி, கரூர், அவிநாசி, பவானி, திருமுருகன்பூண்டி, திருச்செங்கோடு முதலிய ஏழு கொங்கு நாட்டு தேவாரப்பாடல் பெற்ற தலங்களில் பாண்டிக் கொடுமுடியும் பவானியும் ஈரோடு மாவட்டத்தில் உள்ளன. திருஞானசம்பந்தர் பவானிக்கும், அவரும் திருநாவுக்கரசர், சுந்தரர் முதலிய மூவரும் பாண்டிக் கொடுமுடிக்கும் தேவாரப் பதிகங்கள் பாடியுள்ளனர். தாராபுரம், பெருந்துறை, பூந்துறை போன்ற தேவார வைப்புத் தலங்களும் இம் மாவட்டத்தில் உள்ளன.

## திருவாசகம்

மாணிக்க வாசகர் தம் அகவல் பாடலில் ''அரிய பொருளே அவிநாசியப்பா பாண்டி வெள்ளமே'' என்று பாடிப்பரவியுள்ளார். 'பாண்டி வெள்ளமே' என்பது கொடுமுடியைக் குறிக்கும். மாணிக்க வாசகர் பெயரில் 'நிலைமண்டிய ஆசிரியப்பா' என்ற சிற்றிலக்கியம் பாடப்பட்டுள்ளது. மாணிக்கவாசகர் வழியினர் தலைமை ஏற்கும் கூனம் பட்டித் திருமடம் இம்மாவட்டத்தில் உள்ளது. பல இலக்கியங்கள் மாணிக்கவாசகர் திருமடத்திற்கு உள்ளன.

## திவ்வியப்பிரபந்தம்

பெரியாழ்வார் தம் பாசுரம் ஒன்றில் ''கொங்கும் குடந்தையும் கோட்டியூரும் பேரும்'' என்று பாடியுள்ளார். இதனை 'கொங்குக் குடந்தை' என்று பொருள் கொண்டு 'நீர் பொங்கி வழியும்படியான குடந்தை' என்று பொருள் கூறுவர். பாடலில் 'கொங்கும்' என்றே யுள்ளது. அப்பாடலில் கும்பகோணம், திருக்கோட்டியூர், தென்திருப் பேரை என்பன ஊர்கள். அதுபோல கொங்கு ஒரு ஊர். அவ்வூர் இன்று தாராபுர வட்டத்தில் உள்ளது. கொங்கூர் என அழைக்கப்படுகிறது.

வேதாந்த தேசிகர் சத்தியமங்கலத்தில் தங்கியிருந்தபோது 'பரமதபங்கம்' என்ற நூலைப்பாடி முற்றுப்பெறச் செய்தார்.

## சமணர்கள் தமிழ்ப்பணி

விசயமங்கலத்தில் வாழ்ந்த சமணர்கள் அங்கு தமிழ்ச்சங்கம் வைத்துப் பல நூற்றாண்டுகள் தொடர்ச்சியாகத் தமிழ்ப் பணி புரிந்தனர்.

பெருங்கதையை விசயமங்கலம் கொங்கு வேளிரும், 'சீவக சிந்தாமணியை' சத்தியவாக்கன் என்ற கங்க மன்னனால் (பொய்யா மொழி) ஆதரிக்கப்பட்டு பெருவஞ்சியாகிய தாராபுரத்தில் வாழ்ந்த திருத்தக்க தேவரும் இயற்றினர்.

எழுத்து, சொல் இலக்கணம் கூறும் நன்னூலை சீயகங்கன் கேட்டுக் கொள்ள இயற்றிய பவணந்தி முனிவர் பெருந்துறை வட்டம் சீனா புரத்தைச் சேர்ந்தவர். நேமிநாதம் என்ற இலக்கண நூலையும் வச்சணந்தி மாலை என்ற பாட்டியல் நூலையும் குணவீர பண்டிதர் விசயமங்கலம் தமிழ்ச்சங்கத்தில் அரங்கேற்றினார். சிலப்பதிகாரத் திற்கு அருஞ்சொற்பொருள் எழுதிய அரும்பத உரைகாரரும் 'சிலப்பதி காரத்திற்கு உரை இயற்றிய அடியார்க்கு நல்லாரும் விசயமங்கலத் தையும்' அருகில் உள்ள நிரம்பையையும் சேர்ந்தவர்கள். நன்னூலுக்கு முதல் உரை எழுதிய 'மயிலை நாதர்' ஈரோட்டைச் சேர்ந்தவர்.

கொங்கு நாட்டின் பன்முக மாட்சியை விளக்கும் வரலாற்று நூலாகிய கொங்குமண்டல சதகம் பாடிய ஜினேந்திரன் என்ற கார் மேகக் கவிஞர் விசயமங்கலம் சமணர்.

## இஸ்லாமியப் புலவர்கள்

பவானி வட்டம் ஜம்பையில் வாழ்ந்த ஆசுகவி காசிம் சாயபு, அரிச்சந்திர நாடகக் கீர்த்தனை, திருநீலகண்டர் நாடகக் கீர்த்தனை, பவானியாற்றுப் பெரு வெள்ளம் பற்றி 'தங்கச்சிந்து நொண்டிச் சிந்து' ஆகிய நூல்களையும் இயற்றியுள்ளார். சத்தியமங்கலம் பக்கீர் சாயபுவும் காங்கயம் அய்யாவு ராவுத்தரும் பல தனிப்பாடல்கள் பாடியுள்ளனர்.

## திருப்புகழ்

அருணகிரி நாதர் ஈரோடு மாவட்டத்தில் கதித்தமலை, கனக கிரி, கொங்கணகிரி, சிவமலை, சென்னிமலை ஆகிய மலைகளிலும், காங்கயம், கீரனூர், கொடுமுடி, பட்டாலி, பவானி, விசயமங்கலம் ஆகிய ஊர்க் கோயில்களில் முருகப்பெருமானையும் வழிபட்டுப் பாடல்கள் பாடியுள்ளார்.

''கொங்கிலுயர் பெற்றுவளர் தென்கரையில்
அப்பர் அருள் கொங்கணகிரி''

என்று ஊதியூர் மலையைக் குறிப்பிட்டுப் பாடியுள்ளார்.

''நாட்டில் அருணகிரி நாதர் திருப்புகழ் சொல்
பாட்டில் உவந்து படிக்காசு அளித்தபிரான்''

என்று சென்னிமலையாண்டவர் காதல் பாடிய அங்கண்ண செட்டியார் குறிப்பிடுவார்.

## நிகண்டுகள்

காங்கயம் வட்டக் காடையூர்க் காங்கேயன் 'உரிச்சொல் நிகண்டு' இயற்றியுள்ளார். 'காங்கேயன் உரிச்சொல் நிகண்டு' என்றே அந்நூல் பெயர் பெற்றது. காங்கேயத்தில் வாழ்ந்த பள்ளித் தணிக்கையாளர் சிவன் பிள்ளை என்பவர் நூறாண்டுகளுக்கு முன்பே 'ஆசிரிய நிகண்டு' அச்சிட்டார்.

## மடவளாகம் லட்சுமண பாரதி (1769-1859)

காங்கயம் வட்டம் பாப்பினி கிராமத்தைச் சேர்ந்த லட்சுமண பாரதி சிவமலைக் குறவஞ்சி, மடவளாகம் தலபுராணம் போன்ற பல நூல்களையும் பல தனிப்பாடல்களையும் பாடியுள்ளார்.

## காங்கயம் சேசாசலக் கவிராயர் [19,20ஆம் நூற்றாண்டு]

காங்கயத்தில் வாழ்ந்த சேசாசலக் கவிராயர் 'அட்டாவதானி' என்று புகழ் பெற்றவர். சிவகிரி மயில் விடு தூது பாடியுள்ளார். பல தனிப்பாடல்களும் பாடியுள்ளார்.

## பழைய கோட்டைப் புலவர்கள்

பழைய கோட்டை சர்க்கரை மன்றாடியார் மரபினர் பற்றி இரட்டைப்புலவர்கள், மாம்பழக் கவிச்சிங்க நாவலர், கருங்குமரப் புலவர், ஜம்புலிங்க ஓதுவார், சிவகிரி பண்டிதர் முதலிய 45க்கும் மேற்பட்ட புலவர்கள் பாடல்கள் பாடியுள்ளனர். நான்மணி மாலை, காதல், பதிகம், நவகம், சிந்து, சதகம் போன்ற பல சிற்றிலக்கியங்கள் உள்ளன. அம் மரபில் வந்த கொற்றவேல் சர்க்கரையாரும், வள்ளியாத்தாள் என்ற பெண்பாலரும் கவி இயற்றும் ஆற்றல் உள்ளவர்கள். சிவமலை, நத்தக்காரையூர் செயங்கொண்டீசர் மீது பல சிறு பிரபந்தங்கள் பாடியுள்ளனர்.

## வெள்ளோடு சாமிநாதப் புலவர் [19ஆம் நூற்றாண்டு]

பெருந்துறை வட்டம் வெள்ளோடு கிராமத்தைச் சேர்ந்த புலவன் பாளையத்தில் வாழ்ந்த குந்தாணி சாமிநாதப்புலவர் சென்னிமலையாண்டவர் பிள்ளைத்தமிழ், கொன்றைவேந்தன் வெண்பா, நல்லணவேள் காதல், பெரியண்ணன் குறவஞ்சி முதலிய பல இலக்கியங்கள் பாடியுள்ளார். அவர் வழி வந்த இரத்தினாசலப் புலவர், குமாரசாமிப் புலவர் போன்ற பலர் வெள்ளோட்டில் வாழ்ந்துள்ளனர்.

## தி.அ.முத்துசாமிக்கோனார் [1858-1944]

திருச்செங்கோடு தி.அ. முத்துசாமிக்கோனார் பதிப்பித்த இலக்கியங்களில் நல்லதம்பிச்சர்க்கரை மன்றாடியார் காதல், சிவமலைப் புராணம், சிவமலைக் குறவஞ்சி, பூந்துறைப் புராணம், கொங்கு மண்டல சதகம், பாம்பண்ண கவுண்டன் குறவஞ்சி ஆகியவை ஈரோடு மாவட்ட இலக்கியங்களாகும்.

## பாலபாரதி முத்துசாமி ஐயர் (19ஆம் நூற்றாண்டு)

பவானியில் வாழ்ந்த பரம்பரைப் புலவர் மரபினர். பாம்பண கவுண்டர் குறவஞ்சி, சிவகிரி தண்டிகைக் காளியண்ணன் குறவஞ்சி, பவானி விறலி விடு தூது போன்ற இலக்கியங்களை இயற்றியுள்ளார். பவானி, சென்னிமலை, அவிநாசி, காசி முதலிய தலங்கள் பற்றிய பல இசைப்பாடல்கள் பாடியுள்ளார்.

## வே.ரா.தெய்வசிகாமணிக்கவுண்டர் (1903-1972)

எழுமாத்தூர் வேலம்பாளையத்தைச் சேர்ந்தவர். வாழ்நாள் மழுவதும் ஓலைச் சுவடிகள் தேடித்தொகுத்துப் பாதுகாத்தவர். தேவி மான்மியம், சித்திர மடல், மல்லைக்கோவை, திருச்செங்கோட்டுப் பிள்ளைத் தமிழ், வாலசுந்தரக்கவிஞரின் கொங்கு மண்டல சதகம், மேழி விளக்கம், பரத சங்கிரகம் பதிப்பித்தவர். அழிந்து போனதாகக் கருதப்பட்ட சங்ககால இசை நூல் பஞ்சமரபைக் கண்டுபிடித்து பத்மபூஷன் அருட்செல்வர் நா. மகாலிங்கம் அவர்கள் உதவியால் பதிப்பித்தார்.

## ம.ப.பெரியசாமித்தூரன் (1908-1987)

மொடக்குறிச்சிக் கிராமத்தைச் சேர்ந்த மஞ்சக்காட்டு வலசைச் சேர்ந்தவர். இந்திய மொழிகளிலேயே முதன்முதல் தமிழுக்குக் கலைக் களஞ்சியம் தொகுத்து அளித்தவர். 'குழந்தை உள்ளம்' போன்ற 10 உளவியல் நூல்களையும் 'நல்ல நல்ல பாட்டு' முதலிய 16 குழந்தைப் பாடல் நூல்களையும் எழுதியுள்ளார். 'பாரதி தமிழ்' தொகுத்த இவர் பாரதியார் பற்றி 10 நூல்கள் எழுதியுள்ளார். பல கதை, நாடக நூல் களையும் 'இசைமணி மஞ்சரி' போன்ற இசைத்தமிழ் நூல்களையும் எழுதியவர். 'பத்மபூஷன்' விருது பெற்றவர்.

## புலவர் அ.மு. குழந்தை (1906-1972)

அறச்சலூரை அடுத்த ஓலவலசு கிராமத்தினர். 'நெருஞ்சிப்பழம்' உள்ளிட்ட பல கவிதை நூல்களையும், பூவாமுல்லை உள்ளிட்ட உரை நடை நூல்களையும் திருக்குறள், தொல்காப்பியப் பொருளதிகாரம்

ஆகியவற்றிற்கு உரையும் எழுதியவர். காமஞ்சரி சிறந்த நாடகக் காப்பியம். இவர் படைப்பில் மிகச் சிறந்தது 'இராவணகாவியம்'. தீரன் சின்னமலை வரலாற்றை முதன் முதலில் எழுதி வெளியிட்டவர்.

## கு. அருணாசலக்கவுண்டர் [1905-1999]

கோபி வட்டம் நன்செய்ப்புளியம்பட்டி ஊரினர். வாணவராயர் வரலாறு, பழைய கோட்டைப் பட்டக்காரர் நாட்டுப்பாடலும் பூர்வ பட்டயமும், தமிழ்நாடும் வீரசைவமும், மில்டனின் சுவர்க்க நீக்கம் (தமிழாக்கம்) போன்ற நூல்களை வெளியிட்டார். தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை மூலம் தக்கை இராமாயணம் பதிப்பித்தார் (யுத்த காண்டம் தவிர). பாம்பண்ணகவுண்டன் குறவஞ்சி, நல்லதம்பிச் சர்க்கரை மன்றாடியார் காதல் ஆகியவைகளை மறுபதிப்புச் செய்தார்.

## காணிப் புலவர்கள்

சோழநாட்டிலிருந்து கொங்கு நாடு வந்த கம்பரை கொங்கு நாட்டவர்கள் வரவேற்றனர். ஈரோட்டுப்பகுதியில் கம்பருக்குப் பல்லக்குச் சுமந்தும் அவரது எச்சில் காளாஞ்சியை ஏந்தியும் அவர் பாதச் சம்மாளிகளை (செருப்புக்கள்) தலையில் தாங்கியும் அடிமைச் சாசனம் எழுதிக் கொடுத்தும் பணி செய்ததாகப் பலர் கூறிக்கொள்கின்றனர். கம்பரது வாரிசுகளான காணிப்புலவர்களை கொங்கு மக்கள் மிக மதித்துப் போற்றினர் என்று பல ஆவணங்கள் கூறுகின்றன. அவர்கள் பாடிய பாடல்கள் பல.

வீராச்சிமங்கலம் கந்தசாமிக்கவிராயர், குங்காருபாளையம் முத்துசாமிப்புலவர், ஊதியூர் நாச்சிமுத்துப் புலவர், சிவகிரி நஞ்சையப் புலவர், பூந்துறை அம்பிகாபதி புலவர், கம்புளியம்பட்டி நாகப்ப கவுண்டர், நஞ்சை புளியம்பட்டி பி.ஜி.கருத்திருமன், பவானி வி.ஆர். குட்டியப்ப கவுண்டர், கள்ளிப்பட்டி க.கு. கோதண்டராம கவுண்டர், தி.ச.மு. மேகலை, கொடுமுடி கு. ராஜவேலு, ச.து.சு. யோகி, கோபி கு.ச. ஆனந்தன், ஈரோடு வேலா. இராசமாணிக்கம், அக்கிரகாரம் ரகீம், கவிஞர் வெ.நா. திருமூர்த்தி, சீனி. தேவராசன், ஈ.ப. சண்முக சுந்தரம்,

புலவர் சி. கமாலுதீன், கொற்றனூர் க. பழனிசாமிப்புலவர், புலவர் மு. பழனி சாமி ஆகியோர் சிறந்த தமிழ்ப்பணியாற்றி மறைந்தவர்களில் சிலர்.

சாகித்திய அகாடமி விருதுபெற்ற ஈரோடு தமிழன்பன், புலவர் செ. இராசு, புலவர் இரா. வடிவேலு, டாக்டர். வெ. ஜீவானந்தம், ஸ்டாலின் குணசேகரன், மு. சதாசிவம், சேலம் பாலன், குறிஞ்சி சண்முக சுந்தரம், நாமக்கல் நாதன், சந்திரசேகரன், தாராபுரம் க. அரங்கசாமி, தமிழ்க்குமரன், கோபிசெட்டிபாளையம் கா. அரங்கசாமி, முனைவர் மகுடீசுவரன், பெருந்துறை வேலன், சந்திரா மனோகரன், கொங்கு என். கொளந்தசாமி, செ.சு. பழனிசாமி, க.ஆ. திருஞான சம்பந்தம், கு. ஜமால் முகமது, கே.வி. சுப்பிரமணியம், மே.து. ராசுகுமார், பவானி மழைமகன், ஆற்றலரசு ஆகிய ஈரோடு மாவட்டத்துக்காரர்கள் பலர் பல்வேறு துறைகளில் தமிழ்ப்பணி ஆற்றி வருகின்றனர். புலவர் செ. இராசு கல்வெட்டு, செப்பேடு, சுவடி ஆய்விலும் ஈடுபட்டுள்ளார்.

ஈரோடு மாவட்டத்தில் வார, மாதம் பருவ இதழ்களாக வெளி வந்தவை, வெளிவருபவை மொத்தம் 70 என்பது வியப்பைத் தரும் செய்தியாகும். தந்தை பெரியார் 1930ல் ‘குடியரசுப் பதிப்பகம்’ தொடங்கி 185 நூல்கள் வெளியிட்டார். (பெரியார் நூல் 114; பிறர் நூல் 71). 1932ல் சாத்தான்குளம் அ. ராகவன் ‘பகுத்தறிவு நூல் பதிப்புக் கழகம்’ மூலமும், 1944ல் ப. சண்முக வேலாயுதம் ‘புதுமை முத்தமிழ்ப் புத்தக நிலையம்’ மூலமும், 1943ல் ஆர். லூர்துசாமி ‘செலக்ட் புக் ஸ்டால்’ மூலமும் பல நூல்களை வெளியிட்டனர். இவர் வெளியிட்ட ஒரு நூல் ‘திருவாரூர் முரசொலி எழுத்தாளர் மு. கருணாநிதி’ எழுதிய கவிதையல்ல’ என்பது. வேலாயுதம், ஈ.வே. இராசமாணிக்கம் ஆகி யோர் ஈரோட்டில் நடத்திய சிவலிங்கம் நூற்பதிப்புக் கழகம், வேலா பதிப்பகம் ஆகியவை பல தமிழ் நூல்களை வெளியிட்டன. நூறாண்டு கட்கு முன்னரே நித்திய கல்யாண சுந்தரம் அச்சுக்கூடம், சகலகலா நிலைய அச்சுக்கூடம், உண்மை விளக்கம் அச்சுக்கூடம், வாணி விலாஸ் பிரஸ், சென்ட்ரல், ஸ்டார் அச்சுக்கூடங்கள் பல நூல்களைப் பதிப்பித்தன.

❊❊❊

# 33. நாட்டுப்புறவியல்

மக்கள் வழக்காக வழங்கும் வட்டாரச் சொற்கள், பழமொழி, விடுகதை, தாலாட்டு, ஒப்பாரி போன்றவற்றை 'நாட்டுப்புறவியல்' அல்லது 'நாட்டாரியல்' என்று குறிப்பிடுவர். ஈரோடு மாவட்டப் பகுதியில் வழங்கப்பெறும் 'நாட்டுப்புறவியல்' தனித் தன்மை வாய்ந்தவை.

இம்மாவட்ட மக்கள் சொல்லுக்குச் சொல் ''ங்க'' சேர்த்து மரியாதையாகப் பேசுவர். 'ஆமாங்க' 'எப்பங்க வந்தீங்க', என்பது போல அவை அமையும். அடுத்தவர்கள் பேசும் போது காது கொடுத்துக் கேட்பதோடு இடையிடையே ''ஆமாங்க'' ''சரிங்க'' என்று சொல்லுவதும் இம் மாவட்ட மக்கள் வழக்கம். இவை கொங்கு நாட்டுக்கே பொதுவானவை.

**வட்டார வழக்குகள்**

(1) ரவுசு - பேரொலி, பேரோசை

''மேக்கு வளுவிலே ஒரே ரவுசாக் கெடக்குது''

(2) அங்கராக்கு - மேல் சட்டை

''சந்தையிலே வாங்கின அங்கராக்கு சிறுசாப் போச்சு''

(3) பொழுதனிக்கு - அடிக்கடி

''ஏண்டா பொழுதனிக்கு தொந்தரவு பண்றே''

(4) முச்சூடும் - எல்லாம்

''பயிரு முச்சூடும் மாடு மேஞ்சிடுச்சு''

(5) ரக்கிரி - கீரை

''ராயிக் களிக்கு ரக்கிரி கடைஞ்சா ருசிக்கும்''

(6) பொடக்காணி - வீட்டின் பின்புறக் கொல்லை

''குப்பயெக் கொண்டுபோய் பொடக்காணியிலே கொட்டு''

(7) அப்பளையாவே - அப்பொழுதே

''மாமெ அப்பளையாவே வந்தாங்க''

(8) மொள்ளமாரி - ஏமாற்றுப் பேர்வழி

"பெரியூட்டுத் தம்பி ஒரு மொள்ளமாரிங்க"

(9) நங்கை - அண்ணன் மனைவி

"நங்கெ அண்ணனெங்கீங்க"

(10) (செருப்பைத்) தொடுதல் - (செருப்பை) காலில் அணிதல்

"பொடி சுடுது; செருப்பைத் தொட்டுட்டு வா"

சில சொற்கள் பிற மாவட்டங்களிலும் வழக்கில் உள்ளவை.

## பழமொழிகள்

(1) "காஞ்சமாடு கம்புல பூந்த மாதிரி"

(2) "மொடக்கடிக்காரனுக்கும் பொடக்காணியிலே தடம்"

(3) "கோமணத்திலே ஒரு காசு இருந்தா

கோழி கூப்பிடப் பாட்டுப் பாடுவான்"

(4) "ஆடு மேச்ச மாதிரி

அண்ணனுக்குப் பொண்ணுப் பாத்த மாதிரி"

(5) "தாயும் புள்ளையும் ஒண்ணுன்னாலும்

வாயும் வவுரும் வேறே"

## விடுகதைகள்

(1) "கண்டு பூப் பூக்கும் காணாமல் காய்காய்க்கும்"

(கடலைச் செடி)

(2) "அக்கா வூட்டுக்கு தங்கச்சி போவா

தங்கச்சி வூட்டுக்கு அக்கா போகமாட்டா"

(அண்டா, செம்பு)

(3) "தோட்டமெல்லாம் பூவிருக்கு

பொறிக்க முடிலே"

(நட்சத்திரங்கள்)

## நாட்டுப் பாடல்கள்

### செல்லத் திருமணம்

''சித்திரை மாசத்திலே செல்லக் கலியாணம்
பத்தினியா பெத்தெடுத்த பாசக்கிளி கலியாணம்

பாக்கு மரம்பொளந்து பாதையெல்லாம் பந்தலிட்டு
தேக்கு மரம்பொளந்து தெருவெல்லாம் பந்தலிட்டு

என்னென்ன சீதனங்க எங்க இளங்கொடிக்கு
பட்டி நெறஞ்சுவர பசுமாடு சீதனங்க

உக்காந்து பால்கறக்க முக்காலி சீதனங்க
சீதனங்க சொல்ல செமநேரம் ஆகுமம்மா''.

### மணமகனின் சகோதரியர், மணமகளைக் கேலிசெய்தல்

''கருநாவப் பழம்போலே கருத்திருக்கும் பெண்ணுக்கு
எலுமிச்சக்கனி போலே எங்களண்ணன் வாச்சாரு

பேரீச்சம் பழம்போலே பிசுபிசுக்கும் பெண்ணுக்கு
பப்பாளிப் பழம்போலே எங்களண்ணன் வாச்சாரு''

### மணமகள் வீட்டார், மணமகனைக் கேலி செய்தல்

''எண்ணைக் குடத்திலே எறும்பென்று நாங்கிருந்தோம்
ஈஸ்வரிக்கு மாலையிடும் மாப்புளையும் இவர்தானோ

தண்ணிக் குடத்திலே தவளையென்று நாங்கிருந்தோம்
சரசுவதிக்கு மாலையிடும் மாப்பிளையும் இவர்தானோ''

### தாலாட்டு - மாமன் சீர்

''தூங்காத கண்ணுக்கு துரும்புகொண்டு மையெழுதி
ஒறங்காத கண்ணுக்கு ஓலைகொண்டு மையெழுதி
அஞ்சு கிளியெழுதி அதுமேலே முகமெழுதி
கொஞ்சங்கிளி கொண்டெழுதி கொண்டுவாரார் உம்மாமெ

கண்ணான தம்பிக்கு - என் கண்ணே
காதுகுத்தப் போறோமென்று
பொன்னான மாமனுக்கு - என் கண்ணே
போட்டுவிட்டோம் கடுதாசி

அரும்பாலே மாலைகட்டி - என் கண்ணே
அவசரமாய் வந்தாங்க
முன்னூறு வெத்தலையும் - என் கண்ணே
மொதமாமன் சீரு வரும்

நானூறு வெத்தலையும் - என் கண்ணே
நடுமாமன் சீரு வரும்
கற்கண்டுத் தட்டுவரும் - என் கண்ணே
கடசிமாமெஞ் சீரு வரும்''

## சீன ஆக்கிரமிப்பின் போது குழந்தைகள் பாடிய பாடல்

'ஐ சக்கா சை அரைப்படி நெய்
சீனாக்காரன் தலையிலே தீயப்பத்தி வை''

## குழந்தைகளுக்கு கற்றுத் தரும் பக்திப்பாடல்

''குள்ளக் குள்ளனை குண்டு வயிறனை
வெள்ளிக் கொம்பனை விநாயகனைத் தொழு''

***

# 34. ஊரும் சீரும்

பழங்காலத்தில் மக்கள் பெரும்பாலும் நீர்நிலைகளின் அருகே, குறிப்பாக ஆற்றங்கரைகளில் ஊர்கள் அமைத்து வாழ்ந்தனர். மக்கள் தொகை பெருகவே பிற இடங்களை நாடிச் சென்றனர். அவை காடு களாக இருக்கவே

''காடு கொன்று நாடு ஆக்கி
குளம் தொட்டு வளம் பெருக்கி
கோயிலொடு குடிநிறுவி''

வாழத் தலைப்பட்டனர். குடியிருப்புக்கள் பல பகுதிகளில் ஏற்படவே அவற்றைக் குறிக்க ஒரு குறியீடு தேவைப்பட்டது. இருக் கின்ற இடத்தின் அமைப்புக்கு ஏற்றோ ஊரை ஏற்படுத்தியவர் அல்லது அதன் தலைவர் பெயராலோ ஊர் அழைக்கப்பட்டது. புதியதாக ஏற்பட்ட ஊர் புத்தூர் - புதூர் எனப்பட்டது. மேட்டில் இருப்பது மேட்டூரும், காட்டை ஒட்டி இருப்பது காட்டூரும் ஆயிற்று. பிடாரி கோயில் இருந்த ஊர் பிடாரியூரும், அறச்சாலை உள்ள ஊர் அறச்சாலையூர் ஆயிற்று. இராமநாதன் ஏற்படுத்தியது இராமநாதபுரம் ஆயிற்று. சோழ கங்கன் நினைவாக சோழகங்கபாளையம் என அழைக்கப்பட்டது. குருக்கள் வாழ்ந்த ஊர் குருக்கபாளையம், சைவத் தம்பிரான் கொடை பெற்ற அல்லது வாழ்ந்த ஊர் தம்பிரான்வலசு எனப்பட்டது.

ஈரோடு மாவட்டத்தில் 4687 ஊர்கள் உள்ளன. (இப்போது நகர்ப் புறத்தில் பல்வேறு புதிய ''நகர்கள்'' ஏற்பட்டிருப்பது சேர்க்கப் பட வில்லை). நகரங்கள் மிகக் குறைவு. கிராமப் புறங்களே அதிகம். ஊர் களின் பின்னொட்டை வைத்து அவற்றை வகைப்படுத்தியுள்ளனர்.

| | |
|---|---|
| பாளையம் என முடியும் ஊர்கள் | 1828 |
| புதூர் என முடியும் ஊர்கள் | 565 |
| ஊர் என முடியும் ஊர்கள் | 561 |
| வலசு என முடியும் ஊர்கள் | 493 |
| பட்டி என முடியும் ஊர்கள் | 185 |

| | |
|---|---|
| புரம் என முடியும் ஊர்கள் | 90 |
| பதி என முடியும் ஊர்கள் | 55 |
| காடு என முடியும் ஊர்கள் | 54 |
| கரை என முடியும் ஊர்கள் | 33 |
| குட்டை என முடியும் ஊர்கள் | 33 |
| மங்கலம் என முடியும் ஊர்கள் | 26 |
| நல்லூர் என முடியும் ஊர்கள் | 18 |
| புத்தூர் என முடியும் ஊர்கள் | 10 |

ஓடு, தொழுவு, குறிச்சி, நிலை, பாடி, கயம், பள்ளி, பேட்டை, குழி, வாவி என முடியும் ஊர்களும் உள்ளன. பிற தனித்தனிப் பெயர்கள் உடையவை.

சில பெரிய வருவாய்க் கிராமங்கள் நிருவாக வசதிக்காக இரண்டாகப் பிரிக்கப்பட்டன. பெயரளவில் இரண்டு கிராமங்களே தவிர அவை ஊரமைப்பில் ஒன்றேதான்.

வெள்ளோடு - வடமுகம் வெள்ளோடு, தென்முகம் வெள்ளோடு
பிடாரியூர் - முகாசி பிடாரியூர், அட்டவணைப் பிடாரியூர்
காளமங்கலம் - புன்செய்க் காளமங்கலம், நன்செய் காளமங்கலம்
பூந்துறை - அவல் பூந்துறை, துய்யம் பூந்துறை
கத்தாங்கண்ணி - சர்க்கார் கத்தாங்கண்ணி, அக்கிரகார கத்தாங்கண்ணி
அக்கிரகாரம் - பிராமண பெரிய அக்கிரகாரம், பிராமண சின்ன அக்கிரகாரம், சர்க்கார் பெரிய அக்கிரகாரம், சர்க்கார் சின்ன அக்கிரகாரம். என்பன அவ்வாறு பிரிக்கப்பட்டுள்ள ஊர்களாம்.

நீண்ட பெயர்களை அண்மைக் காலத்தில் ஆங்கில எழுத்துக் களை வைத்துச் சுருக்கி அழைக்கின்றனர். அச் சுருக்கப் பெயர்களே எங்கும் வழங்கப்படுவதால் முழுப்பெயர்கள் காலப்போக்கில் மறைந்து விட வாய்ப்பு உள்ளது.

| | |
|---|---|
| தூக்கநாயக்கன்பாளையம் | டி என் பாளையம் |
| கந்தப்பகவுண்டன் வலசு | கே ஜி வலசு |
| புறாப்பாளிக்காட்டு வலசு | பி கே வலசு |

சில சிற்றூர்களைக் குறிக்க அருகில் உள்ள பெரிய ஊர்ப்பெய ரோடு இணைத்துக் கூறினர். அங்கும் சுருக்கம் வந்துவிட்டது.

பி. வெள்ளாளபாளையம் - பாரியூர் வெள்ளாளபாளையம்

பி. மேட்டுப்பாளையம் - பெருந்தலையூர் மேட்டுப்பாளையம்

கே. கந்தசாமிபாளையம் - கொல்லன்கோயில் கந்தசாமிப்பாளையம்

சில ஊர்ப் பெயர்களைச் சுருக்கியோ ஒரு பகுதியையோ கூறி அழைக்கின்றனர்.

| | | |
|---|---|---|
| தலைய நல்லூர் | - | தலசை |
| காரையூர் | - | காரை |
| கொற்றனூர் | - | கொற்றை |
| பேரோடு | - | பேரை |
| கோபிசெட்டிபாளையம் | - | கோபி |
| சத்தியமங்கலம் | - | சத்தி |
| தாராபுரம் | - | தாரை |
| வீராட்சிமங்கலம் | - | வீரை |

இப்பெயர்களும் சில இலக்கியத்திலும் இடம்பெற்று விட்டன. கிழாம்பாடி, சாத்தம்பூர், சதுமுகை, பாலத்தொழு போன்ற பல ஊர்கள் முற்றிலும் அழிந்துவிட்டன. ஊர் நத்தப் புறம்போக்காக உள்ளது.

சில பழைய ஊர்ப் பெயர்கள் முழுமையாக மாறிவிட்டன.

**பழைய பெயர் - மாறிய பெயர்**

| | | |
|---|---|---|
| சிலம்பூர் | - | எண்ணமங்கலம் |
| தலய நல்லூர் | - | சிவகிரி |
| நட்டூர் | - | காடையூர், பரஞ்சேர்வழி, கூகலூர் |
| விதரி | - | அத்திப்பாளையம் |
| சிங்கை | - | காங்கயம் |
| பட்டாலி | - | அரசம்பாளையம் |
| குறிச்சி | - | லக்குமநாயக்கன்பட்டி |
| முகுந்தனூர் | - | பெரியபாளையம் |

| | | |
|---|---|---|
| மாம்பாடி | - | எதிரனூர் |
| சத்திமங்கலம் | - | கஸ்பாபேட்டை |
| கொற்றனூர் | - | சங்கரண்டாம்பாளையம் |

சில ஊர்கள் பேச்சு வழக்கில் திரிந்து வழங்குகின்றன.

| | | |
|---|---|---|
| பார்ப்பதி | - | பாப்பினி |
| கூவலூர் | - | கூகலூர் |
| பிரமதேயம் | - | பிரமியம் |
| கொல்லன் கூவல் | - | கொல்லங் கோயில் |
| உலகவிடங்கம் | - | ஒலகடம் |
| கொடுமணம் | - | கொடுமணல் |
| ஆதவூர் | - | ஆதியூர் |
| வெள்ளக்கல் | - | வெள்ளகோயில் |
| புகழ்மங்கலம் | - | பழமங்கலம் |
| வள்ளி எறிச்சில் | - | வள்ளியறச்சல் |
| குழாம்நிலை | - | கொளாநல்லி |
| கற்றான் காணி | - | கத்தாங்கண்ணி |
| நீலம் பேரூர் | - | நீலம்பூர் |
| பரன்சேர்பள்ளி | - | பரஞ்சேர்வழி |
| புன்றுறை | - | பூந்துறை |
| ஈர்ந்தூர் | - | ஈங்கூர் |

ஈரோடு மாவட்டத்தில் கொங்குச் சோழர், பாண்டியர் நாளில் வேதம் வல்ல அந்தணர்கட்கு ஒரு வளமான ஊரை அடுத்தோ அல்லது புதியதாகவோ அங்கிரகாரங்கள் ஏற்படுத்தி, வாழ்க்கை வசதி செய்து தரப்பட்டன. அவற்றில் ஒன்று கூட இப்போது வழக்கில் இல்லை; அவ்விடத்தில் அந்தணர்களும் இல்லை. அரசன், அரசியர், அரசியல் தலைவர்கள் பெயரால் அவை அழைக்கப்பட்டன.

கத்தாங்கண்ணியில் - வீரசோழச் சதுர்வேத மங்கலம்
வைரம்பள்ளியில் - உத்தமசோழ சதுர்வேத மங்கலம்
ஈரோட்டில் - மூவேந்தசோழர் சதுர்வேத மங்கலம்
எழுநூத்தி மங்கலத்தில் - எல்லாம்வல்ல சோழச் சதுர்வேத மங்கலம்

நல்லூரில் - அமரபுயங்கச் சதுர்வேத மங்கலம்
முகுந்தனூரில் - விக்கிரமசோழச் சதுர்வேத மங்கலம்
பிரமியத்தில் - வீரசங்காதச் சதுர்வேத மங்கலம்
தளவாய் பட்டணத்தில் - அரியபிராட்டிச் சதுர்வேத மங்கலம்
கொளிஞ்சிவாடியில் - உடைய பிராட்டிச் சதுர்வேத மங்கலம்
நரையனூர் நாட்டில் - வீரபாண்டியச் சதுர்வேத மங்கலம்

ஒரு கோயிலுக்கு ஊர் முழுமையும் அளிக்கப்பட்டிருந்தால் அவ்வூர், 'நல்லூர்' என்று பெயர் பெற்றது. சதுர்வேதி மங்கலம் போல நல்லூரும் அரசர் தொடர்பான பெயரையே பெற்றன.

அலங்கியம் ஆன உத்தமசோழ நல்லூர்
கொங்கூர் ஆன செயங்கொண்டசோழ நல்லூர்
வெள்ளகோயில் ஆன சோழீசுவர நல்லூர்
தேரையூர் ஆன குலோத்துங்கசோழ நல்லூர்
மருதூர் ஆன அழகியசோழ நல்லூர்
வள்ளியறச்சல் ஆன வீரபாண்டிய நல்லூர்

இராகுத்தராய நல்லூர் இன்று 'நல்லூர்' என்று அழைக்கப்படுகிறது.

## புராணங்களில்

ஈரோட்டுக்கு மறந்தை, உறந்தை, மயிலை, கபாலபுரி, மத்யபுரி என்ற பெயரைப் புராணங்களிலும், சமய நம்பிக்கையால் கூறுவதி லிருந்தும் அறிகின்றோம். வேறு சில ஊர்களுக்கும் புராணங்களில் வேறு பெயர் கூறப்படுகின்றன. பேரோடு, சித்தோடு, வெள்ளோடு, ஈரோடு ஆகியவை ஓடைகளால் பெயர் பெற்றிருக்க இவைகளை இணைத்து புராணங்கள் வேறு பெயர்க்காரணம் கூறும்.

பூந்துறைப் புராண ஆசிரியர் மேல்கரைப் பூந்துறை நாட்டு 32 ஊர் களையும் பலவகைக் காரணப் பெயர்களாகப் பிரித்துக் கூறியுள்ளார்.

✻✻✻

# 35. கலைத் தொடர்பு

இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழில், இசையையும், நாடகத்தையும் பெரும்பாலும் 'கலை' எனக் கூறுவது வழக்கம் நாடகத்தைக் 'கூத்து' என்றும் கூறுவர். இசையும் கூத்தும் ஈரோடு மாவட்டத்தில் தொன்று தொட்டுச் சிறப்புற்று விளங்கியுள்ளது.

ஈரோடு மாவட்டம், அறச்சலூர் ஆண்டிபாறையில் சமண முனிவர்கள் வாழ்ந்த இயற்கைக் குகை உள்ளது. கூத்துக்கு உரிய இசை அடைவு எழுத்துக்களை மணிய வண்ணக்கன் தேவன் சாத்தான் என்பான் 1800 ஆண்டுகட்கு முன் பொறித்துள்ளான். இந்தியா விலேயே தொன்மையான இசை பற்றிய கல்வெட்டு இதுவேயாகும்.

அடியார்க்கு நல்லாரால் குறிக்கப்பட்டு அழிந்து போனதாகக் கருதப்பட்ட அறிவனார் செய்த 'பஞ்சமரபு' என்னும் சங்க இசை நூல் காங்கயம் வட்டம் பாப்பினியில் உள்ள பச்சோட்டு ஆவுடையார் ஈசுவரன் கோயிலில் நடராசர் சன்னதியில் கிடைத்து புலவர் வே.ரா. தெய்வசிகாமணிக்கவுண்டர் அதைப் பதிப்பித்துள்ளார். அதன் ஓலைச் சுவடியில் ''காங்கய நாட்டு மடவளாகம் வெள்ளச்சி மகன் தம்பான் புலவன் பிலவங்க வருஷம் ஐப்பசி மாதம் 5ஆம் தேதி எழுதி முடிந்தது'' என்று தொடர் காணப்படுகிறது. ஈரோடு மாவட்டத்தில் கிடைத்த 'பரத சங்கிருகம்' என்னும் நாட்டிய நூலையும் தெய்வ சிகாமணிக் கவுண்டர் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் மூலம் பதிப்பித்துள்ளார். சங்ககிரியில் பிறந்து ஈரோட்டில் வாழ்ந்த ச.து. சுப்பிரமணிய யோகி ''கூத்த நூல்'' பதிப்பித்தார்.

கி.பி ஏழாம் நூற்றாண்டில் பெருந்துறை வட்டம் விசயமங்க லத்தில் வாழ்ந்த கொங்கு வேளிர் இயற்றிய பெருங்கதையின் காப்பிய நாயகன் மிகச் சிறந்த இசை நிபுணன். யாழ்வாசித்து மத யானையைக் கூட அடக்குகிறான். அதேபோல கி.பி. 10ஆம் நூற்றாண்டில் பெரு வஞ்சி என்ற தாராபுரத்தில் வாழ்ந்த திருத்தக்கதேவர் இயற்றிய சீவக சிந்தாமணி நாயகன் சீவகனும் இசை நிபுணன். அவர்கள் மூலம்

ஈரோடு மாவட்டப்புலவர்களான கொங்கு வேளிரும் திருத்தக்க தேவரும் இசை பற்றிய பல்வேறு செய்திகள் கூறுகின்றனர்.

பட்டாலிக் கல்வெட்டில் 'கூத்தன் யாழ்வல்லான் ஆன உதய சிங்க தேவன்' என்பவனும், கீரனூர்க் கல்வெட்டில் 'கீரனூர் முதலிகளில் யாழ்வல்லான் ஆன அட்டாலைச் சேவகன் அணுத்திரப் பல்லவரையன்' என்பவனும் குறிக்கப்படுகின்றனர். இவர்களிருவரும் 12ஆம் நூற்றாண்டினர். மற்றொரு கலைஞர் 'நிருத்தப் பேரரையன்' பட்டம் பெற்றுள்ளார்.

எழுமாத்தூர் பொய்ங்காக் கவுண்டர், மருதுறை செல்லப்ப கவுண்டர், கொற்றனூர் சரவணக் கவுண்டர் ஆகியோர் எழுதிய ஒரு ஒப்பந்தத்தில் சாட்சிக் கையொப்பமிட்டவர்களுள்

1) சுத்த சங்கீதம் ருத்திரவீணை நரசய்யன், சேலுவய்யன்.
2) நாகபாசத்தாரில் சிவக்கொழுந்து நட்டுவன், வேலுமணி நட்டுவன்
3) மத்தளம் வீரப்பன், காளி
4) சங்கீதம் முத்துக் கருப்பன், தானப்பன்
5) நாகசுரம் நல்லய்யன், பொன்னய்யன்
6) தவில் குப்பணன், நாராயணன்

ஆகியோர் குறிக்கப் பெறுகின்றனர். இந்த ஆவணம் கி.பி. 18ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது.

வெள்ளோடு சர்வலிங்கேசுவரர் கோயில் கல்வெட்டில் நன்மை, தீமைக்குப் 'பேரிகையுள்ளிட்ட வாத்தியம்' வாசிக்கக் காலிங்கராயன் கம்மாளர்கட்கு உரிமை கொடுக்கின்றான். அவர்களைத் தவிர ஏனையோர் அவ்வாத்தியங்களை வாசித்தமை தெரிகிறது.

ஈரோடு மாவட்டத்துக் குறவஞ்சி இலக்கியங்களில் எல்லாப் பாடல்களுக்கும் இசை குறிக்கப்பட்டுள்ளன. அவை பாடப்பட்டோ நடிக்கப்பட்டோ இருக்க வேண்டும்

கொங்கு வேளாளர்களில் கண்ணன், செல்லன், தேவேந்திரன், அந்துவன், தூரன் குலத்தார் உள்ளிட்ட பலர் வழிபாடு தொடர்பான நிகழ்ச்சிகளுக்கு 'குலமாணிக்கி' என்ற பெயரில் தேவரடியார்களை

நியமித்துள்ளனர். அவர்கள் எல்லோரும் நாட்டியத்தில் தேர்ந்தவர் களாக இருந்துள்ளனர். அவர்கள் 'நாட்டியம்' 'சதுர்' ஆடியுள்ளனர். டணாயக்கன் கோட்டைக் கல்வெட்டு அக்கோயில் ''தேவரடியார் முன் அரங்கு ஏறி ஆடக்கடவர்'' என்று கூறுகிறது.

கொங்கு வேளாளர் திருமணங்களில் 'பட்டன், புலவன், பண்பாடி, தக்கை கொட்டி, கூத்தாடி' என்ற ஐவாணர்கள் பாடியும் வாத்தியம் வாசித்தும் நடித்தும் ஆடியும் வரிசை பெறுவது வழக்கம். இவர்களில் பண்பாடி, தக்கை கொட்டி, கூத்தாடி மூவரும் கலைஞர்கள்.

''தக்கைக் கொட்டிக்காரன் நவதானிய கோத்திரத்தில் செல்லன், வேலன், முத்தன், பொன்னன், வெள்ளை, குருவன், பச்சான், அவிநாசி, குளந்தான் கொத்து 9; பண்பாடியில் சின்னான், கின்னார வேலன், தயிலான், வீரன், அளகன், பழனி, செஞ்சி கொத்து 7; கூத்தாடியில் பெரியான், மருதன், பெருமாள், செல்லன், பழனி, வெள்ளை, முத்தன், காறி, தேவன், வேலன் கொத்து 10;

தக்கைகொட்டிக்கு விருது உடுக்கை, பண்பாடிக்கு விருது வீணை, தாசிகூத்தாடிக்கு விருது கைக்கோள மத்தளம் இப்படி இந்த மூன்று படிக்காரரும் கலியாணத்துக்கு விருது வாத்தியத்துடனே நாட் டார் கலலுக்குக் காப்புக்கட்டிக் குப்பாரி கொட்டும் சீருக்கும் பெண் ணெடுக்கும் சீருக்கும் அவரவர் விருது வாத்தியத்துடனே நடந்து வரவும்'' என்று கூறுகிறது.

'மீனாட்சி செப்பேடு' கூத்தாடிகளுக்கு வரியில்லை என்று கூறுகிறது. நாடார்களுடைய கருமாபுரம் செப்பேட்டில் ''எங்கள் சாதிப் பிள்ளை கூத்தாடிகளுக்கு ஈழத்துப் பேரும் இலங்கைப்பேரும் கொடுத்து விருது எடுத்து ஆடி வருவதற்காக குடிக்கு ஒரு பணமும் சாப்பாடும் கொடுப்போம்'' என்று கூறப்பட்டுள்ளது. ஈரோடு மாவட் டக் கல்வெட்டு கூத்தாடும் தேவர் என்று நடராசப் பெருமானைக் கூறுகிறது.

ஈரோட்டில் 'அய்யனாரப்பன் பள்ளு'; திங்களூரில் 'அருள் மலை' நொண்டி நாடகம் ஆகியவை பாடி ஆடி நடிக்கப்பட்டுள்ளது.

'காலிங்க ராயன் கடாட்சத்து னாலே
சாலவே இந்தத் தரணியில் வாழும்
குடியான வர்கள் கூடிய சபையில்
வடிவான பள்ளை வந்துமே ஆடிய
சஞ்சீவி தனக்கு சதிருடன் செம்பொன்'

கொடுத்ததாக அய்யனாரப்பன் பள்ளு கூறுகிறது. அவினாசிப் புலவர் என்பவர் கால்களில் சலங்கை கட்டிக் கொண்டு தான் ஒருவராகவே நொண்டி நாடகத்தை ஆடியதைப் பார்த்த முதியவர்கள் பலர் இன்னும் திங்களூரில் இருக்கின்றனர். ஆண்களால் பல கோயில்களில் 'ஒயில் கும்மி' ஆடிக் காட்டப்படும் வழக்கம் இருந்தது.

## திரைப்படத்துறை

ஈரோட்டில் 60 ஆண்டுகளுக்கு முன்னரே 'நாடகம் சினிமா பார்க்கிறவர்கள் சங்கம்' என்பது தொடங்கப்பட்டது. 'திராவிட நடிகர் சங்கம்' ஈரோட்டில் ஏற்படுத்தப்பட்டு அதன் உறுப்பினர் சிலர் திரைப் படத்திலும் நாடகத்திலும் நடித்துள்ளனர்.

ஈரோடு கேசவலால் காளிதாஸ் சேட் 'காளிதாஸ் பிலிம்ஸ்' என்ற நிறுவனத்தின் மூலம் பம்பாய் மெயில், மெட்ராஸ் மெயில், கண்ணப்ப நாயனார், மேனகா போன்ற திரைப்படங்களை எடுத்தார். மேனகா திரைப்படத்தில் முதன்முதலில் பாரதியார் பாடலைப் பாடவைத்தார். ஈரோடு ராஜலட்சுமி பிக்சர்ஸ் என்ற நிறுவனம் மூலம் 'தேசிங்கு ராஜன்' என்ற திரைப்படத்தை எடுத்தனர். இவர்கள் 'தமிழ் பேசும் படம்' என்று விளம்பரம் செய்தனர்.

கோபிசெட்டிபாளையம் வீரமணி அவர்கள், திரைப்பட நடிக ராக உள்ள பாக்கியராஜ் பல திரைப்படங்களை எடுத்ததுடன் இயக் கியும் உள்ளார். கோவை செழியன் கே.சி. பிலிம்ஸ் என்ற பெயரில் தமிழ், தெலுங்கு, இந்தி திரைப்படங்களை எடுத்தார். ஈரோடு இரா. ஜீவானந்தம் அவர்கள் 'கேபிஆர் பிலிம்ஸ்' என்ற பெயரில் 'கடற்கரைத் தாகம்' என்ற திரைப்படத்தை எடுத்தார்.

இசையுலகில் மிகப் புகழ் படைத்து ஔவையாராக நடிக்க முதன் முதலில் திரைப்பட உலகில் 1 லட்சம் ரூபாய் சம்பளம் வாங்கிய கொடுமுடி கே.பி. சுந்தராம்பாள் 'தமிழ் இசை வாணி' என்று இசை யுலகில் பெயர் பெற்ற ஊஞ்சலூர் யு.ஆர். ஜீவரத்தினம் ஆகியோர் பல திரைப்படங்களில் பாடி நடித்துப் புகழ் பெற்றவர்கள். ஜீவரத்தினம் பாடிய ''தென்றலே வாராயோ இன்பசுகம் தாராயோ'' என்ற பாடல் பட்டி தொட்டியெல்லாம் ஒலித்தது.

ஈரோடு சௌந்தர், தாராபுரம் சுந்தரராஜன், கள்ளிப்பட்டி ஜோதி, அந்தியூர் ராஜகுமாரன் ஆகியோர் திரைப்படத் துறையில் ஈடுபட் டுள்ளனர். 'ஆயிரம் நிலவே வா' என்பன போல பல திரைப்படப் பாடல்களை இயற்றிய புலவர் புலமைப்பித்தன் (இராமசாமி) ஈரோடு மாவட்டத்தைச் சேர்ந்தவர். ஈரோடு தமிழன்பன் ஒரு திரைப்படத் திற்குக் கதை வசனமும் பாடல்களும் எழுதியுள்ளார். 'அச்சமில்லை அச்சமில்லை' என்ற திரைப்படத்திற்கு பாடலும் எழுதியுள்ளார்.

ஈரோடு மாவட்டம் பெருந்துறை வட்டம் கம்புளியம்பட்டியைச் சேர்ந்த விளையாட்டு வீரர்கள் விஜய் அமிர்தராஜ், ஆனந்த அமிர்தராஜ் சகோதரர்கள் ஆங்கிலத் திரைப்படங்களை எடுத்து வெளியிட்டு வருகின்றனர். ஈரோடு நகர்மன்ற உறுப்பினராக இருந்த என்.எஸ். நாராயணபிள்ளை பல திரைப்படங்களில் துணை நடிகராக நடித்துள் ளார். திரைப்பட முன்னணி நடிகர் சிவக்குமாரின் பூர்வீக ஊர் காங்கயம் வட்டம் காடையூர் ஆகும். பலர் திரைப்பட வினியோகம் செய்கின் றனர். இன்றும் பல முன்னணி இசைக்குழுக்கள் ஈரோட்டில் உள்ளன.

நவரசம் குமரசாமி, உழவன் பெரியசாமி போன்றோர் பல நாடகங்களை எழுதி இயக்கியுள்ளனர். கிராமப்புறக் கோயில் பண்டி கைகளில் உள்ளூர் இளைஞர்கள் பலர் ஆர்வத்துடன் நாடகங்களை அரங்கேற்றுகின்றனர்.

❋❋❋

# 36. மகளிர் மாண்பு

ஈரோடு மாவட்டப் பகுதியில் வாழ்ந்த பெண்களில் பலர் சமயத் தொண்டு புரிந்தவர்களாகவும் தமிழும், வடமொழியும் கற்றறிந்தவர் களாகவும் புலமை நலம் வாய்ந்தவர்களாகவும் நியாயம் தீர்க்கும் நீதிபதிகளாகவும் அரசு அலுவலர்களாகவும் குடும்பத்தில் ஏற்பட்ட இடையூறுகளை எதிர்த்துப் போராடியவர்களாவும் இருந்துள்ளனர்.

**பக்தி பிடித்த சடைச்சியம்மாள்**

சிவமலை பட்டாலியில் கொங்கு வேளாளர்களில் கண்ண குலத்தில் ஒரு பெண் பிறந்தாள். வள்ளி என்று பெயர் வைத்தனர். இளமையிலேயே சிவமலையாண்டவர் மீது பெரும் பக்தியுடன் அவள் விளங்கினாள். சடா முடியுடன் தவக்கோலத்தில் இருந்த அப் பெண்ணை எல்லோரும் 'சடைச்சி' என்றே அழைத்தனர்.

யாத்ரீகர்களுக்குத் தண்ணீர்ப்பந்தல் வைத்து எப்பொழுதும் உப்பு, ஊறுகாய், நீராகாரம் கொடுக்க ஏற்பாடு செய்தாள். சிவன் மலைக்கு பக்தர்கள் எளிமையாக மலை ஏறப் பல இடங்களில் படிகள் அமைத்தாள். மலையின் வடபுறம் கிணறு வெட்டி நந்தவனம் அமைத்து நாள்தோறும் முருகப்பெருமானுக்குப் பூமாலை சாத்த ஏற்பாடு செய் தாள். பக்தர்கட்குப் பல வசதிகள் செய்து கொடுத்தாள்.

இறுதியில் சிவமலையாண்டவருடன் சடைச்சி ஐக்கியம் ஆனாள் என்பர். பக்தர்கள் சடைச்சி உருவத்தை சிவமலையாண்டவர் சன்னதியிலேயே எழுந்தருளச் செய்தனர். இதனை மடவளாகம் இலட்சுமண பாரதியார் சிவமலைக் குறவஞ்சியில்

''பக்திபிடித்த சடைச்சி யம்மாளைத் - தன்
பாதங்களில் வைத்த சிவமலை யாண்டவர்''

என்று பாடியுள்ளார்.

## சின்னமுத்தூர்ப் பெண்கள்

முத்தூர் முத்தன் குலத்தில் தோன்றிய குமராயி என்ற பெண் குழந்தை சின்னமுத்தூர் செல்லக்குமாரனிடம் பேரன்பு பூண்டு பணிவிடை செய்து வந்தாள். நாளடைவில் செல்லக்குமாரனையே குருவாக ஏற்று சின்னமுத்தூரில் மடம் ஒன்றை ஏற்படுத்தி சமயப்பணி செய்து வந்தாள். குமராயி ஏற்படுத்திய மடமே பின்னர் செல்லக்குமார சாமி கோயிலாக மாறியது.

குமராயியின் சமயப்பணிகளுக்கு மணிய குலத்தில் தோன்றிய அத்தாய், முத்தாய், செல்லாய் என்னும் மூன்று பெண்கள் மிகவும் உறு துணையாக இருந்தனர். மூவரும் துறவுக் கோலம் பூண்டு கிராமப் புறங் களுக்குச் சென்று உணவு தானியங்கள் சேகரித்துப் பொதி மாடுகள் மூலம் சின்னமுத்தூருக்குக் கொண்டு வருவர். அவை குமராயி திரு மடத்தில் ஏழை, இரவலர், பக்தர்களுக்கு அன்னதானம் அளிக்கப்பயன் படும். இந்நால்வரின் பல்வேறு சமயப்பணிகள் பெருகின. இவர்கள் அடக்கத்தலங்கள் வழிபடப்பட்டு வருகின்றன.

## ஆலயத் திருப்பணி

தாரமங்கலம் வணங்காமுடித் கெட்டி முதலியார் மனைவி சின்னம்மையாரும், தக்கை இராமாயணம் பாடிய பத்தர்பாடி எம் பெருமாள் கவிராயரின் மனைவியார் பூங்கோதையும் தமிழ் கற்று புலவராக விளங்கினர். இருவரும் ''கண்ணொளி கதிரொளி'' என்ற அத்வைத நூல் எழுதியுள்ளனர். பவானி நண்ணாவுடையார் கோயி லில் இருவரும் பல திருப்பணிகள் செய்தனர். அதைக்குறிக்கும் கல் வெட்டுக்கள் பவானிக் கோயிலில் உள்ளன.

## நாட்டுக் கணக்கு

வடகரை நாட்டில் கணக்கு அதிகாரியாகப் பூங்கோதை பணி யாற்றியுள்ளார். இதனைத் தூக்கநாயக்கன்பாளையம் செப்பேடு கூறு கிறது. அதில் ''வடகரை நாட்டுக் கரணிக்கம் பூங்கோதை'' என்ற தொடர் வருகிறது. பூங்கோதை திருச்செங்கோட்டுக்குறவஞ்சி பாடி யும் உள்ளார்.

## வடமொழிக்கல்வி

ஈரோடு வட்டம் கிழாம்பாடியில் வாழ்ந்த பாம்பண்ண கவுண்டர் மீது பாலபாரதி முத்துசாமி குறவஞ்சி இலக்கியம் பாடியுள்ளார். ஒரு முறை புலவர் முத்துசாமி ''பாம்பண்ண கவுண்டரின் பெயர் துஷ்ட ஜந்துவின் பெயராக இருக்கிறதே'' என்று அவர்தாய் முத்தாத்தாள் அவர்களிடம் கேட்டார். அருகில் இருந்த சேஷய்யர் என்பவரைக் காட்டி இவர் பெயர் சேஷன் என்றார். ''அது ஆதிசேனாகிய பாம்பின் பெயர் அல்லவா? வடமொழியில் பெயர் வைத்தால் இனிக்கிறது. தமிழ்ப் பெயர் உங்களுக்கு கச்சிக்கிறதா'' என்று கேட்டார் முத்தாத்தாள்.

ஈரோடு வட்டம் கங்காபுரம் பழனியப்பகவுண்டர் தமிழ்ப்புலவர். அவர் மனைவி பழனியம்மாள் தமிழ் மட்டுமல்ல வடமொழியும் அறிந் தவர். ஒருமுறை அவர்கள் தோட்டம் சென்று வரும்போது அவர்கள் வீட்டுத் திண்ணையில் 'பீமண்ணா' என்ற புலவர் அமர்ந்திருந்தார். அவரைப் பார்த்த பழனியம்மாள் அவரை அன்புடன் விசாரித்தார். ''பீமண்ணா'' மரியாதை இல்லாமல் ஆணவத்துடன் ''யாம் சோடசாவ தாணி'' பதினாறு கலைகளில் வல்லவர் (சோடசம் + அவதானி) என்று கூறினார். உடன் சற்றும் தாமதிக்காமல் ''ஐயா! நீங்கள் இரண்டு ஆடு திருடிய கள்வரா?'' (சோடு+அசம்+அவதானி) என்று கேட்டார். புலவர் மன்னிப்புக் கேட்டார்.

## நியாயம் தீர்ப்பவர்

ஈரோடு வட்டம் பூந்துறையை அடுத்துள்ள மணியம்பாளையத்தில் கொங்கு வேளாளரில் காடைகுலச் செல்வ விநாயகக் கவுண்டர் என் பவர் மனைவியார் தெய்வானையம்மாள் வெள்ளோடு கனகபுரம் சாத் தந்தை குலப் பழனிவேலப்பகவுண்டர் மகள். தமிழ் இலக்கியம், இலக் கணம், காப்பியம், நீதி நூல்கள் கற்ற தெய்வானையம்மாள் பேரறிவும் மதி நுட்பமும் கொண்டு விளங்கினார். மக்களுக்கிடையே, சமூகங் களுக்கிடையே, ஊர்களுக்கிடையே ஏற்படும் சண்டை, சச்சரவு வழக்கு களை விசாரித்து நீதி கூறுவார். தோற்றவர்க்கு அபராதமும் வென்ற வர்க்கு வெற்றிக் காணிக்கையும் விதிப்பார். பெருந்துறை மடத்துப்

பாளைம் செப்பேடு தெய்வானையம்மாளைப் 'பெரிய கவுண்டச்சி தெய்வானையம்மாள்' என்று புகழ்கிறது.

## காடையூர் வெள்ளையம்மாள்

காடையூர் கொங்கு வேளாளரில் சேட குலத்தில் பிறந்த வெள்ளைப் பெண் வெள்ளையம்மாள் கருமாபுரம் பொருளந்தை குலக் காங்கே யனை மணந்தாள். தந்தை கொடுக்க ஒப்புக் கொண்ட காடையூர்க் கால்காணியைக் கொடுக்க மறுத்த வெள்ளையம்மாளின் சகோதரர்கள் அவள் கணவனையும் கொன்று விடுகின்றனர்.

நடத்தை கெட்டவள் என்று கருமாபுரத்திற்குத் துரத்தப்பட்ட நிலையில் இஸ்லாமிய சர்தார் துணையோடு மிகக் கடுமையான நிபந் தனைகளை வென்று காடையூரில் முழுக்காணியும் பெற்று காடை யூர்ப் பட்டக்காரர் மரபைத் தோற்றுவித்தாள். வெள்ளையம்மாள் கோயில் காடையூர் காடையீசுவரர் கோயிலில் உள்ளது. கண்ணாடிப் பெருமாள் என்பவர் இவர் வரலாற்றை ''வெள்ளையம்மாள் காவியம்'' என்ற பெயரில் பாடியுள்ளார்.

## பழைய கோட்டை மகளிர்

கொங்கு நாட்டுப் பட்டக்காரர்களுக்கு பட்டம் சூட்டும் போது கணவன்-மனைவி இருவருக்குமே ஒன்றாகவே விழாச் சடங்குகள் நடைபெறுகின்றன.

'பங்கேரு கத்தில்உதி லட்சுமி நிகர்த்தநல்
பத்தினி சமேதராகப்
பாங்குள்ள ஆறுகால் பீடத்தில் உட்கார்ந்து
பட்டத்து வாளாயுதம்
பதிசதிகள் இருவருக்குமே''

என்று முடிசூட்டுப் பாடல் கூறுகிறது. இதற்கேற்ப பழைய கோட்டை அரண்மனை மகளிரும் வீரம், கொடை, சமூக நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டு சிறப்பித்துள்ளனர். பழந்தமிழர்

''காணார் கேளார் கால்முடம் பட்டார்
பேணுநர் அற்றார் பிணிவாய்ப் பட்டார்''

ஆகியோருக்குச் செய்த பேருதவிகளை மணிமேகலை கூறுகிறது. பழைய கோட்டையிலும் ஒரு ''மணிமேகலை'' இருந்துள்ளார்.

ஒன்பதாவது பட்டக்காரர் பெரிய சர்க்கரை உத்தமக்காமிண்ட மன்றாடியார் மனைவியார் பெரியாத்தா. அவர்

'மனிதரில் கூன்குருடு நொண்டி சப்பாணியும்
மாடுஆடு நாய் பூனை அம்
மாதிரி இருப்பதும் சேர்ந்து அறுபதுக்கு நிதம்
மகிழ்ச்சியாய் இருவேளையும்
புனிதமுள ராகி சோளம் கம்பு ஏதாகிலும்
போட்டு இருமுடாக் கஞ்சியும்
பொரித்த கொள்ளுக் கூட்டும்''

வழங்கியதாகக் கருங்குமரப் புலவர் பாடியுள்ளார்.

நஞ்சையன் சர்க்கரையார் மனைவி வஞ்சியாத்தாள் விவசாயப் பணிகள் அனைத்தையும் குதிரை மீதேறிச் சென்று பார்வையிட்டு வந்தார். நஞ்சையன் சர்க்கரையார் இரவில் நாடு காவல் காரணமாகப்

''பட்டப் பகல்எலாம் தூங்குவாராம் - அவர்
பத்தினி பண்ணையம் பார்ப்பாராம்''
''நஞ்சையன் பத்தினி வஞ்சியாத்தாள் - அவர்
நல்ல குதிரைச் சவாரி செய்வார்
கஞ்சி ஒரு மிடா நித்தமும் காய்ச்சியே
காலையில் ஏழைகட்கு ஊற்றுவாராம்''

என்று பாடுகிறார் மடவளாகம் சிவராம தேசிகர்.

சம்பந்த சர்க்கரையார் மனைவியுடன் இராமப்பையனால் சங்ககிரிக் கோட்டையில் சிறை வைக்கப்பட்டார். அங்கு வந்து பாடிய வெற்றிவேல் புலவருக்குக் கொடை கொடுக்கப் பொருள் இல்லாததால் அவர் மனைவியார் புலவருக்குத் தன் தாலியையே கொடையாகக் கொடுத்தார்.

பெண்கள் பெயரால் ''கவுண்டச்சிபாளையம்'' போன்ற பல ஊர்கள் அழைக்கப்படுகின்றன.

கோயிலில் விளக்கு வைத்தல், திருப்பணி ஆகியவற்றில் பெண்களும் பலர் தம் பங்கைச் செலுத்தியுள்ளனர்.

'குறும்பிள்ளரில் காவலன் அரையன் மனைக்கிழத்தி
நாயகவிச்சி'

'காவலன் வளவர் மனைக்கிழத்தி சோழாண்டி'

'ஆளவந்தானான வீரராசேந்திர அதியமான் மனைக்
கிழத்தி சேறம்மை'

'சாத்தந்தை சிறியான் உடையான் மனைக்கிழத்தி
தாவன் தாவி'

'பெரியகோட்டையில் புத்தூருடையான் புள்ளகங்கன்
மனைக்கிழத்தி நீலம்பேரூர் கூடல்கிழான்
மகள் வடுகங் கோதை'

என்பவர்கள் அவர்களுள் சிலர். 'மனைக்கிழத்தி' என்ற பெயர் சிறப்புடையதாகும். தேவரடியார்களும் கோயிலுக்குக் கொடையளித்துள்ளனர்.

தேவரடியார் சடைமேலிருந்தாள்

'தேவரடியாரில் சாத்திபெற்றியான திருவிளக்குப் பிச்சி'

'தேவரடியாரில் அம்மையாண்டாள் ஆன சாத்தன் சீதேவி'

என்பவர்கள் அவர்களுள் சிலர்.

❊❊❊

# 37. மருத்துவம்

ஈரோடு மாவட்ட மருத்துவ வரலாறு மிகவும் தொன்மையானது. இம்மாவட்டத்தில் சித்தர்கள் கண்டுபிடித்துப் பயன்படுத்திய சித்த மருத்துவம், ஆயுர்வேதம், ஹோமியோபதி, யுனானி மருத்துவ முறை கள் வழக்கில் உள்ளன. பொதுவாக மக்கள் இம் மருத்து வத்தை 'நாட்டு மருத்துவம்' என்று அழைத்தனர்.

முன்பு தக்க விழிப்புணர்வு இல்லாததாலும் தகுந்த மருந்துகள் இல்லாததாலும் நோய்களினால் இறப்பு விகிதம் மிக அதிகமாக இருந்தது. கோவை மாவட்டத்தில்

காலரா - இறப்பு விகிதம்

| ஆண்டு | | இறந்தோர் |
|---|---|---|
| 1875 | - | 14220 |
| 1876 | - | 26933 |
| 1877 | - | 12528 |
| 1951 | - | 131 |

இப்போது பெரும்பாலும் இல்லை.

பிளேக்

| | | |
|---|---|---|
| 1921 | - | 4123 |
| 1923 | - | 3886 |
| 1943 | - | 4295 |
| 1949 | - | 7 |
| 1950 | - | 1 |

அம்மை

| | | |
|---|---|---|
| 1882 | - | 2075 |
| 1892 | - | 2676 |
| 1927 | - | 1173 |
| 1956, 1957, 1958 | } | 309 |

இறப்பு விகிதம் - 1000 நபருக்கு 1884இல் 96ஆக இருந்தது. இப்போது 6.7ஆகக் குறைந்துள்ளது (2000).

விடுதலைக்குப்பின் ஏற்பட்ட பல்வேறு மக்கள் நலப்பணிகளே இதற்கும் காரணம். 1871ஆம் ஆண்டு கொண்டு வரப்பட்ட நகராட்சி வளர்ச்சிச் சட்டம், ஸ்தல ஸ்தாபன நிதிச் சட்டம் ஆகியவற்றால் சுகா தாரப்பணிகளை மேற்கொள்ள வழி கிடைத்தது. 'தல நிதி மருத்துவ மனைகள்' (Local Fund Hospital) ஏற்படுத்தப்பட்டன. சுகாதாரப் பணிகளுக்கும் முன்னுரிமை தரப்பட்டது.

நகராட்சிகள் தெருக்களைச் சுத்தம் செய்தன. நீர்நிலைகளைத் தூய்மை செய்தன. 1884ஆம் ஆண்டு சட்டப்படி நகராட்சிகளால் விழாக் கள், சந்தைகள், பண்டிகைகள் மக்கள் கூடும் இடத்தில் நலப்பணிகள் மேற்கொள்ளப்பட்டன. சாக்கடை, குப்பைத் தொட்டி, கழிப்பறைகள், ஆடு வெட்டும் இடங்கள் ஆகியவற்றிலும் கவனம் செலுத்தப்பட்டது. 1923ஆம் ஆண்டு ஈரோடு, தாராபுரம் ஆகிய நகராட்சிகளில் நகர்நல அலுவலர்கள் நியமிக்கப்பட்டனர். 1928இல் 'பிளேக்' இன்ஸ்பெக் டர்கள் நியமிக்கப்பட்டனர். குடிதண்ணீரைப் பாதுகாக்கவும் சாக்கடை யைச் சுத்தம் செய்யவும் 1947இல் தனிச்சட்டம் இயற்றப்பட்டுச் செய லாக்கப்பட்டது. மக்கள் கொடிய நோய்களைக் 'கொள்ளை நோய்கள்' என்று அழைத்தனர்.

1954ஆம் ஆண்டு புதியதாக ஏற்படுத்தப்பட்ட கீழ்பவானித் திட்டப்பகுதிகளில் குறிப்பாக ஈரோடு, பவானி, பெருந்துறை, சித் தோடு, சென்னிமலைப் பகுதிகளில் கடுமையான மலேரியா பர வியது. இதற்கெனத் தமிழக அரசு தனி நடவடிக்கை எடுத்தது. 1958ல் தேசிய மலேரியா ஒழிப்புச் சட்டப் பணிகளின் மூலம் அனேகமாக மலேரியா மறைந்தது. 1951இல் தொடங்கப்பட்ட முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் மருத்துவப் பணிகளுக்காகப் பெரும் தொகை ஒதுக்கப் பட்டது.

1979இல் ஈரோடு மாவட்டம் ஏற்பட்டது. ஆனால் 1972லேயே மாவட்ட மருத்துவமனைப் பணிகள் இங்கு தொடங்கப்பட்டுவிட்டன.

கோவை நகரில் இருந்த மாவட்ட மருத்துவமனை மருத்துவக்கல்லூரி மருத்துவமனையாக மாற்றப்பட்டதால் ஈரோட்டில் மாவட்டத் தலைமை மருத்துவமனை தொடங்கப்பட்டது.

ஈரோடு மாவட்டத்தில் 10 அரசு ஆங்கிலமுறை மருத்துவ மனைகளில் நோயாளிகளுக்கு 1145 படுக்கைகள் உள்ளன. 66 ஆரம்பசுகாதார மையங்களும் 412 துணை சுகாதார மையங்களும் இதர மருத்துவ நிறுவனங்கள் 912ம் உள்ளன (2000). இவற்றில் 258 மருத்துவர்களும் 242 செவிலியரும் உள்ளனர்.

10 இந்திய மருத்துவமனைகளும் இரண்டு மருந்தகங்களும் 30 ஆரம்பசுகாதார நிலையங்களும் 25 படுக்கைகளும் 30 மருத்துவர் களும் 3 செவிலியர்களும் உள்ளனர். ஹோமியோபதி மருத்துவர் ஒருவர் உள்ளார். ஐந்து படுக்கைகளும் உள்ளன. குன்னத்தூர் தாளப்பதியில் வெறிநாய்க்கடிக்கு சிகிச்சை தரப்படுகிறது.

## பெருந்துறை காசநோய் மருத்துவமனை

பெருந்துறையில் மேற்கே 300 மீட்டர் உயரமுள்ள தூய காற் றோட்டமுள்ள இடத்தில் 'இராமலிங்கம் காசநோய் மருத்துவமனை' உள்ளது.

1933ஆம் ஆண்டு கவர்னர் ஜெனரல் வெலிங்டன் பிரபு காச நோய் ஒழிப்பு அவசியம் பற்றி மிகவும் வலியுறுத்தினார். தனி மருத்துவ மனைகள் தொடங்குமாறு கூறினார்.

கோவை மாவட்ட ஆட்சியர் ஏ.சி. வுட் ஹவுஸ் அதற்கு உரிய நடவடிக்கைகளை எடுக்கத் தொடங்கினார். 1935ஆம் ஆண்டு ''கோய முத்தூர் மாவட்ட காசநோய் மருத்துவமனைக் குழு' என்ற குழுவை மாவட்ட ஆட்சியர் அமைத்தார். அக்குழுவில் வி.சி. வெள்ளியங்கிரிக் கவுண்டர், நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக்காமிண்ட மன்றாடியார், சி.எஸ். இரத்தின சபாபதி முதலியார், டி.ஏ. இராமலிங்கம் செட்டியார், பி.சி. சாத்தப்ப செட்டியார், வி.எஸ். செங்கோட்டையா, ஏ. வேணு கோபாலப் பிள்ளை, எஸ். வின்சென்ட் ஆகியோர் இடம் பெற்றிருந்தனர்.

அப்போது கொண்டாடப்பட்ட ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் முடி சூடிய வெள்ளிவிழா நிதி ரூபாய் 60000 இருந்தது. குழுவில் இருந்த

பலர் நிதி உதவியுடன், சில கட்டிடப் பகுதிகளையும் கட்டித் தருவதாக வாக்களித்தனர். சென்னை மாநில அரசு, இந்தியத் தேயிலைக் குழு, அஞ்சல் துறை, டாட்டா எண்ணெய்த் தொழிற்சாலை, தேயிலை - காப்பித் தோட்ட அதிபர்கள், நகராட்சிகள் ஆகியவையும் நிதி உதவி செய்து தாங்கள் பரிந்துரைப்போருக்குப் படுக்கைகள் ஒதுக்கக் கோரினர்.

மருத்துவமனைக்குரிய ஆணைகளை அரசு 13.8.1936; 22.11.1937இல் பிறப்பித்தது. மருத்துவமனை உருவானது.

## ஈரோட்டில் பழைய தனியார் மருத்துவமனைகள்

1897இல் ஈரோட்டிற்குக் கிறித்துவ சமயப்பணிக்காக வந்த ஆஸ்தி ரேலிய A.W. பிரப் பாதிரியார் (இலண்டன் மிஷன்) 1909ல் ஒரு மருத்துவமனை ஏற்படுத்தினார். முதலில் இஸ்லாமியப் பெண்களுக் காகத் தொடங்கப்பட்டதால் கோஷா ஆஸ்பத்திரி என்று அழைக்கப் பட்டு, 1961ல் தென்னிந்தியத் திருச்சபை மருத்துமனை ஆனது. அவரே சென்னிமலையில் 1922ல் போரில் இறந்த தன் மகன் ஹெர் பர்ட் பிரப் நினைவாக மருத்துவமனையைத் தொடங்கினார்.

'வைத்திய வள்ளல்' என்று பெயர் பெற்ற ஈ.வெ. கிருஷ்ணசாமி நாயக்கர் (தந்தை பெரியாரின் மூத்த சகோதரர்) தன் தந்தை வெங்கட நாயக்கர் பெயரால் தர்ம வைத்திய சாலையை 14.9.1934 அன்று ஈரோடு கச்சேரி வீதி 42ஆம் எண் இல்லத்தில் தொடங்கினார். இதனை நீலம்பூர் மகாராஜா தொடங்கி வைத்தார்.

15.9.1935 முதல் 14.9.1936 வரை ஓராண்டில் 5775 ஆண்கள், 2695 பெண்கள், 3256 ஆண் குழந்தைகள் மற்றும் 1733 பெண்குழந் தைகளுக்கு இலவச சிகிச்சையை அந்த மருத்துவமனை அளித்தது.

## மருத்துவக் கல்வி

1924ஆம் ஆண்டு கோயமுத்தூரில் இந்திய மருத்துவப்பள்ளி தொடங்கப்பட்டு LMP பட்டம் அளித்தது. ஆனால் அப்பள்ளி 1930இல் மூடப்பட்டது. 1933இல் ஈரோடு 'கோஷா ஆஸ்பத்திரி' செவிலியர் பயிற்சிப் பள்ளியைத் தொடங்கியது. 1955இல் அரசு அப்பள்ளியை அங்கீகரித்தது.

அண்மையில் ஈரோடு மாவட்டத்தில் பல செவிலியர் பயிற்சிப் பள்ளி, மருந்தாளுநர் கல்லூரி, முடநீக்கியல் கல்லூரி தொடங்கப்பட்டுள்ளன. ஒருங்கிணைந்த பல்துறை மருத்துவக்கல்லூரியும் உள்ளது.

தமிழகப் போக்குவரத்துக் கழகங்கள் சார்பில் ஐ.ஆர்.டி.டி. மருத்துவக் கல்லூரி பெருந்துறை காசநோய் மருத்துவமனை வளாகத்தில் தொடங்கப்பட்டுள்ளது.

## கால்நடை மருத்துவம்

ஈரோடு மாவட்டத்தில் தொன்று தொட்டே கால்நடை வளம் மிகச் சிறந்து விளங்கியுள்ளது. ஈரோடு மாவட்டத்தில் உள்ள கால்நடைகளின் எண்ணிக்கை வருமாறு (2001)

| | |
|---|---|
| பசு | - 377354 |
| எருமை | - 231225 |
| செம்மறியாடு | - 526470 |
| வெள்ளாடு | - 445217 |
| பன்றி | - 7326 |
| குதிரை | - 1049 |
| கோழி | - 4557726 |

இம்மாவட்டத்தில் தற்போது வாத்து, ஈமு கோழி, முயல், புறா ஆகியனவும் வேறு சில பறவையினங்களும் வளர்க்கப்படுகின்றன.

2 முதன்மை மருத்துவமனைகளும் 10 மருத்துவமனைகளும் 68 மருந்தகங்களும் 4 நடமாடும் மருத்துவமனைகளும் 2 வெக்கை தடுப்புக் குழுக்களும் 90 கிளை மருத்துவ நிலையங்களும் கால்நடைகளுக்காக ஈரோடு மாவட்டத்தில் உள்ளன.

பழையகோட்டைப் பட்டக்காரர்கள் மரபுபற்றிப் பாடிய பாடல்களில் கால்நடை மருத்துவக் குறிப்புகள் பல உள்ளன. 'மாட்டு வாகடம்' என்ற கால்நடை மருத்துவ ஏடுகள் பல கிடைத்துள்ளன.

***

# 38. போக்குவரத்தும் தகவல் தொடர்பும்

## சாலைப் போக்குவரத்து

கி.பி. 7ஆம் நூற்றாண்டு ஈரோடு மாவட்ட இலக்கியமான பெருங்கதை 'நாட்டுப் பெருவழி', 'காட்டுப் பெருவழி' என்ற இரண்டைக் கூறுகிறது. இடைக்காலத்தில் பாலக்காட்டுக் கணவாயிலிருந்து கரூர் நோக்கிச் சென்ற 'இராசகேசரிப் பெருவழி' 'கொங்குப் பெருவழி' கூறப்படுகிறது. அது கரூர் - காங்கயம் வழியாகச் சென்றது.

தாராபுரம், காங்கயம், ஈரோடு, பவானியை இணைக்க ''கொங்கு குலவல்லி வழி'' இருந்தது. தாராபுரம் - கரூருக்கு இரண்டு வழிகள் இருந்தன. அவை தளவாய்ப்பட்டணம், காரத்தொழு வழியாகச் சென்ற ''காரித்துறைப் பெருவழி'' மற்றும் கன்னிவாடி, மூலனூர் வழியாகச் சென்ற ''பாலப் பெருவழி''யாகும்.

நாயக்கர், மைசூர் உடையார் காலங்களில் ஈரோடு மாவட்டத்திலிருந்து கர்நாடகம் செல்ல காவேரிபுரம் வழியாகவும், பர்கூர் வழியாகவும், திம்பம் வழியாகவும் மொத்தம் மூன்று பாதைகள் இருந்தன. டணாயக்கன் கோட்டையிலிருந்து இராணுவம் செல்ல ஒரு பாதை இருந்தது. அது பிற்காலத்தில் ''சுல்தான் வழி'' எனப்பட்டது. காவேரிபுரம் வழி மேட்டூர் அணையில் மூழ்கி விட்டது.

பிற்காலத்தில் முருங்கத்தொழுக் கல்வெட்டில் அறச்சலூர் வழியும் வெள்ளோட்டு வழியும், வெள்ளோட்டுக் கல்வெட்டில் ஈரோடு வழியும், நசியனூர்க் கல்வெட்டில் திண்டல் இட்டேரியும் குறிக்கப்படுகின்றன. இட்டேரியைச் சில கல்வெட்டுக்கள் இட்டடல் என்றும் அழைக்கின்றன.

1800இல் கும்பினியாட்சி ஏற்பட்டவுடன் சாலைகள் மூன்று பிரிவுகளாக நிர்வகிக்கப்பட்டன. அவை மராமத்து ரோடுகள், நீண்ட ரோடுகள், இராணுவ ரோடுகள் எனப்பட்டன. பின்னர் பொதுப்பணித் துறையே சாலைகளை நிர்வகித்தது. நிலவரியில் சாலை பராமரிப்புக்கு

2% ஒதுக்கப்பட்டது. பின்னர் அது ரூபாய்க்கு அரையணா ஆயிற்று 1900ஆம் ஆண்டு அது 25% ஆனது. 1879இல் பொதுப்பணித்துறை சாலைகளை உள்ளூராட்சி நிறுவனங்களிடம் ஒப்படைத்தது. உள்ளூ ராட்சிகள் சாலைப் பராமரிப்புக்குச் 'சுங்கவரி' வசூலித்தன. 1930-31ல் வாகனவரி விதிக்கப்பட்டவுடன் சுங்கவரி நீக்கப்பட்டது. 1937இல் 'மார்க்கெட்டிங் ரோடு' என சில அழைக்கப்பட்டு அவற்றிற்கு 50% மானியம் பராமரிப்புக்கு அரசு அளித்தது.

1946இல் ''யுத்தத்தின் பின் வளர்ச்சித் திட்டம்'' மேற்கொள்ளப் பட்டது. அதன் ஒரு பிரிவாக நீண்ட தூர சாலைப்பராமரிப்புப் பிரிவு ஏற்படுத்தப்பட்டு ''நெடுஞ்சாலைத்துறை'' என அது அழைக்கப் பட்டது. அதுவே, இன்று தனித்துறையாகச் சாலைகளை நிர்வகித்து வருகிறது. துறை வளர்ச்சி பெற்றது. சாலை, பாலம் அமைத்தல் பராமரிப்புப் பணிகள், மிகச் சிறப்பாக நடைபெறுகின்றன.

### ஈரோடு மாவட்டத்தில்

தேசிய நெடுஞ்சாலை - 137.20 கி.மீ

(NH67 கோவை-நாகை; NH47 கொச்சி-சென்னை) அண்மையில் கோவை - மைசூர் சாலை தேசிய நெடுஞ்சாலையாக (NH209) அறி விக்கப்பட்டுள்ளது.

மாநில நெடுஞ்சாலை - 3783.25 கி.மீ
நகராட்சி சாலைகள் - 402.979 கி.மீ
நகரப்பஞ்சாயத்து, நகரியச்சாலை - 1783.182 கி.மீ
ஊராட்சி ஒன்றியம் மற்றும் ஊராட்சி சாலை - 4318.095 கி.மீ

### படகுப் போக்குவரத்து

ஊராட்சிக்கோட்டை, பிராமணப் பெரிய அக்கிரகாரம், காசி பாளையம் ஆகிய கிராம எல்லையில் காவிரியிலும், தாராபுரத்தில் அமராவதியிலும் படகுப் போக்குவரத்து நடைபெறுகிறது. பவானி யாற்றிலும் படகுப் போக்குவரத்து நடைபெற்றதை 'ஓடத்துறை' என்ற ஊர்ப் பெயரால் அறிகின்றோம். பாலங்கள் பல ஏற்பட்டதால் படகுப் போக்குவரத்துக் குறைந்தது.

## வாகனங்கள்

ஈரோடு மாவட்டத்தில் பதிவு செய்யப்பட்ட வாகனங்கள் வணிகப் பயன்பாடு - 424290 வாகனங்கள், வணிகம் அல்லாப் பயன்பாடு - 468406 வாகனங்கள் என நெடுஞ்சாலைத்துறை அறிவித்துள்ளது.

## இரயில் போக்குவரத்து

சங்ககிரி - போத்தனூர் இரயில் ஈரோடு வழியாக 12.5.1862 முதல் விடப்பட்டது. ஈரோடு - திருச்சி ரயில் கொடுமுடி வழியாக 1.1.1868 முதல் விடப்பட்டது. போத்தனூர் இரயிலை "தென்னிந்திய ரயில்வே கம்பெனி" (SIR) இயக்கியது. திருச்சி இரயிலை "மெட்ராஸ் ரயில்வே கம்பெனி" இயக்கியது.

இரண்டும் அகலப்பாதையாக இருந்தன. 1879இல் திருச்சிப் பாதை குறுகிய பாதையாக மாற்றப்பட்டு 1929இல் மீண்டும் அகலப் பாதை ஆக்கப்பட்டது. மெட்ராஸ் இரயில்வே கம்பெனியை தென்னிந்திய இரயில்வே கம்பெனி விலைக்கு வாங்கிவிட்டது. 1945ஆம் ஆண்டு இந்திய அரசு தென்னிந்திய இரயில்வே கம்பெனியை ரூபாய் 1646703க்கு விலைக்கு வாங்கி 'தென்னக இரயில்வே' என்று பெயரிட்டது. அப்போது 'திராவிடன் இரயில்வே' என்று பெயரிட வேண்டும் என்று தந்தை பெரியார் போராடினார்.

ஈரோடு மாவட்டத்தில் ஈரோடு, பெருந்துறை தவிர தாராபுரம், காங்கயம், பவானி, கோபிசெட்டிபாளையம், சத்தியமங்கலம் ஆகிய 5 வட்டங்களில் இரயில்பாதையோ இரயில் போக்குவரத்தோ இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஈரோடு மாவட்டத்தில் 11 இரயில் நிலையங்களும் 90 கிலோ மீட்டர் தூரம் இரயில் பாதையும் உள்ளன. சென்னை - கோவை இரயில்பாதை ஈரோடு வழியாக இரட்டைப் பாதையாக உள்ளது.

இக் குறையைப் போக்க மேட்டூர் - சத்தியமங்கலம் இரயில் பாதையும், ஈரோடு - நஞ்சன்கூடு இரயில்பாதையும் சாம்ராஜ் நகர், சத்தியமங்கலம், கோபிசெட்டிபாளையம், பழனி இரயில் பாதையும்

அமைக்கத் திட்டமிடுமாறு 7.9.1931 அன்றும் 28.9.49 அன்றும் ஆணையிடப்பட்டன. (P.W. - Railway Go.No 2263; 3644) பின் இத் திட்டப்பணிகள் அளவிடுதல் மேற்கொள்ளப்பட்டு நிறுத்தப்பட்டன. இப்போது இப்பாதைகளுள் சில சிறிது மாற்றத்தோடு அமைக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. ஈரோடு - பழனி இரயில் பாதையும் அமைக்க முயற்சி மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

## சத்திரங்கள்

ஈரோடு மாவட்டத்தில் முன்பு வழிப்போக்கர், வணிகர்கள் தங்கும் சத்திரங்கள் பல இருந்தன. அவை இரு வகைகளாக இயங்கின. சில உணவு வசதியுடன் இருந்தன. மற்றும் சில தங்குவதற்கு மட்டும் பயன்பட்டன.

## சத்திரங்கள் (தேவைப்பட்டால் உணவு வசதி)

| | | |
|---|---|---|
| அந்தியூர் | கோபிசெட்டிபாளையம் | பெருந்துறை |
| ஊத்துக்குளி | கொடுமுடி | வெள்ளகோயில் |
| காங்கயம் | திம்பம் | |
| சத்தியமங்கலம் | பவானி | |

## சத்திரங்கள் (தங்குவதற்கு மட்டும்)

| | | | |
|---|---|---|---|
| அத்தாணி | ஊதியூர் | தாளவாடி | மலையம்பாளையம் |
| கண்ணபுரம் | குண்டடம் | திம்பம் | நம்பியூர் |
| காங்கயம் | சத்தியமங்கலம் | தலைமலை | நெருஞ்சிப்பேட்டை |
| கொத்தமங்கலம் | சிவமலை | பண்ணாரி | மூலனூர் |
| விசயமங்கலம் | ஹாசனூர் | ஈரோடு | |

ஊதியூரிலும் மூலனூரிலும் பங்களாக்கள் என இவைகளை அழைத் தனர். வட்டக்கழகம், மாவட்டக்கழகப் பொறுப்பில் இவை இருந்தன. பெரும்பாலும் இவை வணிக வழியிலேயே இருந்தன. ஒவ்வொரு கிராமத்திலும் பொதுப்பயன்பாட்டிற்கெனச் சாவடிகள் இருந்தன. பல்வேறு வசதிகளுடன் தங்கும் வாடகை விடுதிகள் ஏற்பட்டதும் சத்திரங்களின் பயன்பாடு படிப்படியாகக் குறைந்தது. காங்கயம்

சத்திரத்தில் பள்ளிக்கூட வகுப்புகள் நடைபெற்றன. மற்ற இடங்களில் அழிந்து விட்டன. அல்லது அழியும் நிலையில் உள்ளன.

**மின்சாரம்**

விவசாயத்திற்கும் தொழிலுக்கும் இன்று இன்றியமையாது வேண்டியது மின்சாரம் ஆகும்.

தமிழ்நாட்டில் பைகாரா (1933), மேட்டூர் (1937), பாபநாசம் (1941) ஆகிய இடங்களில் நீர்மின் சக்தியால் மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறது. இம்மூன்று இடங்களிலும் மின்சார உற்பத்தியைத் தொடங்கிய பெருமை மின்துறை தலைமைப் பொறியாளர் ஹென்றி ஹோாவேர்டு அவர்களையே சாரும்.

இம்மூன்று இடங்களிலும் உற்பத்தியாகும் மின்சாரம் ஈரோட்டுக்கு அனுப்பப்பட்டு ஒருங்கிணைக்கப்பட்டு கட்டுப்பாட்டு அறை மூலம் மாநிலமெங்கும் பகிர்ந்தளிக்கப்பபடுகிறது. முன்பு அரசுத்துறையாக இருந்த மின்துறை தன்னாட்சியுடன் மின்வாரியமாக அமைக்கப்பட்டுள்ளது. சென்னை தலைமையிடம் தவிர ஈரோட்டிலும் மதுரையிலும் மட்டுமே பெரிய நிறுவனம் உள்ளது.

மாவட்டத்தில் பல இடங்களில் துணை மின் நிலையங்கள் அமைக்கப்பட்டுள்ளன. செக்கானூர், நெருஞ்சிப்பேட்டை, கோனேரிப் பட்டி, ஊராட்சிக்கோட்டை, சமய சங்கிலி, வெண்டிபாளையம் ஆகிய இடங்களில் காவிரியில் தடுப்பணைகட்டி மின்சாரம் எடுக்கப்படு கிறது. இவ்வாறு மின்சாரம் தயாரிப்பதில் இந்தியாவிலேயே ஈரோடு மாவட்டம் இரண்டாவது இடம் வகிக்கிறது. இதற்காக நான்கு இடங் களில் துணை மின் நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஆப்பக் கூடல் சக்திநகர் சக்தி சர்க்கரை ஆலையும், சத்தியமங்கலம் ஆலத்துக் கோம்பை பண்ணாரியம்மன் சர்க்கரை ஆலையும் மின்சாரம் உற்பத்தி செய்து தங்கள் பயன்பாட்டுக்குப் போக மீதி மின்சாரத்தை மின் வாரியத்திற்கு அளிக்கின்றன. ஒரு தனிமனிதனின் மின்சாரப் பயன்பாட்டு அளவைக் கொண்டே ஒரு நாட்டின் முன்னேற்றம் கணிக் கப்படுகிறது.

## தபால் - தந்தி வசதி

இன்றைய தபால் அலுவலக முறையை ஒத்த அமைப்பை ஷெர்ஷா உருவாக்கினார் என்பர். மைசூர் உடையார் சிக்கதேவராசா (1673-1704) '18 சாவடிகள்' என்ற பெயரில் 18 இலாக்காக்களை ஏற்படுத்தினார். அதில் 'நிருப சாவடி' என்பது தபால் துறையாகும். அரசு தபாலுடன் தனியார் தபால்களையும் அது எடுத்துச் சென்றது. தபால்காரர் குற்றப் புலனாய்வுப் பணிகளையும் மேற்கொண்டார்.

ஈரோடு மாவட்டத்தில் தபால் பெறுதல் - வழங்குதல் பணியை மட்டும் செய்யும் தபால் நிலையங்கள் 393; தபாலும் - தந்தியும் அனுப்பும் வசதியுடைய தபால் நிலையங்கள் 228; வைக்கப்பட்டுள்ள தபால் பெட்டிகள் 3005 ஆகும்.

தொலைபேசி இணைப்பகங்கள் 105; பொது அழைப்புத் தொலைபேசிகள் 3564; பயன்பாட்டில் உள்ள தொலைபேசிகள் 170529 ஆகும். 'இன்டர்நெட்' வசதியும் பரவலாக்கப்பட்டுள்ளது. உலகின் எந்த மூலைக்கும் இருந்த இடத்திலிருந்தே தொடர்பு கொள்ள லாம். 'செல்போன்' எனப்படும். அலைபேசி பல இலட்சக்கணக்கில் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

தனிப்பட்ட பல நிறுவனங்களின் 'தூதஞ்சல்' எனப்படும் கூரியர் தபால் பணியும் சிறப்புடன் இயங்கி வருகிறது. லாரி போக்குவரத்தில் தமிழகத்தில் மிக முக்கியமான ஊர்களில் ஈரோடும் ஒன்று.

***

# 39. சட்டமும் ஒழுங்கும்

நாடாண்ட அரசர்கள் மக்கள் தலைவராக, காவலராக இருந்த காரணத்தால் இறை, காவலன் என்று அழைக்கப்பட்டனர். அரசனின் நல்லாட்சிக்கு அமைச்சரும் ஐம்பெருங்குழுவும் எண் பேராயமும் இருந்தனர். அரசனே நேரடியாகவும் நீதி வழங்கினான். மாறு வேடத்தில் சென்று குறைகண்டு களைந்த அரசர்களும் உண்டு.

இருவரிடையே வழக்கு ஏற்பட்டால் ஆட்சி (Right), ஆவணம் (Record) அயலார்காட்சி (Witness) மூன்றையும் கவனித்துத் தீர்ப்பு வழங்க வேண்டும் என்று பெரியபுராணம் கூறுகிறது. முன்பு ஐந்து பேர் சேர்ந்து ஆய்ந்து தீர்ப்புகள் அளித்தனர். ''பஞ்சாயத்து'' என்ற சொல் அதிலிருந்து எழுந்ததே. இடைக்காலத்தில் ''மத்யஸ்தர்'' 'நடு விருக்கை' என்ற அலுவலர்கள் வழக்குகளை விசாரித்தனர். ஊர்ப் பொதுமக்கள் ஒன்று கூடித் தீர்ப்பளித்த 'மக்கள் நீதிமன்றம்' பற்றிய ஆவணங்களும் உண்டு.

கோயிலுக்குரிய மேல்வாரம் கொடுக்காவிட்டால் ''மண்கலம் தகர்த்து வெண்கலம்'' பறிக்கும் வழக்கம் (ஜப்தி) இருந்தது. ''தலை வாசல் மறியல், தண்ணிக்கிணத்து மறியல்'' என்று ஆணையிடுவதும் உண்டு. அது வீட்டு வாயிலைத்தாண்டி தெருவுக்கு வரக்கூடாது. ஊர்ப் பொதுக்கிணற்றில் தண்ணீர் எடுக்கக்கூடாது என்ற தண்டனை யாகும்.

ஊரைப் பாதுகாப்பாகக் காக்க ''தந்திரிமார்'' என்ற படையினர் இருந்தனர். நாட்டைக் காக்கின்ற தலைவனுக்குப் ''பாடிகாவல் வரியும்'' காவல்காரனுக்குக் ''காவல்வரியும்'' அளிக்கப்பட்டது. உறுப்புக் குறைத்தலும் தூக்குத் தண்டனையும் கூட இருந்தது. தூக்குத் தண்ட னைக்குத் 'தலைவிலை' என்று பெயர். பூந்துறை நாட்டார் ''அனி யாயம் அழிபிழை செய்தாரைக் கொன்றால் தலைவிலை இல்லை'' என்று சாத்தம்பூரில் கூடித் தீர்மானித்தனர்.

திப்பு சுல்தான் காலத்தில் 'இந்து, முஸ்லிம்' என இரு நடுவர் சேர்ந்து வழக்குகளை விசாரித்தனர். அவர்கள் முறையே 'க்வாசி', 'பண்டிட்' எனப்பட்டனர். கொங்கு நாட்டுப் பாளையக்காரர்கள் வரி கொடுக்காதவர்கள் தாராபுரம், சங்ககிரியில் சிறைவைக்கப்பட்டனர். ஐதர் காலத்தில் குற்றம் புரிவோரைத் தண்டிக்க ஆங்காங்கு 200 பேர் சவுக்குடன் இருப்பர். கிழக்கிந்தியக் கும்பினிக் காலத்தில் 'கோர்ட்டுகள்' ஏற்படுத்தப்பட்டன. 1804முதல் கோவை மாவட்டத் தலைநகராக இருந்தாலும் மாவட்ட நீதிமன்றம் 1828 வரை தாராபுரத்தில் இருந்தது. பெரும்பாலும் வழக்குகளை நிர்வாக அதிகாரிகளே விசாரித்தனர். பின்னர் நீதியும் - நிர்வாகமும் தனித்தனியாகப் பிரிக்கப்பட்டது. இப்போது கூட முக்கியமான குற்றவியல் நிகழ்ச்சிகளை 'வருவாய்த்துறை அலுவலர்' விசாரித்து அறிக்கை அனுப்பும் வழக்கம் உண்டு.

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் உயர்ந்த சட்டக்கல்வி இங்கிலாந்தில் ''பாரிஸ்டர்-அட்-லா'' என்று அளிக்கப்பட்டது. இலண்டனில் உள்ள 'பிரிவி கவுன்சில்' என்ற மன்றம் தான் இந்தியாவின் இறுதி நீதிமன்றமாக இருந்தது.

15.8.1947இல் விடுதலை பெற்ற நாம் சட்ட மேதை அம்பேத்கர் தலைமையில் சட்ட வல்லுநர் குழுவை அமைத்து நமக்கென தனி அரசியல் சட்டத்தை உருவாக்கி 26.1.1951 முதல் அமுல்படுத்தி வருகிறோம். அந்த அரசியல் சட்டத்தின் அடிப்படையிலேயே குற்றம் பதிவு செய்வதும் விசாரிப்பதும் தீர்ப்பளிப்பதும் நடைபெறுகிறது. சட்டம்படித்த வழக்கறிஞர்களைத் தவிர சாதாரணப் பொதுமக்களுக்கு இந்திய அரசியலமைப்புச் சட்டம் பற்றி எதுவுமே தெரியாத நிலை பெரும்பாலும் உள்ளது. ''144 தடைச்சட்டம்'' தவிர வேறு எந்தச் சட்டமும் சட்டத்தின் பிரிவும் மக்களுக்குத் தெரியாது.

ஒவ்வொரு காவல் நிலையத்திற்கும் அதிகார எல்லை உண்டு. கிராமம், நகரம், தாலுக்கா, மாவட்டம் என்ற படி நிலையில் காவல் நிலையங்கள் அமைந்துள்ளன. ஈரோடு மாவட்டத்தில் 49 காவல் நிலையங்கள் உள்ளன. 1229 காவலர்களும் 242 ஆயுதப்படைக் காவலர்களும் மாவட்டத்தில் உள்ளனர்.

விசாரணைக்காக குற்றம் சாட்டப்பட்டவர்களை அடைத்து வைக்கும் இடம் ''லாக்-அப்'' என்று கூறப்படும். ஈரோடு மாவட்டத்தில் ஏழு கிளைச் சிறைச்சாலைகள் உள்ளன. முக்கிய கைதிகளையும் இடம் இல்லாவிடினும் மற்ற கைதிகளையும் கோவை மத்திய சிறைக்கு அனுப்புவர். இப்போது மகளிர் காவலர்களும் நியமிக்கப்பட்டுள்ளனர். தனியாக ''அனைத்து மகளிர் காவல் நிலையமும்'' உண்டு. போக்கு வரத்து, மதுவிலக்கு, இலஞ்சம் இவைகளைக் கண்காணிக்கத் தனிப் பட்ட காவலர்களும் உண்டு.

காவலர், தலைமைக் காவலர், உதவி ஆய்வர், ஆய்வர், மாவட்டத் துணைக் காவல் தலைவர், மாவட்டக் காவல் தலைவர் என்ற நிலையில் மாவட்டக் காவலர்கள் இயங்குகின்றனர். காவலர் ஒருவரே காவல் நிலைய எழுத்தராகப் பணிபுரிவார். காவலர்கள் நடந்து கொள்ள வேண்டிய விதிமுறைகளும் சட்டத்தில் உண்டு.

பலதார மணம் கூடாது, குழந்தைத் திருமணம் கூடாது, கோயிலில் பலியிடுதல் கூடாது, சிறுவர்களைப் பணிக்கு அமர்த்தக் கூடாது, சாதியைக் கூறி இழிவுபடுத்தக் கூடாது, வரதட்சணை கேட்கக் கூடாது, லஞ்சம் வாங்கக் கூடாது, இலஞ்சம் கொடுக்கக் கூடாது, பொது இடத்தில் மற்றவர்களுக்கு இடையூறு செய்யும் செயல்களைச் செய்யக் கூடாது, அனுமதியின்றி ஊர்வலம், பொதுக்கூட்டம் நடத்தக் கூடாது, வாகனங்களில் அனுமதிக்கப்பட்ட அளவுக்கு மேல் ஏற்றக் கூடாது, அனுமதியில்லாமல் துப்பாக்கி வைத்துக் கொள்ளக் கூடாது, பொய்க்கையெழுத்துப் போடக் கூடாது, அரசு அதிகாரிகள் பணிக்கு இடையூறு செய்யக் கூடாது, கோயிலில் பொது இடங்களில் குடிநீர் ஆதாரங்களில் தாழ்த்தப்பட்டவர் உரிமையை மறுக்கக் கூடாது, வரி ஏய்ப்புச் செய்யக்கூடாது, வருமானத்திற்கு மேல் சொத்து சேர்க்கக் கூடாது என்று பல்வேறு வகைப்பட்ட சட்டங்கள் உள்ளன. போக்கு வரத்து விதிகளை மீறுவதும் குற்றமாகும்.

இந்திய அரசியலமைப்புச் சட்டம் தவிர மாநிலச் சட்டமன்றம் தேவையான சட்டங்களை இயற்றிக் கொள்ளலாம். இந்திய அரசிய

லமைப்புச் சட்டத்தில் பாராளுமன்றம் வேண்டிய திருத்தங்களைச் செய்து கொள்ளலாம். அதற்கு மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர்கள் ஆதரவு வேண்டும். இதுபோல் வேண்டுமான புதுச் சட்டங்களையும் இயற்றிக் கொள்ளலாம். மாநிலம் இயற்றும் சட்டங்கள் மாநில எல் லைக்குள் மட்டுமே அமுலாகும்.

ஈரோட்டில் முன்பு 'கச்சேரி' என்று 'கோர்ட்' அழைக்கபட்டது. இன்றும் கச்சேரி வீதி என்று அவ்வீதி வழங்கப்படுகிறது. ஈரோடு நகரில் வழக்குகளை விசாரிக்கப் பல்வேறு நீதிமன்றங்கள் உள்ளன.

1) மாவட்டத் தலைமை நீதிமன்றம்
2) கூடுதல் மாவட்டத் தலைமை நீதிமன்றம்
3) குற்றவியல் நடுவர் நீதிமன்றம் 1, 2, 3
4) தலைமைக் குற்றவியல் நடுவர் நீதிமன்றம்
5) விரைவு நீதிமன்றம்
6) சார்பு நீதிமன்றம்
7) கூடுதல் சார்பு நீதிமன்றம் I
8) கூடுதல் சார்பு நீதிமன்றம் II
9) நுகர்வோர் நீதிமன்றம்
10) தொழிலாளர் நல நீதிமன்றம்
11) மக்கள் நீதிமன்றம்
12) உரிமையியல் நீதிமன்றம்
13) கூடுதல் உரிமையியல் நீதிமன்றம் I
14) கூடுதல் உரிமையியல் நீதிமன்றம் II

சத்தியமங்கலம், கோபிசெட்டிபாளையம், பவானி, பெருந்துறை, காங்கயம், தாராபுரம், கொடுமுடி ஆகிய இடங்களிலும் நீதிமன்றங்கள் உள்ளன. ஈரோடு மாவட்டத்தில் ஏறக்குறைய 1500 வழக்கறிஞர்கள் உள்ளனர். வழக்கறிஞர் சங்கங்கள் இரண்டு உள்ளன. ஈரோடு மாவட் டத்தைச் சேர்ந்த பலர் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதிகளாக நியமிக்கப் பட்டுள்ளனர். பலர் உயர்நீதிமன்ற வழக்கறிஞர்களாகப் பணி புரிகின்றனர்.

❊❊❊

# 40. மக்கள்

''ஒரு நாடு வளமுள்ள நாடாக இருந்தாலும் காடாக இருந்தாலும் மேடாக இருந்தாலும் பள்ளமாக இருந்தாலும் மக்கள் நல்லவர்களாக இருத்தல் வேண்டும். அதுவே நல்ல நாட்டுக்கு அடையாளம்'' என்று சங்கப்புலவர் அவ்வையார் பாடினார். அதுபோல ஈரோடு மாவட்ட மக்கள் மனித சமுதாயம் தொடங்கிய நாளிலிருந்து நல்லவர்களாக, வல்லவர்களாக வாழ்ந்து மற்றவர்களுக்கு வழிகாட்டியாகவும் வாழ்ந் துள்ளனர்.

தளரா ஊக்கம் உடையவர்களாக, உழைக்கும் ஆற்றலும் புதுமை கண்டறியும் திறனும் உள்ளவர்களாக, பிறரை வாழ்வித்து தாமும் வாழும் தாராள சிந்தை உடையவர்களாக இம்மாவட்ட மக்கள் இருந் துள்ளனர். குழுவாக ஒன்று கூடி நாட்டுச் சபை அமைத்து, எல்லாச் சமூகத்தவர்களையும் அரவணைத்து, வந்தாரை வாழவைத்து, அன்பு காட்டி சகோதர பாசத்துடன் என்றும் இருப்பவர்கள் ஈரோடு மாவட்ட மக்கள்.

கங்கர், போசளர், விசயநகர அரசர், நாயக்கர்கள், மைசூர் உடை யாரும் ஆண்டு இம்மாவட்டத்தை விட்டு அகன்றாலும் அவர்கள் காலத்தில் குடியேறிய மக்களைத் தங்களுள் ஒருவராகவே மதித்து இருக்கச் செய்தவர்கள் இம்மாவட்ட மக்கள். தமிழக வடக்கு எல்லை யாக அங்கிருந்து வரும் முப்பெரும் கணவாய் வழிகளையும் மேற்கு எல்லையில் இரண்டு கணவாய்களையும் கொங்கு நாடு பெற்றிருப்ப தால் ஈரோடு மாவட்ட மக்களில் மூன்றில் ஒரு பகுதியினர் பிற மொழி யாளர்கள் என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

ஆளும் பேரரசர்கள் இப்பகுதியில் எவரும் இல்லையானாலும் 'தல சுய ஆட்சி முறையாக' சிறுசிறு நாட்டவைகளே நிர்வாகம் செய்யும் அரிய முறை இந்த மாவட்டத்துக்கே உரியதாக இருந்தது. சோழர், பாண்டியர், போசளர், விசயநகரப் பேரரசு கோலோச்சிய போது

"பூந்துறை நாட்டோம்", "வடபரிசார நாட்டோம்" என்று நாட்டுச் சபையார் கூறிக்கொண்டு நிர்வாகம் செய்ததை இம்மாவட்டக் கல்வெட்டுக்கள் பலவற்றில் காணலாம். இதன் சீரும் சிறப்பும் கருதி எந்த அரசர்களும் தங்கள் ஆட்சியில் 'அந்த நாடாட்சி முறைக்கு' இடையூறு எதுவும் செய்யவில்லை.

நாடெங்கும் ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் சமூக நீதியையும் நிலைநாட்ட கொங்கு நாடெங்கும் கண்காணிக்க உருவான நான்கு பட்டக்காரர்களும் இம்மாவட்டத்திலேயே உள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## கொங்குப் பட்டக்காரர்கள்

கொங்கு வேளாளர் தலைவர்கள் 'பட்டக்காரர்கள்' என அழைக்கப் பெறுவர். பொள்ளாச்சி, உடுமலை வட்டத்தில் உள்ளவர்கள் பாளையக் காரர்கள், சேலம், நாமக்கல் மாவட்டத்தில் உள்ளோர் 'மிட்டாதாரர்கள்'.

## காடையூர் காங்கேய மன்றாடியார்

இவர்கள் பொருளந்தை குலத்தில் 'முழுக்காது' பிரிவைச் சேர்ந்தவர்கள். வாக்களிக்கப்பட்ட உரிமையைத் தர மறுத்து சகோதரர்களிடம் இஸ்லாமிய சர்தார் உதவியோடு அவற்றைப் பெற்றாள் பொருளந்தை குலத்து இளைஞன் காங்கேயனை மணந்த சேடகுலப் பெண் வெள்ளையம்மாள். வெள்ளையம்மாள் வழி வந்தவர்கள் முழுக்காது பிரிவைச் சேர்ந்தவர்கள். இவர்கள் "கொங்கு 24 நாட்டுக்கும் நற்குடி 48000 பசுங்குடி 12000 ஆகியோருக்கும் ஆலகோல 69 ஜாதிக்கும் பள்பறை 18 ஜாதிக்கும் மதாசார விசாரணை கர்த்தா" என்று ஒரு ஆவணத்தில் குறிக்கப்பட்டுள்ளனர்.

## காங்கயம் புதூர்ப் பல்லவராயர்

இவர்கள் கொங்கு வேளாளரில் செங்கண்ண குலம் சார்ந்தவர்கள். இவர்கள் முன்னோன் 'லிங்கண்ணன்' காங்கயம் பெருங்குடிகுல வேல் கவுண்டர் மகள் வெள்ளைப் பிள்ளையை மணந்து காங்கயத்தில் காணி பெற்றார். சோழன் வேண்டிக் கொள்ள பல்லவனை வென்றதால் இம்

மரபினர் பல்லவராயர் பட்டம் பெற்றனர். சொக்கநாத நாயக்கர் காலத்தில் ஈரோட்டில் வீற்றிருந்து கொங்கு நாட்டில் ஒரு பகுதியை நிர்வாகம் செய்துள்ளனர். அமராவதிப் பல்லவராயர் நாயக்கர் தளவாய் ரங்கா ரெட்டியாரால் ''கணவாய்ச் சீமையில் 18 கோட்டைகளின் தலைவராக'' நியமிக்கப்பட்டார்.

## பழைய கோட்டை சர்க்கரை மன்றாடியார்

இவர்கள் கொங்கு வேளாளரில் பயிரகுலத் தலைவர்கள். அனை வரும் இயற்பெயரோடு ''சர்க்கரை உத்தமக்காமிண்ட மன்றாடியார்'' என அழைக்கப்பட்டுள்ளனர். வேளாண்மைக்கு இவர்கள் ஆற்றிய பணி சிறப்புக்குரியது. 26ஆம் பட்டக்காரர் 'நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக்காமிண்ட மன்றாடியார் ''காங்கேயம் இனம்'' காளையை உரு வாக்கியவர். ஆனூரிலும், காரையூரிலும் தங்கிப் பட்டக்காரர்கள் இருந்து நிர்வாகம் செய்துள்ளனர். இவர்கள் மரபு பற்றி 45 புலவர்கள் பல பாடல்களைப் பாடியுள்ளனர். எல்லோருக்கும் இனிமையான செயல் செய்ததால் ''சர்க்கரை'' என்று பெயர் பெற்றனராம்.

## சங்கரண்டாம்பாளையம் வேணாடுடையார்

இவர்கள் கொங்கு வேளாளரில் பெரிய குலம் சார்ந்தவர்கள். வேள்+நாடு வேணாடு என ஆயிற்று. இவர்கள் முதல் வீட்டுக்காரர் என அழைக்கப் பெறுவர்.

''மூவேந்தர் கூடி முதல்வீடன் ஆம் எனவே
சீரார் முடிசூட்டி''

என்பது ஒரு பாடல் பகுதியாகும். குலோத்துங்க சோழனுக்கு அடங்காத வணிகர்களை அடக்கி 'செட்டி' பட்டம் பெற்றனர். சங்கரண்டாம் பாளையத்தின் பழைய பெயர் 'கொற்றனூர்'. சோழமன்னன் கொடுத்த ''பொன்னூஞ்சல் பூந்தேர்'' பெற்றவர்கள்.

## பிறபட்டக்காரர்கள்

வேட்டுவர் சமுதாயத்தில் தென்னிலை, திங்களூர் அப்பிச்சிமார் மடம் ஆகிய இடங்களில் பட்டக்காரர்கள் இருந்துள்ளனர். செங்குந்தர்

சமுதாயத்திலும் சிலர் பட்டக்காரர் என அழைக்கப்பட்டுள்ளனர். வேட் கோவர் சமுதாயத்தில் ஈரோடு, ஊத்தலூர், தாராபுரம் ஆகிய ஊர்களில் பட்டக்காரர்கள் உள்ளனர். வெள்ளோடு உலகுடையான், மூலனூர்த் தொண்டைமான், வள்ளி எறிச்சில் தொண்டைமான், பூந்துறை நண்ணாவுடையார் போன்றவர்கள் மதிப்புமிக்க ஆளும் தலைவர்கள்.

## வலங்கை இடங்கைப் பிரிவு

இவ்விரு பிரிவுகள் பற்றி செங்குந்தர் வெற்றிப் பட்டயம், ஆசாரிகள் வெற்றிப்பட்டயம், மல்லிகுந்தம் பட்டயங்கள் ஆகியவை முழுமையாகக் கூறுகின்றன. சேவூர்ப்பட்டயம், கன்னிவாடிப் பட்டயம், மோரூர் காங்கேயர் ஏடு, வேலூர்ச் செப்பேடு ஆகியவற்றில் சில குறிப்புக்கள் வருகின்றன. ஒரு சமூகத்திற்கு உரியதாக அறிவிக்கப் பட்ட சில பழக்கவழக்கங்கள், உரிமைகளை மற்ற சமூகத்தார் கையா ளும் போது எழுவதே வலங்கை-இடங்கைப் பிரிவு வழக்கு ஆகும். ஆளும் தலைவர்கள் ''பூர்வம் தீர்ந்த பட்டயம்'' பார்த்துத் தீர்ப்பளிப்பர். தோற்றவர்கள் அபராதமும் வென்றவர்கள் வெற்றிக்காணிக்கையும் அளிக்க வேண்டும்.

ஆசாரிகள் (தட்டார், கொல்லர், கன்னார், தச்சர், சிற்பியர்) செங்குந்தர், கம்பளத்தார், தேவேந்திரப்பள்ளர், நகரத்தார், மாதாரிகள், வன்னியர் ஆகியோர் இடங்கைப் பிரிவாகவும், கவறைச் செட்டிகள், சாணார், சேணியர் இவர்கள் வலங்கைப் பிரிவாகவும் கொங்கு ஆவணங் களில் கூறப்படுகின்றனர். 1799இல் கூட இவ்வழக்கு கொடுமுடியில் ஏற்பட்டதாகவும் இதனை பவானி கலெக்டர் மேக்ளியாட் தீர்த்து வைத்தார் என்றும் கோவை மாவட்டக் கையேடு கூறுகிறது.

## மக்கள் பெயரமைப்பு

11-13ஆம் நூற்றாண்டு கொங்குச் சோழர், கொங்குப் பாண்டியரின் ஈரோடு மாவட்டக் கல்வெட்டுக்களிலிருந்து அக்கால மக்கள் பெயர் அமைப்பு எவ்வாறிருந்தது என்பதை அறிய முடிகிறது.

ஆடவர்கள் பெற்றோர் வைத்த பெயர், அரசன் முதலியோர் கொடுத்த சிறப்புப் பெயர் ஆகியவற்றோடு சமய நம்பிக்கையுடன்

பிறையணி சடையன், பிறைசூடும் பெருமாள், எடுத்தகை அழகியான், அம்பலத்தாடுவான், கூத்தாடும் தேவன், மன்றுள் ஆடுவான் போன்ற பெயர்களைச் சிலர் பெற்றிருந்தனர். பெண்டிரும் சடைமேலிருந்தாள், சூடிக்கொடுத்தாள், பாகம்பிரியாள் என்ற பெயர்களைப் பெற்றிருந் தனர். சிலர் எல்லார்க்கும் நல்லான், காண இனிய பெருமாள், உலகை வலம் வந்தான் என்ற காரணப் பெயர்களைப் பெற்றிருந்தனர். அடி யார்க்கு நல்லான், நச்சினார்க்கு இனியன் என்ற பெயர்களும் கல் வெட்டில் காணப்படுகின்றன.

வேறு சிலர் பல்லவராயர், காடவராயர், கச்சிராயர், சேதிராயர், அதிகைமான், வாணாதிராயர், தொண்டைமான் என்ற பழைய மரபுப் பெயரைச் சிறப்புடன் பெற்றிருந்தனர். அம்மரபிற்கும் அவர்களுக்கும் தொடர்பு இருக்குமா என்பது ஐயமே. இதுவும் அரசர்கள் அனுமதி யுடன் அல்லது அரசனால் அளிக்கப்பட்டு அவர்கள் தங்கள் பெயராக அவற்றை இணைத்து வைத்துக் கொண்டிருக்கலாம்.

கொடுமலூர் பெரியதேவர் மகன் ''பெரியபிள்ளையான பெரிய தேவன்' என்று தந்தையின் பெயரையே சிலர் பெற்றுள்ளனர். சில பெண்கள் தந்தை பெயரையும் சில பெண்கள் கணவன் பெயரையும் தங்கள் பெயரோடு இணைத்து வைத்துக் கொண்டுள்ளனர். பெரிய நம்பி மகள் 'நம்பியம்மை' என்றும், சூரிய தேவன் மனைவி 'தேவன் சொக்கி' என்றும் பெயர் பெற்றுள்ளனர். அரசனுடைய மனைவியர் தேவியார், பிராட்டியார் என்றும், அந்தணருடைய மனைவியர் பிராமணி, பாரியாள், அகமுடையாள் என்றும் பிறருடைய மனைவிமார் மனைக் கிழத்தி, மணவாட்டி என்றும் பெயர் பெற்றுள்ளனர்.

கோவி, காவி, தேவி, தாவி என்பன சுருக்கமான சில பெண்கள் பெயர்கள். பல பெண்கள் பெயர் அந்தியூராண்டி, அவினாசியாண்டி, பல்லவாண்டி, சோழாண்டி, செங்கூத்தாண்டி, பாண்டாண்டி என 'ஆண்டி' விகுதி பெறுவதன் காரணம் விளங்கவில்லை. ''பாண்டிவேட்டுவன் புன்னத்தூரான் மகள் பாண்டாண்டி'' என அழைக்கப்பட்டுள்ளாள்.

## வரியில்லாத மக்கள்

குயவர், குறவர், சக்கிலியர் (தொட்டியச் சக்கிலியர், மதுரை சக்கிலியர், அனுப்பச் சக்கிலியர், கானக்காட்டுச் சக்கிலியர்) தொட்டியர்,

தொம்பர், பட்டர், பறையர், மறவர், வலையர் ஆகியோருக்கு வரி இல்லை. ஆனால் அவர்கள் 'ஏவின ஊழியம்' செய்ய வேண்டும். சம்பளம் இல்லாமல் ஊர்ப் பொதுவேலைகளையும் அரசாங்க (அரண்மனை) வேலைகளையும் செய்ய வேண்டும். அவ்வாறான பணி 'வெட்டி', 'அமஞ்சி' எனப்படும். (இன்று கூட பயனின்றி வேலை செய்பவரை 'வெட்டிவேலை' என்று கூறுகிறோம். அது 'அமஞ்சி' என்றும் கூறப் படும். அமஞ்சி செய்வோர் வாழ்ந்த இடம் 'அமஞ்சிக்கரை' இன்று 'அமைந்தகரை' என்று பிழையாகக் கூறப்படுகிறது).

காராளமாணிக்கி, படிக்காரப்புலவர், குறுப்பாண்டி, கூத்தாடி, முடவாண்டி இவர்களுக்கும் வரியில்லை. இருப்பினும் இவர்களுக்கு 'வெட்டி வேலை' இல்லை. அரண்மனை அமஞ்சியும் செய்ய வேண் டிய அவசியம் இல்லை.

## சமூக - சமய ஒருமைப்பாடு

ஈரோடு மாவட்டத்தில் சமூக ஒருமைப்பாடும் சமய நல்லிணக் கமும் எப்பொழுதும் இருந்துள்ளன. கொடுமுடி, நத்தக்காரையூர், காடையூர், பவானி போன்ற பல ஊர்களில் சிவாலய வளாகத்தின் எல் லைக்குள்ளேயே வைணவக் கோயில்கள் இன்றும் உள்ளன. ஈரோடு, கொடுமுடி போன்ற ஊர்களில் சைவ - வைணவக் கோயில்களுக்கு ஒரே கொடை அளிக்கப்பட்டுள்ளது.

''திருப்பாண்டிக் கொடுமுடியாளுடையார்க்கும்
பெரிய திருவடி நன்னாயனார்க்கும்''
''தொண்டீசுவரமுடைய தம்பிரானார்க்கும்
பள்ளிகொண்ட பெருமாளுக்கும்''

ஒரே கொடை அளிக்கப்பட்டுள்ளது. வேளாளர் சபையாகிய வெள்ளான் நாட்டாரும் வேட்டுவர் சபையாகிய பூலுவநாட்டாரும் இணைந்து பல ஊர்களில் கூட்டாகக் கொடையளித்துள்ளனர்.

சர்க்கார் பெரியபாளையம் மறவபாளையம் ஆகிய ஊர்களில் சிவன்கோயில் வருவாயிலிருந்து ''சமணசந்தியுள்ளிட்ட வெஞ்சனங் களுக்கும் செலவாக்க'' என்று கல்வெட்டில் எழுதப்பட்டுள்ளது. மறவ பாளையத்தில் சிவன் கோயில் கொடைக்குத் தீங்கு விளைவித்தவர்கள்

''மறுசென்மத்துக்கும் ஏழெட்டு சமணரை குத்திக் கொண்ண தோஷத்திலே போவானாக'' என்று கல்வெட்டில் வெட்டப்பட்டுள்ளது. சமணர்கள் இல்லாத ஊர்களில் உள்ள சமண சிலைகளையும் கோயில்களையும் ''அமணீசுவரர்'' என்ற பெயரில் சமணர் அல்லாதவர்கள் வணங்கி வருகின்றனர்.

காகம், காஞ்சிக்கோயில் கொங்கு வேளாளரில் கண்ண குலத்தார் ''இராவுத்தமார்'' என்ற இஸ்லாமியப் பெரியவரைக் குலதெய்வமாக வணங்குவதும் பறையர் சமூகம் சார்ந்த குப்பியண்ணன், வீரசாம்புவன் போன்றவர்களுக்கு கோயில்கட்டி வேளாளர்கள் வழிபடுவதும் காடையூர்க் காணி பெற உதவிய இஸ்லாமிய சர்தாருக்கு நன்றிக்கடனாக வெள்ளையம்மாள் மக்கள் முழுக்காது பிரிவினராக பொருளந்தை குலத்தில் அழைக்கட்டு இஸ்லாமியப் பழக்கவழக்கத்தைப் பின்பற்றியதும் சமய ஒருமைப்பாட்டுக்குச் சிறந்த எடுத்துக்காட்டுக்களாகும்.

## கொங்கு வேளாளர்

இவர்கள் 'காராளர்' என்றும் அழைக்கப் பெறுவர். ஈரோடு மாவட்டத்தில் இவர்கள் கொடைக் கல்வெட்டுக்களே அதிகம். விசயமங்கலம், குன்னத்தூர், திங்களூர், கீரனூர், பொன்னிவாடி முதலிய பல ஊர்களில் இவர்கள் தொடர்பான கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. பெரும்பாலும் 'வெள்ளாளன்' என்றே குறிக்கப் பெறுகின்றனர். 'வெள்ளாளர் சாத்தந்தைகளில் வீரசோழக் காமிண்டன்' என்பது போல குலப்பெயருடன் பெரும்பாலும் குறிக்கப் பெறுவர். ''காடைகளில் ஆடன் புளியனான உத்தமசொழ மும்முடிப்பல்லவரையன்'' போன்றோர் அரசனால் சிறப்புப் பெற்ற அதிகாரிகளாக இருக்கக்கூடும். ''உமயாண்டான் மனைக்கிழத்தி வாமதேவன் மகள் பிள்ளையம்மை'' எனக் கொடையளித்த பெண்கள் சிலர் கணவன் பெயரையும் தந்தை பெயரையும் இணைத்து கொண்டனர்.

## நரம்பர்

இவர்கள் கொங்கு வேளாளரில் ஒரு பிரிவினர். கணவாளர், வடகரையார் என்றும் அழைக்கப்பெறுவர். வெள்ளாளர் கணவாளரில்

செட்டி பிள்ளையப்பன் புகழ் இலக்கியங்களிலும் கல்வெட்டுக்களிலும் காணப்படுகிறது. அந்தியூர், பெருந்தலையூர்க் கல்வெட்டுக்கள் இவர்களை 'நாட்டுக்காமிண்டன்' என்று அழைக்கிறது. பவானி, கோபி வட்டத்தில் பரவியுள்ளனர். அது வடகரைநாடு, காஞ்சிக்கோயில் நாட்டுப் பகுதியாகும். பாரியூர் இவர்கள் முதன்மைக் காணியூர்.

### படைத்தலையர்

கொங்கு வேளாளர்களில் பொருளந்தை, சாத்தந்தை, மணியன், ஈஞ்சன், பூமன், புள்ளந்தை, மேதி, பயிரன், வாணி, சாத்துவாயர், வாணன் முதலிய பதினொரு குலத்தவர்கள் படைத்தலைவர் ஆகித் தனிப் பிரிவாயினர். ''வெள்ளாளன் படைத்தலையரில் நேரிய மூவேந்த வேளான்'' என்பது போலப் பெயர்கள் குறிக்கப்பெறும். இவர்களில் வாரணவாசி விசயநகர காலத்தலைவர். உலகுடையான் கோவை இலக்கியம் பாடப்பட்டவர். விசயமங்கலம் பகுதியில் காணிகொண்டவர்கள்.

### நாட்டார்

கொங்கு வேளாளரில் கண்ணன், விழியர், செல்லன், பண்ணை, மணியன் ஆகிய ஐந்து குலத்தார் காவிரிக்குக் கிழக்கே சென்று நாட்டு நிர்வாகம் செய்ததால் நாட்டார், நாட்டுக் கவுண்டர் எனப்பட்டனர். இவர்கள் பெரும்பாலும் நாமக்கல் மாவட்டத்தில் வாழ்கின்றனர். ஈரோடு மாவட்டத்திலும் சிலர் உள்ளனர்.

### திருவெம்படியர்

இறைவனுடைய உருவங்களைத் தாங்கியும் இறைபணியும் செய்த கொங்கு வேளாளர்கள் 'திருவெம்படிவக்கவுண்டர்' எனப்பட்டனர். ''திருமுடிக்கவுண்டர்'' எனவும் மக்கள் அழைப்பர். இவர்கள் காடை முதலிய ஏழு பிரிவினை உடையவர்கள் கொடுமுடி இவர்கள் முதன்மைக் காணியூர்.

### குறும்பர்

குறும்பக் கவுண்டர்களைச் சிலம்பூர்க் கல்வெட்டு ''காணியுடைய குறும்பர்'' என்று குறிக்கிறது. ''கொங்கில் குறும்பு'' என்று அழைக்கப்

படும் குறுப்பு நாடு இவர்கள் பெயரில் ஏற்பட்டது என்பர். 'குறும்பை ஆடு' என்ற பெயர் இருப்பதும் இவர்கள் தொடர்புடையதாக இருக்க லாம்.

### முடவாண்டிகள்

பூந்துறை வாரணவாசிக் கவுண்டர் பூந்துறை நாட்டுச் சத்திமங்கலம் (கஸ்பாபேட்டை) முடவர் காப்பு நிலையம் ஏற்படுத்தினார். அங்கு வாழ்ந்த கொங்கு வேளாளர்களின் வழியினர் முடவாண்டிகள் எனப் பட்டனர். இவர்கள் 'முடவாழ்நர்' எனவும் அழைக்கப்படுவர்.

### வேட்டுவர்

காளத்தி மலைப்பகுதியைப் பூர்வீகமாகவும் கண்ணப்ப நாயனா ரைக் குல முதல்வராகவும் கொண்டவர்கள். காட்டுப் பகுதியில் வேட் டைத் தொழில் புரிந்து வாழ்ந்த கொங்கின் பூர்வீகக் குடிகள். இவர் களில் பூவிலுவர், மாவுலவர், காவுலவர், வேடர், வேட்டுவர் என ஐந்து பிரிவுகள் உண்டு. குருகுலர், வாழரச மணவாளர் எனவும் அழைக்கப் பெறுவர். இவர்கள் சபை 'பூலுவ நாடு' எனப்பட்டது. இவர்களில் பலர் ஊராளிகள் எனப்பட்டனர். பல செப்பேடுகள் இவர்களைக் குறிக்கும்.

வேட்டுவர்களுக்கும் வேளாளர்களுக்கும் ஏற்பட்ட பல மோதல்கள் வேட்டை, வேளாண்மை முதலிய தொழில்பற்றி எழுந்த போராட்டமே தவிர இனமோதல் இல்லை. கொடிவேரி, ஒலகடம், பட்டிலூர், திங்களூர், அறச்சலூர் போன்ற இடங்களில் வேட்டுவர்கள் கல்வெட்டுக்கள் உள்ளன.

### செங்குந்தர்

படைத்தலைமை கொண்டும் (கைக்கோளப்படை) கோயில் குடிகளாக வாழ்ந்தும் (பொற்கோயில் கைக்கோளர்) நெசவுத் தொழிலை மக்கள் மானங்காக்கும் புனிதத் தொழிலாக மேற்கொண்டவர்கள். காமாட்சியம்மன் சிலம்பில் பிறந்து வீரபாகு படையில் முதல்வராக விளங்கியதால் 'முதலியார்' என்ற பட்டப்பெயர் பெற்றவர்கள். விசய மங்கலம், குன்னத்தூர், பிரமியம் போன்ற ஊர்களில் இவர்கள் கல் வெட்டுக்கள் பல உள்ளன. செப்பேடுகளும் உள்ளன.

## நாடார்

நாடாழ்வார், சான்றார், முகப்பர் என்ற சிறப்புப் பெயர்களே இவர்களின் நாடார், சாணார், மூப்பர் என்ற பெயராயின. பிற்காலத்து மரமேறும் தொழில் புரிந்தனர். பூந்துறை, கருமாபுரம், பெருந்துறை போன்ற இடங்களில் நாடார் மடங்கள் உள்ளன. குல குருவும் உள்ளனர். ஈழமும், இலங்கையும் கொண்டவர்கள் போன்ற பல சிறப்புக்கள் இவர்களுக்கு உண்டு. 'வெள்ளைக் குடையும்' ''வெண் சாமரமும் உடையவர்கள்'' என்று கோசணம் செப்பேடு கூறுகிறது.

## சிவபிராமணர்

சோழர் காலத்தில் சோழநாட்டிலிருந்து சோழர்களால் கொங்கு நாட்டில் குடியேற்றப்பட்டுக் கோயில் காணி பெற்றவர்கள். கொங்குச் சோழர்கள், கொங்குப் பாண்டியர் காலத்தில் இவர்கள் கொங்குக் கோயில்களில் உரிமையாளர்களாக விளங்கினர். கொங்குச் சமுதாயங் களுக்கு குருக்களாகவும் திருமடங்களின் தலைவர்களாகவும் விளங் கினர். இன்றும் இவ்வழக்கம் மறையாமல் உள்ளது.

## வணிகர்கள்

ஐநூற்றுவர், பனிரண்டார், நகரத்தார், வைசியர், 24 மனையார், தேவாங்கர், கொங்குச்செட்டி போன்ற பலபிரிவினர் இவர்களுக்குள் உண்டு. தலைச்சுமை, எருத்துப் பொதி, அங்காடி, சந்தை ஆகியன மூலம் வணிகம் செய்தனர்.

## கம்மாளர்

விசுவகர்மா என அழைக்கப்படும் இவர்கள் தட்டார், கொல்லர், கன்னார், தச்சர், சிற்பியர் என ஐவகைப் பிரிவினர். ''பஞ்சகம் மாளர்'' என அழைக்கப்படுவர். ஆசாரி என்ற பொதுப்பெயரும் உண்டு (ஆச்சாரி). இவர்கள் பத்துவகையான கோயில் பணி செய்து 'தச்சா சாரிய'க் காணிகள் பெற்றுள்ளனர். (தசக்கிரியை), கோயில் கட்டுதல், அணை கட்டுதல், உழவு கருவிகள் செய்தல் ஆகிய முக்கியத்துவத்தால்

பல உரிமைகளைப் பெற்றனர். வெள்ளோடு கம்மாளர்கள் இலக்கியம் பெற்றவர்கள்.

### குடும்பர்

மல்லிகுந்தம் பட்டயம் இவர்களை ''தேவேந்திரப்பள்ளர்'' என்று குறிப்பிட்டு இவர்கள் வெள்ளைக்குடை, வெண்சாமரம் உடையவர்கள் என்று கூறுகிறது. வேளாண்மையில் தேர்ந்த இவர்கள் ''நெல்லின் மக்கள்'' எனப்பட்டனர். மள்ளர் எனவும் அழைக்கப்படுவர். இவர் களுக்கு 'பண்ணாடி' பட்டமும் உண்டு. அரசனால் உயர் பட்டம் பெற்ற இவர்கள் ஊராளிகளாகவும் இருந்துள்ளனர். குண்டடம், கீரனூரில் இவர்கள் கல்வெட்டுக்கள் உள்ளன. பெண்கள் 'குடுமிச்சி' எனப்படுவர்.

### வேட்கோவர்

'மண்ணுடையார்' எனக்குறிக்கப்படும் இவர்களை ஆவணங்கள் 'கொங்குத் திருநீலகண்டர்' என்றும் குறிக்கிறது. சில நாடுகள் தங்களுக்குக் காணியுரிமையுடையதாகப் பெருந்தலையூர், முத்தூர்க் கல்வெட்டுக்களில் கூறுகின்றனர். மதுக்கரைப் பட்டயம் இவர்களுக்கு எல்லாச் சமுதாயமும் கொடுக்க வேண்டிய தொகை, பொருள் பற்றிக் குறிப்பிடுகிறது.

### பண்டாரம்

கோயில் பூசைகளை மேற்கொள்ளும் இவர்கள் 'ஆண்டிகள்' எனவும் குறிக்கப்படுவர். உவச்சாண்டி, கோவணாண்டி என இரு பிரிவினர் உண்டு. இடைக்காலத்தில் கோயில் பணியாளர்களாகக் குறிக்கப்பட்ட உவச்சர், கோவணர் ஆகியோர் இவர்கள் முன்னோர் களாக இருக்கலாம். குறுப்பாண்டி என்போரும் உண்டு.

### நாவிதர்

மருத்துவ குலத்தார் என்று அழைக்கப்படும் இவர்கள் 'மங்கலன்', 'குடிமகன்' என்றும் கூறப்படுவர். கொங்கு வேளாளர் திருமணங்களில்

'மங்கல வாழ்த்து' பாடும் உரிமை இவர்களுக்கு உண்டு. வேளாளர் 'ஏர்' வரி கொடுத்தது போல இவர்களும் 'அடப்பவரி' கொடுத்துள்ளனர்.

**வன்னியர்**

கன்னிவாடிப் பட்டயத்தில் இவர்கள் ''பள்ளிவெள்ளாளன்'' என்று குறிக்கப்படுகின்றனர். அம்மரபில் 'கோபாலகவுண்டர்' பெயர் குறிக்கப்பெறுகிறது. அவர் நாட்டாண்மைக்காரராக இருந்துள்ளார். வன்னிய கவுண்டர், வன்னியகுலக் கட்டிக்கவுண்டர் ஆகியோர் ஆவணங்களில் கையொப்பமிட்டுள்ளனர்.

**இடையர்**

'கோன்' என அழைக்கப்படும் இவர்கள் கால்நடை மேய்ச்சலில் ஈடுபட்டவர்கள். இவர்கள் சபைக்கு 'திருவாய்ப்பாடி நாடு' என்று பெயர். கி.பி. 922இல் முதல் பராந்தகனின் ஈரோட்டுக் கல்வெட்டில் அச்சபை குறிக்கப்படுகிறது.

**வாணியர்**

எண்ணெய் உற்பத்தியில் ஈடுபட்ட இவர்கள் விளக்கெரிக்க எண் ணெய் கொடுத்துள்ளனர். விளக்குக் கொடைகள் பெரும்பாலும் அனைத்தும் பொற்காசுகளே ஈரோடு மாவட்டத்தில் கொடுக்கப்பட் டிருப்பதால் 'விளக்கெரிப்பதில் இவர்கள் பங்கு மிக அதிகம்'. இவர்கள் சபை 'வாணிய நகரம்' எனப்படும். இவர்கள் 'மாயிலட்டி' பட்டம் பெற்றவர்கள்.

**தேவர்**

தென் பாண்டிய நாடு வாசுதேவ நல்லூரிலிருந்து வெளியேறிய அகம்படியத் தேவரில் குருலிங்கராசாவின் மூத்தமகன் சங்கரலிங்க ராசா தலைமையில் கொங்கு நாடு வந்து தாராபுரம், காடையூர், காங்கயம் வழியாகப் பரவி வாழ்ந்தனர். பழைய கோட்டைப் பட்டக் காரருக்கு உதவி அவர்கள் காணியான கொடுமணல் காணியைப் பெற்றனர். நொய்யல் அணையைப் பழுது பார்த்தவர்கள்.

### கருணீகர்

பெரும்பாலும் கணக்கர்களாகப் பணிபுரிந்த இவர்கள் சோழிய வேளாளர் என்று குறிக்கப்பட்டுள்ளனர். பிள்ளைப்பட்டம் இவர்களுக்கு உண்டு. ஆலயத் திருப்பணிகளும் வேளாளரோடு இணைந்து செய்துள்ளனர்.

### உப்பிலியர்

கற்பூரச் செட்டியார் என அழைக்கப்படும் இவர்கள் உப்புக் காய்ச்சும் தொழிலில் ஈடுபட்டிருந்தனர். பூந்துறையில் இவர்கள் சமூகக்கூட்டம் கூட காடைகுல அழைப்பிச்சாக்கவுண்டர் நியாய மேடை அமைத்துக் கொடுத்துள்ளார்.

### நாயக்கர்

விசயநகரார், மதுரை நாயக்கர் காலத்தில் படைவீரர்களாகவும், ஆட்சியாளர்களாகவும் விளங்கியவர்கள். இவர்கள் பெயரில் பல பாளையப்பட்டுக்களும் ஊர்களும் உள்ளன.

### ரெட்டியார்

உழவுத்தொழிலை மேற்கொண்டவர்கள். மாவட்ட வளர்ச்சிக்குப் பாடுபட்ட இவர்கள் சமூக இதழுக்கு 'ஏர்முனை' என்றே பெயர்.

இன்னும் ஒட்டர், பறையர், குறவர், மாதாரி, தோட்டி போன்ற பல சமூகத்தினர் ஈரோடு மாவட்டத்தில் சிறப்பாக சமூக ஒற்றுமையுடன் வாழ்ந்து வருகின்றனர். பிற மாநில மக்களும் உள்ளனர்.

❊❊❊

# 41. காணத்தக்க இடங்கள்

**பவானி கூடுதுறை**

காவிரி, பவானி, கண்ணுக்குத் தெரியாமல் அமுத நதி மூன்றும் கூடும் இடம். தென்னகத்தின் ''திரிவேணி சங்கமம்''. சம்பந்தர் பாடல் பெற்ற கோயில். கிரகண காலத்தில் இங்கு நீராடுவது சிறப்பு என்பர்.

**பவானி கலெக்டர் மாளிகை**

1799-1804 ஆண்டுகளில் கலெக்டர் மேக்ளியாட், வில்லியம் கேரோ தங்கிய பழைய மாளிகை. இன்றும் நல்ல நிலையில் உள்ளது.

**தந்தக்கட்டில்**

கலெக்டர் வில்லியம் கேரோ பவானிக் கோயிலுக்கு 11.1.1804ல் கொடுத்த தந்தம் போர்த்த கட்டில் பவானி சிவாலயம் அம்மன் பள்ளி யறையில் உள்ளது.

**காலிங்கராயன் அணை**

1282இல் காலிங்கராயன் பவானி காவிரியோடு கலக்கும் இடத்தில் கட்டிய அணை, அணைத் தோப்பு. பவானி அருகில் உள்ளது.

**பவானி சாகர் அணை**

உலகின் மிகப்பெரிய மண் அணை. 1954இல் கட்டி முடிக்கப் பட்டது. சத்தியமங்கலத்தில் மேற்கே 25வது கிலோ மீட்டரில் உள்ளது.

**கொடிவேரி அணை**

உம்மத்தூர்த் தலைவன் நஞ்சராயன் கட்டிய அணை, அணை யிலிருந்து இரண்டு புறமும் கால்வாய்கள் (அரக்கன் கோட்டை, தடப்பள்ளி) உள்ளன.

**கொடுமுடி**

தேவார மூவரும், மாணிக்கவாசகரும் பாடிய தலம். நடராசரின் சதுரநடன படிமம் சிறப்பு வாய்ந்தது.

**திண்டல் மலை**

வேலாயுதசுவாமி கோயில். மலைப்பாதை உள்ளது. கோவையிலிருந்து வரும் வழியில் ஈரோட்டின் நுழைவாயிலில் உள்ளது.

**சிவமலை**

அருணகிரியார் பாடிய முருகன் கோயில். சித்தர், சிவவாக்கியர் சமாதி உள்ளது. மலைப்பாதை உள்ளது.

**சென்னிமலை**

அருணகிரியார் பாடிப் படிக்காக பெற்ற தலம். முருகன் கோயில், பிண்ணாக்குச் சித்தர் குகை உள்ளது. மலைப்பாதை உள்ளது.

**வட்டமலை**

காங்கயம் - தாராபுரம் வழியில் உள்ள முருகன் கோயில். சிறுமலை.

**பவளமலை**

கோபிசெட்டிபாளையம் அருகில் உள்ள சிறு குன்று. முருகன் கோயில் உள்ளது.

**பாரியூர்க் கோயில்கள்**

முழுவதும் சலவைக்கற்களால் திருப்பணி செய்யப்பட்ட மிகச் சிறந்த அமரபரணீசுவரர் கோயில். கொண்டத்துக் காளியம்மன் கோயில் அருகில் உள்ளது.

**அருள் மலை**

திங்களூர் அருகில் உள்ள முருகன் கோயில். நஞ்சையப் புலவர் 1000 திருப்புகழ் பாடிய இடம்.

**அப்பிச்சிமார் மடம்**

திங்களூர் அருகில் உள்ளது. வேட்டுவர் சமூகப் பட்டக்காரர் ஊர். திங்களூரில் புஷ்பதந்த *தீர்த்தங்கரர் சமணக்கோயில்* உள்ளது.

**பண்ணாரியம்மன் கோயில்**

சத்தியமங்கலம் அருகில் உள்ள புகழ்பெற்ற மாரியம்மன் திருக்கோயில்.

### நட்டாற்றீசுவரன் கோயில்

சாவடிப்பாளையம் புகை வண்டி நிலையத்தின் கிழக்கே காவிரி நடுவே உள்ள சிவாலயம்.

### ஊதியூர் மலை

கொங்கணச் சித்தர் வாழ்ந்த இடம். முருகன் கோயில் உள்ளது.

### கதித்த மலை

ஊத்துக்குளி அருகேயுள்ள முருகன் கோயில், அருணகிரியார் குறிப்பிட்ட தலம்.

### நாட்டராயன் கோயில்

வள்ளியறச்சல் கிராமத்தில் மாந்தபுரம் அருகேயுள்ள மிகப் பழைய கோயில. சேரன் மாந்தரஞ்சேரல் அமைத்த கோயில்.

### வீரக்குமாரசாமி கோயில்

வெள்ளகோயிலில் உள்ள சிறப்பான கோயில்

### செல்லக்குமாரசாமிகோயில்

முத்தூர் அருகே சின்னமுத்தூரில் உள்ள திருக்கோயில்

### விசயமங்கலம்

மிகப்பெரிய சமணக்கோயில். சந்திரப்பிரப தீர்த்தங்கரர் கோயில். கொங்கு வேளிர் வாழ்ந்த ஊர். அவர் சிலையும் உள்ளது.

### சீனாபுரம்

விஜயகிரி வேலாயுதசாமி கோயில். மமுட்டித் தோப்பில் ஆதிநாதர் சமணக்கோயில் உள்ளது.

### சர்க்கார் பெரியபாளையம்

தேவார வைப்புத்தலம். சிற்பக்கலையில் மிகச்சிறந்த கொங்குக் கோயில்.

### வெள்ளோடு

பெரிய குளத்தில் பறவைகள் சரணாலயம். ஆதிநாதர் சமணக் கோயில் உள்ளது. காலிங்கராயன் சிலை இங்கு அமைக்கப்பட்டுள்ளது.

**ஆப்பக்கூடல்**

சக்தி நகரில் சக்தி சர்க்கரை ஆலை; பெரிய ஏரி உள்ளது.

**ஆலத்துக்கோம்பை**

பண்ணாரியம்மன் சர்க்கரை ஆலை உள்ளது.

**தவளகிரி**

சத்தியமங்கலம் அருகில் உள்ள முருகன் கோயில். விஜயநகரக் காலத் திருப்பணி செய்யப்பட்ட கோயில். சிலப்பதிகாரம் கூறும் வெண்குன்று.

**பழமங்கலம்**

பாடல் பொறிக்கப்பட்ட தென்னகத்தின் ஒரே நடுகல் இங்கேயுள்ளது.

**பழைய கோட்டை**

அரண்மனை; புகழ்பெற்ற காங்கயம் காளைகள் உள்ள கால்நடைப் பண்ணை உள்ளது.

**பெரியார் – அண்ணா நினைவகம்**

ஈரோடு நகரில் பெரியார் சாலையில் உள்ளது. அரிய புகைப் படங்கள் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

**தீரன் சின்னமலை நினைவு மண்டபம்**

ஓடா நிலையில் உள்ளது. அரசு அமைத்த நினைவுச் சின்னம். சின்னமலை கோட்டை இருந்த இடம்.

**மேலப்பாளையம்**

தீரன் சின்னமலை பிறந்த ஊர். பெரிய விநாயகர் கோயில். சின்னமலை சமுதாயக்கூடம் உள்ளது.

**ஈரோடு**

வ.உ.சி. பூங்கா; கலைமகள் பள்ளி அருங்காட்சியகம், அரசு அருங்காட்சியகம்; காரைவாய்க்கால் அருகே பெரும்பள்ளம் - காலிங்கராயன் பாலம் (13ஆம் நூற்றாண்டு) மகிமாலீசுவரர் கோயில் - 10ஆம் நூற்றாண்டு சுதைத் திருப்பணி.

## பிரப் நினைவாலயம்

ஈரோட்டில் சி.எஸ்.ஐ. தேவாலயம் கட்டிடக் கலை நயம் மிக்கது.

## ஷேக் அலாவுதீன் தர்கா

ஈரோடு காவிரிக்கரையில் உள்ளது. 18ஆம் நூற்றாண்டு மைசூர் மன்னர் கல்வெட்டு உள்ளது.

## திம்பம்

இனிய மலைக்காட்சி காணத்தக்கது.

## இராமலிங்கம் சேனடோரியம்

பெருந்துறையில் உள்ளது. மருத்துவக்கல்லூரியும் உள்ளது.

## கொடுமணல்

ஒரத்துப்பாளையம் அணை; தொல்பொருள் அகழாய்வு செய்யப்பட்ட இடம்.

## அறச்சலூர்

சமணமுனிவர் வாழ்ந்த குகை. இசைக் கல்வெட்டு உள்ளது. 1800 ஆண்டுகட்டு முற்பட்டது.

## கோபி

சீதா கல்யாண மண்டபம். ஒரே சமயம் 5 திருமணங்கள் நடைபெறலாம் (இலவசம்)

## தாளவாடி

திப்புசுல்தான் கட்டிய பள்ளிவாசல் உள்ளது.

❊❊❊

# 42. ஈரோடு மாவட்டத்தின் இணையற்ற சிறப்புக்கள்

1. இருபது இலட்சம் ஆண்டுகட்கு முற்பட்ட தொல்லுயிரி எச்சங்கள் (FOSSILS) காணப்படுவது.
2. 2000 ஆண்டுகட்கு முற்பட்ட பெருங்கற்படைச் சின்னங்கள் மிக அதிகமாகக் காணப்படுவது.
3. கி.மு. 3ஆம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் முதன் முதலில் சமணம் புகுந்தது.
4. தொல்காப்பிய விதிக்கும் இசைக்கலைக்கும் வட்டெழுத்துத் தோற்றத்திற்கும் சான்றான கி.பி.2ஆம் நூற்றாண்டு அறச்சலூர் தமிழ் பிராமி கல்வெட்டு இருப்பது.
5. சங்க காலத்தில் கால்நடைச் செல்வம் மிகுதியாக இருந்தது.
6. வண்ணக் கல்மணிகள் உருவாக்கியது. உரோமானியர்கள் வாங்கிச் சென்றது.
7. பிளினி பாராட்டியுள்ள கொங்கு நாட்டின் வைரச் சுரங்கம் இருந்த படியூர் இருப்பது.
8. தமிழில் முதல் மொழி பெயர்ப்புக் காப்பியம் பெருங்கதை உருவானது.
9. விசயமங்கலத்தில் தமிழ்ச்சங்கம் இருந்தது.
10. ஏழாம் நூற்றாண்டிலேயே கொங்கு வீரர்கள் தொண்டைநாடு சென்று போரிட்டது (கொங்கத்து எழுமாத்தூர் இருந்து வாழும் சாகாடைச் சிற்றன்).
11. நடுகல்லில் பெயரும் பெருமையும் ''வெண்பா'' வடிவில் இருப்பது (பழமங்கலம்).
12. தமிழ்நாட்டில் தொன்மையான நினைவுக்கல் இருப்பது (பர்கூர், ஈரெட்டி மலை).

13. கன்னிவாடிக் கல்வெட்டில் 'ஆநிரை' என்ற சொல் வருவது.
14. கோயிலுக்குக் கால்நடைக் கொடை கொடுக்காதது.
15. 'ஸ்வஸ்திஶ்ரீ' என்ற மங்கலச் சொல்லுக்குப் பதிலாக 'சுவத்திசீ' என்று ஒலிபெயர்ப்பும், 'நன்மங்கலஞ் சிறக்க' என்ற தமிழ்மொழி பெயர்ப்பும் எழுதப்பட்டிருப்பது.
16. தமிழ்நாட்டில் எல்லா அரசர்களும் 'மனுநீதிப்படி' ஆட்சிபுரிந்த தாகக் கூற, இம்மாவட்டத்தலைவர்கள் ''வள்ளுவர் உரைத்த முப் பால் மொழியின்படியே'' அரசு புரிந்ததாகக் கூறுவது.
17. வழக்கத்திற்கு மாறாக மேலிருந்து கீழாக இல்லாமல் கீழிருந்து மேலாகக் கல்வெட்டைப் பொறித்திருப்பது (அறச்சலூர், திங்க ளூர்) மற்றும் கல்வெட்டில் ஆய்த எழுத்து இருப்பது (அஃகம்).
18. சிலப்பதிகாரத்திற்கு முதலில் அரும்பத உரையும் விளக்க உரை யும் எழுதியது (அடியார்க்கு நல்லார், நிரம்பை)
19. தூக்குத்தண்டனை கூடாது என்று (தலைவிலை) நாட்டுச்சபை முடிவு செய்தது.
20. மிகுதியான சந்தன மரங்களும் காடுகளில் மிகுதியான யானை களும் இருப்பது.
21. கி.பி. 3ஆம் நூற்றாண்டு முதல் 1804வரை தொடர்ந்து எல்லா அரசர்களுக்கும் தாராபுரம் தலைநகராக இருந்தது.
22. கணக்கு மேதை சீனிவாச ராமானுஜம் பிறந்தது.
23. முதல் மூன்று காங்கிரஸ் மாநாடுகளில் கலந்து கொண்டு அம் மாநாடுகளின் வரலாறும் எழுதிய பகடால நரசிம்மலு நாயுடு பிறந்தது.
24. உலகப் புகழ் டென்னிஸ் வீரர்கள் அமிர்தராஜ் சகோதரர்கள் ஊர் உள்ளது.
25. மகாத்மா காந்தியடிகள் உயிரோடு இருக்கும் போதே அவருக்கு இருமுறை சிலை வைத்தது.

26. காலிங்கராயன் அணை கட்டி, வாய்க்கால் வெட்டி பவானி, நொய்யல், அமராவதி ஆறுகளை இணைக்க முற்பட்டது. கீழே பள்ளமும் மேலே வாய்க்காலும் ஓடுமாறு பாலம் கட்டியது.

27. குரங்கன்பள்ளம் கொம்பணையில் பள்ளத்தின் கீழ்ப்பாலத்தில் காலிங்கராயன் கால்வாய் செல்லுவது.

28. காவிரித்தோற்றத்தின் அரிய சிற்பம் இருப்பது (சாத்தம்பூர்).

29. கொங்கு நாட்டின் நான்கு பட்டக்காரர்களும் இருப்பது.

30. வடதமிழ்நாட்டில் முதல் விடுதலை வீரன் தீரன் சின்னமலை (17.4.1756 - 31.7.1805) பிறந்தது.

31. உலகின் மிகப்பெரிய மண் அணை இருப்பது (கீழ்பவானி அணை)

32. தந்தை பெரியாரைத் தந்தது.

இன்னும் பலப்பல.

❊❊❊




ஈரோடு மாவட்டம்

வட்டங்கள்



ஈரோடு மாவட்ட ஆட்சியர் அலுவலகம்



கொடுமணல் அகழாய்வில் புலி



கொடுமணல் அகழாய்வில்
சங்குப் பொருட்கள்



கொடுமணல் ரோமானிய சுடுமண் பொம்மை



நடுகல்



தலைப்பலி நடுகல்



புலிப்போர் நடுகல்; சதிக்கல்



பவானி சிவாலயம்



விசயமங்கலம் சமணக்கோயில்
முன் கோபுரம்



விசயமங்கலம் சமணக்கோயில்



ஹைதர் அலி



திப்பு சுல்தான்



பவானிசாகர் அணை



சக்தி சர்க்கரை ஆலை, சக்தி நகர்
(ஆப்பக்கூடல்)



ஈரோடு காரைவாய்க்கால் பாலம்
(கி.பி.1282)



நல்லதம்பிச் சர்க்கரை உத்தமக்காமிண்ட மன்றாடியார்
(பழைய கோட்டைப் பட்டக்காரர்)



காங்கயம் காளை



காலிங்கராயன்



திருப்பூர் குமரன்



தந்தை பெரியார்
(ஈரோடு நகராட்சித் தலைவராக)



‘தொண்டு செய்து பழுத்த பழம்
தூய தாடி மார்பில் விழும்’
தந்தை பெரியார்



பெரியார் மாளிகை

உள்நாடுவருட சந்தா ரூ. [illegible]-0-
வெளிநாடு „ ரூ. 5-0-

R. No. M. 2041 "KUDI-ARASU" தனிப்பிரதி விலை ஒரு அணா

# குடி அரசு

1924-ல் ஸ்தாபிக்கப்பட்டது.

எப்பொருள் யார் யார் வாய்க்கேட்பினும்
அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு.

ஞாயிறுதோறும் வெளிவரும்.
ஆசிரியர்: ஈ. வெ. கிருஷ்ணசாமி.

எப்பொருளெத்தன்மைத்தாயினும்
அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு.

| | | |
|---|---|---|
| மாலை 11. | ஈரோடு, தாது-வருஷம் ஆனி-மீ 22-உ (5—7—1936) | மலர் 47. |

தந்தை பெரியார் இதழ்




பெரியார் ஈ. வெ. ரா. அவர்களால் 1935 மே திங்களில் துவக்கப்பட்ட 'பகுத்தறிவு' மாத இதழ்—முகப்பு அட்டை

Price One Anna.

Annual Subscription :—
Inland: Rs. 4.
Foreign: Rs. 5, 8 sh., $ 2.

Reg. No. M. 2426

Edited by
E. V. Ramasami

# Revolt

Published Every Sunday.

VOL. 2. ERODE, 19th JANUARY 1930. NO. 3.

## NOTES AND NEWS.

### An Inter-Caste

### NEVER-NEVER GIRLS.

Twenty young women who have sworn never to wed have formed themselves into the "Never, Never Club," the one and only rule

பெரியார் நடத்திய இதழ்




ராஜேஸ்வரி டாக்கீஸாரின் ''தேசிங்கு ராஜன்''
ஈரோட்டில் எடுத்த திரைப்படம்



கொடுமணலில்
ஆய்வு செய்யப்பட்ட கல்லறை



கே.பி. சுந்தராம்பாள்



யூ.ஆர். ஜீவரத்தினம்

